# இராமாயணச் சுருக்கம்

(கம்பராமாயணத்துச் சில பாட்டுக்களுடனும
அவற்றின் உரையுடனும் பதிக்கபபட்டது)

தொகுத்தவர் .

ஆ. வ. பட்டாபிராமன், B. A.,

சிகிந்திராபாத்





பதிபபாளர் :

ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்.

சென்னை 1.

# அணிந்துரை

"கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ"

"தொல் லிலங்கை கட்டழித்த ! சேவகன்சீர் கேளாத
செவிஎன்ன செவியே !"

இராமர் உலகத்தாருக்கு எடுத்துக்காட்டாய் விளங்கும் உத்தமபுருஷர். அவரது சரிதத்தை முதன்மையாகக் கொண்டு எல்லா அறங்களையும் அமைத்து இயற்றப்பட்ட காவியம் இராமாயணம். அது முதன்முதலில் வால்மீகி முனிவரால் வடமொழியில் இயற்றப்பட்டது. பின்னர், நம்நாட்டு மொழிகள் எல்லாவற்றிலும் எழுதப்பட்டது. இப்போது உலகத்தில் சிறப்பாயுள்ள எல்லா மொழிகளிலும் இராமாயணம் உளது. அண்மைக்காலத்தில் ரஷிய மொழியிலும் எழுதப்பட்டுளதன்றே !

இராமசரிதம் உலகத்தில் பற்பல நாடுகளில் வழங்குகின்றது. இந்துக்கள் அல்லாதவரும் இராமசரிதத்தைப் பாடியும் ஆடியும் பாராட்டி வருகின்றனர். பிறசமய நூல்களிலும் இராமசரிதம் இடம் பெற்றுள்ளது. இவற்றால், இராமசரிதம் சாதிவேறுபாடு சமயவேறுபாடு தேசவேறுபாடு இன்றி எல்லாராலும் போற்றப்பட்டு வருதல் புலனாகும்.

நமது தமிழ்மொழியில் கவிச்சக்கரவர்த்தி கம்பரால் இயற்றப்பட்ட இராமாயணமே அறிஞர் அனைவராலும் பாராட்டப்படுகின்றது.

"கம்பநாடர் கவிதையிற்போல
கற்ருேர்க்கிதயம் களியாதே"

என்பது அனுபவவாக்கு.

கம்பராமாயணம் பதிஞயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களை உடையது. ஆகலின், காப்பியம் முழுவதையும் படித்து இன்புறுதல் எல்லார்க்கும இயலாததொன்று. அதனல் இராமாயணச் செய்யுட்களுட் சிலவற்றையாவது எல்லாரும் படித்து இன்புறல் வேண்டும் என்னுங் கருத்துக் கொண்டு, ஸெக்கந்தராபாத்தில் வாழ்ந்திருக்குந் திருவாளர் ஆ. வ. பட்டாபிராம முதலியாரவர்கள் கதைத் தொடர்பு அமைய, சிறந்த செய்யுட்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கு எளிய நடையில் பொருள எழுதி ஒரு சிறு புத்தகத்தை வெளியிட்டார்கள். செய்யுட்கு நேரான பொருளை முதலின் படிப்பவர், செய்யுளை எளிதிற படித்துப பொருளுணர்தல் கூடும்.

தமிழ்மொழி வழக்காற்றில் இல்லாத நாட்டில் வாழ்ந்திருக்கும் முதலியாரவர்கட்குத் தமிழில் உள்ள பற்றும் கம்பர் செய்யுட்களில் உள்ள ஆர்வமும் எல்லாராலும் பாராட்டப்படுதற்கு உரியன. தமிழமக்கள் இப்புத்தகத்தைப் படித்துப் பயனடைவார்களாயின் அதுவே திரு. முதலியாரவர்கட்கு ஆற்றுங் கைம்மாறு ஆகும்.

திரு. முதலியாரவர்கள் இனிது நீடுவாழ்ந்து இன்னும் இத்தகைய புத்தகங்கள் பலவற்றைத் தமிழ் நாட்டுக்கு வழங்குமாறு இறைவன் அருள்புரிக!

V. வெங்கட்ராஜுலு ரெட்டியார்.

# முகவுரை

என் நண்பர் ஒருவர் தமக்காக இராமாயணக் கதையைச் சுருக்கமாக எளிய நடையில் எழுதிக் கொடுக்கும்படி கேட்க, அதற்கு இணங்கிய நான், மூன்று காண்டங்கள் எழுதிய பிறகு அவருக்கு அச் செய்தியைத் தெரிவித்தேன். அவர் 'கதை பூர்த்தியான பிறகு அதை அச்சிடலாமே' என்ருர். நான் சில நாட்கள் யோசித்துப் பிறகு அச்சிடுவதாயிருந்தால் அதில் கம்ப ராமாயணச் செய்யுட்களேயும், அவற்றின் உரையையும் சேர்த்தால், பலருக்கும் பயன்படுவதோடு, கம்பராமா யணமாகிய முதல்நூல் மூலத்தைப் படிக்கலாம் என்ற ஆவலும் உண்டாகும் என்று எண்ணி அச்சிடுவதற்கு உடன்பட்டேன்.

பாட்டுக்களுக்கு எழுதிய உரை கதையிலேயே சேர்க்கப்பட்டுள்ளது. அதனுல், கதையை மாத்திரம் படிக்க விரும்புவோர், நிறுத்தாமல் கதையைப் படித்துக் கொண்டு போகலாம்.

வழக்கத்துக்கு மாருக, உரை முதலிலும், பாட்டு அதன் பின்னும் அமைந்திருக்கிறது. இதற்குக்காரணம், உரை தெரிந்துகொண்டால், பாட்டு எளிதில் அர்த்த மாகும். அதனுல், பாட்டைப் படிக்கலாம் என்ற ஆசை உண்டாகும் என்பதே.

எழுதிய உரை பதவுரையுமல்ல; பொழிப்புரையு மல்ல. பாட்டுக்களில் உள்ள சொல்நயம், பொருள்நயம் முதலியவைகளேத் தெளிவாகக் காட்டுவது.

உரை எழுதுவதில் ஸ்ரீமான் வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர், ஸ்ரீமான் சே கிருஷ்ணமாசாரியர், ஸ்ரீமான் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் இவர்கள் எழுதிய உரைகள் மிகவும் உதவியாயிருந்தன.

பாட்டுக்கள் சந்தி பிரித்து அச்சிடப்பட்டிருக்கின்றன. முதல் தடவை இப்பாட்டுக்களைப் படிப்போர்க்கு இது பயன்படும் என்று நம்புகிறேன்.

யார் எப்படிப்பட்ட உரை எழுதினாலும், கம்ப நாட்டாழ்வார் எழுதிய பாட்டுகளுக்குச் சமானமாகாது. ஆகையால், சிறிது சிரமம் எடுத்துக்கொண்டு பாட்டுக்களைப் படிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன.

இதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயம ஒன்று. அதாவது: கதையோ இராமனுடைய கதை; எழுதினவரோ கவிச்சக்ரவர்த்தி கம்பநாட்டாழ்வார். ஆகையால், இவை இரண்டையே மனத்தில் வைத்துக் கொண்டு, என்னுடைய கலவிக்குறையைக் கவனிக்காது இப்புத்தகத்தைப் படிக்கும்படிக் கோருகிறேன்.

நான் பள்ளிக்குப் போவதற்கு முன்னமேயே, இராமாயணக்கதை முழுவதையும் எனக்குச் சொல்லிய என் தகப்பனுருடைய தாயாரான, ஸ்ரீமதி அம்மணி அம்மாளுக்கும், கம்பராமாயணத்தைப் படிப்பதில் எனக்கு ஊக்கம் அளித்த என் தகப்பனுர், திரு. ஆ. வரதராச முதலியாருக்கும், வாலாஜா உயர்தர கல்விச் சாலையில் இராமாயணச் செய்யுட்களைப் பண்ணுடன் பாடி எங்களை மகிழ்வித்த வித்வான் திரு. கமலநாத முதலியாருக்கும் என் நன்றியைச் செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

*சிகிந்திராபாத்*
*1–4–55.*

**ஆ. வ. பட்டாபிராமன்.**

# இராமாயணம்

## காப்பு

உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடை யார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சர ணுங்களே.

(உரை). *எல்லா உலகங்களையும் தாமே படைத்து, காத்து, அழிக்கும் முடிவில்லாத விளையாட்டை உடையவர் எவரோ, அவரே இவ்வுலகத்திற்குத் தலைவர். அவருக்கே நாம் அடைக்கலம்.*

வானின்று இழிந்து வரம்பு இகந்த மாபூதத்தின்
வைப்பு எங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும்
புறனும் உளன் என்ப
கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை
இழைப்ப, கோல் துறந்து
கானும் கடலும் கடந்து இமையோர் இடுக்கண்
தீர்த்த கழல்வேந்தை.

(உரை). கூனியாகிய மந்தரையும், அரசர் குலத்தில் பிறந்த மாற்ருந்தாயான கைகேயியும் தனக்குத் தீமை செய்ய, அதனுல் தான் பெற்ற இராச்சியத்தை இழந்து, காடுக்ளையும் கடலையும் தாண்டித் தேவர்களுடைய துன்பங்களைத் தீர்த்த இராம பிரானை, பரமபதத்தை விட்டு எல்லையில்லாத உலகங்களிலெல்லாம் உடலும் உயிரும் உணர்வும் போல, உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் இருக்கின்ற பரம்பொருள் என்று ஞானிகள் சொல்லுவார்கள்.

## அநுமார் துதி

அஞ்சிலே ஒன்று பெற்ருன் அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்று ஆறக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கை கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்று வைத்தான் அவன் எம்மை அளித்துக் காப்பான்.

(உரை). பஞசபூதஙகளுள ஒனருகிய வாயு தேவனுல் பெறப்பட்டு, பஞ்சபூதங்களுள் ஒன்ருகிய கடலை (நீரைத்) தாவி, பஞ்சபூதங்களுள் ஒன்ருகிய ஆகாய மார்க்கமாய இராகவனுக்காகத் தூது சென்று, பஞ்சபூதங்களுள் ஒன்ருகிய பூமிதேவி பெற்ற சீதாபிராட்டியைக் கண்டு வணங்கி, பகைவர் ஊராகிய இலங்கையில் பஞ்சபூதங்களுள் ஒன்ருகிய நெருப்பை வைத்தவரான அநுமார் எங்களைக் காப்பாராக.

3

## பயன்

நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழும் உண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங்கமலை நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு அழிய வாகை
சூடிய சிலை இராமன் தோள்வலி கூறுவோர்க்கே.

(உரை). *கணக்கற்ற இராக்கத சேனை சாம்பலா கும்படி அழித்து அவர்களை வென்று வாகைமாலை யைச் சூடிய இராமச்சந்திரனுடைய புஜபலத்தை எடுத்துப் பலருக்கும் சொல்லுபவர்க்கு, அவர்கள் வேண்டிய பொருள் கிடைக்கும ; ஞானமும புகழும் உண்டாகும் ; மோக்ஷத்தை அடைவதற்கு ஏற்ற வழியை உண்டாக்குகின்ற வாசனையுள்ள அழகிய தாமரைமலரில் வசிக்கும் மகாலக்ஷ்மி கடாக்ஷிப் பாள்*

# இராமாயணம்

## பாலகாண்டம்

——o——

சூரிய குலத்தில் பிறந்த தசரத சக்ரவர்த்தி என்பவர் கோசலநாட்டுத் தலைநகராகிய அயோத்தியில் அரசாண்டு வந்தார். அவருக்குக் கௌசல்யை, சுமித்திரை, கைகேயி என்ற மூன்று தேவியர் இருந்தார்கள். அநேக வருடங்கள் கழிந்தும் பிள்ளைகள் பிறக்காததனால் அவர் கவலையுற்றுத் தம்முடைய குலகுருவான வசிஷ்டமகரிஷியை அடைந்து, "எனக்குப் புதல்வர் இல்லாததனால் எனக்குப் பிற்பாடு இந்த இராச்சியம் துன்பம் அடையுமே என்னும் என் மனக்கவலையைத் தாங்கள் நீக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். அப்பொழுது வசிஷ்டருக்கு, சமீபத்தில் நடந்த விஷயம் நினைவுக்கு வந்தது.

அதாவது : இலங்கையில் அரசாண்டுவரும் இராவணனும் அவனைச் சார்ந்த இராக்கதர்களும் செய்யும் கொடுமையைப் பொறுக்க மாட்டாமல் தேவர்கள் பரமபதத்தில் இருக்கும் மகாவிஷ்ணுவைச் சரணமடைந்து தங்களைக் காப்பாற்றும்படி

வேண்டிக்கொள்ள, அப்பொழுது திருப்பாற் கடலின் நடுவில் ஆதிசேஷன்மேல் மலைபோலப் படுத்து யோகநித்திரை செய்யும் கரிய மேகம் போன்ற திருமால் "நல்லவரைக் கொலை செய்யும் அரக்கர்கள் செய்யும் கொடுமையை நான் தீர்ப்பேன்" என்று, வருத்தப்படும் தேவர்களுக்குச் சொன்ன விஷயம் வசிஷ்டரின் நினைவுக்கு வந்தது.

அலைகடல் நடுவண் ஓர் அனந்தன் மீமிசை
மலையென விழி துயில் வளரும் மாமுகில்
கொலை தொழில் அரக்கர்தம கொடுமை தீர்ப்பனென்று
உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை.

— பால : திரு அவதார : 6.

மேலும், திருமால் தேவர்களை நோக்கி, "நாங்கள் அயோத்தியில் ஆண்டுவரும் தசரத மகாராஜாவுக்குப் பிள்ளைகளாய்ப் பிறப்போம். நீங்கள் குரங்குகளாய் அவதரியுங்கள்" என்று கட்டளையிட்டார். அப்படியே அவர்களும் கிஷ்கிந்தையில் குரங்குகளாய்ப் பிறந்தார்கள். இதையெல்லாம் அறிந்த வசிஷ்டர் தசரதனைப்பார்த்து "உனக்குப் பிள்ளைகள் பிறக்க வேண்டுமானால் புத்திரகாமேஷ்டி யாகம் செய்ய வேண்டும். நீ கலைக்கோட்டு மகரிஷியை அழைத்து வந்து அவரைக்கொண்டு செய்வித்தால் உனக்கு விரைவில் பிள்ளைகள் பிறப்பார்கள்" என்றார்.

இதைக்கேட்டு மகிழ்ந்த தசரதர் உரோமபாத மகாராஜாவினிடத்தில் இருந்த ரிஷியை அயோத்

திக்கு அழைத்துவந்து அவரைக்கொண்டு யாகத்தை முடித்தார். அந்த யாககுண்டத்திலிருந்து ஒரு தேவதை புறப்பட்டு ஒரு பொற்கிண்ணத்தில் தான் கொண்டு வந்த பாயசத்தை "உன்னுடைய மூன்று தேவிகளுக்கும் பங்கிட்டுக் கொடு" என்று தசரதனுக்குக் கட்டளையிட்டு மறைந்தது. அதன்படி அவர் செய்தார். அதன் பயனாக,

ஒரு காலத்தில் எல்லா உலகங்களையும் தன் வயிற்றினுள்ளே அடக்கினவனும், வேதங்களாலும் அறிய முடியாதவனும், மையும், கறுத்தமேகமும் போன்றவனும், எல்லா அழகையும் காட்டிப் பிரகாசிக்கின்றவனுமான திருமாலின் அவதாரமான இராமனை, நற்குணங்களையுடைய கோசலை உலகத்துக்கு நன்மை உண்டாகும்படி பெற்றாள்.

ஒருபகல் உலகெலாம் உதரத்து உட்பொதிந்து
அருமறைக்கு உணர் வரும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை.

— பால : திரு அவதார : 104.

பிறகு, கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலக்ஷ்மணன், சத்துருக்னன் என்ற இரட்டையரும் பிறந்தார்கள்.

இவர்கள் மிக்க அழகும், அறிவும், மற்ற எல்லா நற்குணங்களும் அமைந்தவர்களாய், தம்முள் மிக்க

ஒற்றுமை யுடையவர்களாய், வளர்ந்துவந்தார்கள். குலகுருவாகிய வசிஷ்டரும், மந்திரியாகிய சுமந்திரனும் கற்பிக்க அரசகுமாரர்கள் அறியவேண்டிய எல்லாக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார்கள்.

இப்படி இவர்கள் வளர்ந்துவருங் காலத்தில் ஒருநாள், அரசர்குலத்தில் பிறந்து பின்பு தன் முயற்சியால் பிரம்மரிஷியான விசுவாமித்திர மகரிஷி தசரதன் அமர்ந்திருந்த மண்டபத்துக்கு வந்தார். தசரதன் அவரை மிக்க பயபக்தியுடன் வரவேற்று, தன்னால் ஆகவேண்டிய காரியம் என்ன என்று வினவ,

"மரங்கள் அடர்ந்த காட்டில் நான் செய்யப் போகுஞ் சிறப்புடைய யாகத்துக்குத் தடையாக, தவம் செய்யும் முனிவர்கள் அஞ்சும்படி அவர்கள் மனத்தில் போர் செய்யும் காமமும் கோபமும் போல இராக்கதர்கள் இடையிலே வந்து தவிர்க்காத வண்ணம் 'போரில் காப்பாற்றுவாய்' என்று கட்டளையிட்டு உன் புதல்வர் நால்வரிலே கருநிறமுடைய ஒப்பற்றவனை இராமனை அனுப்புவாயாக" என்று உயிரைக் கேட்கின்ற கொடிய யமனைப் போல் தசரதனின் மனம் நோகும்படி சொன்னார்.

தருவனத்துள் யான் இயற்றும் தவ வேள்விக்கு
இடையூறுத் தவம் செய்வோர்கள்
வெருவரச்சென்று அடை காம வெகுளிஎன நிருதர்
இடைவிலக்கா வண்ணம்

செருமுகத்துக் காத்தி என நின் சிறுவர் நால்வரினும்
கரிய செம்மல்

ஒருவனைத் தந்திடுதிஎன உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்ஞன்.

— பால : கையடை : 10.

அப்பொழுது தசரதன் இராமனிடத்துத் தனக்குள்ள அளவற்ற ஆசையாலும், அவனுடைய வீரத்தை அறியாதவன் ஆதலாலும் அவனை அனுப்ப அஞ்சி "இராமன் மிக்க இளைஞன். அவனுக்குப் போரில் பழக்கமில்லை. ஆதலால் நானே உம்முடன் வருகிறேன்" என்று சொல்ல, இதைக்கேட்ட விசுவாமித்திரர் மிக்க கோபங்கொண்டு எழுந்திருக்க, அப்பொழுது வசிஷ்டர் அவர்கோபத்தை ஆற்றி. தசரதனைப் பார்த்து, "நீ இராமனை இவருடன் அனுப்புவதனுல் அவனுக்கு நன்மையேயன்றித் தீமை உண்டாகாது" என்று சொல்ல, உடனே இராமனை அழைத்துவரும்படி சுமந்திரனுக்குத் தசரதர் கட்டளையிட்டார்; வந்த இராம இலக்ஷ்மணர்களை விசுவாமித்திரருடன் அனுப்பி வைத்தார்.

இருவரும் விசுவாமித்திரருடன் காட்டில் போகுங்காலத்து காமன் ஆசிரமத்தைக் கண்டு 'இது என்ன?' என்று இராமன் வினவ, "இங்கே முற்காலத்தில் பரமசிவன் தவம் செய்து கொண்டிருந்தபொழுது மன்மதன் அவர்மேல் தன் அம்பு

களை எய்ய, கோபங்கொண்ட சிவபிரான் தன்னுடைய நெற்றிக்கண்ணைத்திறக்க மன்மதன் சாம்பலாய் விட்டான். அந்த இடம் இது" என்று சொன்னார். அதைத்தாண்டிச் சிறிது தூரம் சென்றபொழுது ஒரு பெரிய பாலைவனத்தைக் கண்டார்கள். அதைக்கண்ட இராமன் "தசரதன் ஆளும் இந்த நல்ல நாட்டில் இப்படிப்பட்ட பாலைவனம் இருப்பதற்கு என்ன காரணம்?" என்று கேட்க, விசுவாமித்திரர் "முற்காலத்தில் சுகேது என்னும் இயக்கன் பிள்ளையில்லாததனால் பிள்ளைகள் வேண்டுமென்று பிரமனை வரம் வேண்ட, அவர் 'தாடகை என்னும் ஒரு பெண் பிறக்கும்' என்று வரம் கொடுத்தார். அந்தத் தாடகை சுந்தன் என்பவனை மணந்து மாரீசன், சுபாகு என்ற இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்கள் செருக்குற்றவர்களாய் அகஸ்தியர் ஆசிரமத்தை அழிக்க அவருடைய கோபத்தால் சுந்தன் இறந்தான். மற்றவர்கள் இராக்கதர்கள் ஆகி, இந்த வனத்தில் இருந்து கொண்டு செடி கொடி முதலியவைகளையும், எல்லாப் பிராணிகளையும் அழித்து வருவதனால் இது பாலைவனமாயிற்று" என்று சொன்னார்.

இப்படிச்சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, தாடகை பயங்கரமான ரூபத்தோடு வந்து அவர்களை எதிர்த்தாள். ஆனால், பெண்ணைக் கொல்லக் கூடாது என்று இராமர் வில் எடுக்காமலிருந்தார். அப்பொழுது விசுவாமித்திரர் "எல்லா உயிர்களையும்

கொன்று தின்னும் இவளைப் பெண்ணென்று நினையாதே. உடனே கொல்ல வேண்டும்” என்றார் அப்பொழுது,

‘முனிவர்களுடைய சாபத்துக்குச் சமானமான சுடுகின்ற ஓர் அம்பைக் கருநிறமுள்ள இராமச்சந்திரன் இருளைப்போன்ற வர்ணத்தையுடைய அந்தத் தாடகையின் மேல் எய்யவே, வச்சிரமலை போன்ற அவளுடைய மார்பில் அது தங்காமல், கல்வியில்லாத மூடர்களுக்கு அறிவுடையவர்கள் சொன்ன நல்ல உறுதி மொழியைப்போலப் போயிற்று.’

சொல்லொக்குங் கடியவேகச் சுடு சரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தினாள் மேல் விடுதலும் வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே

— பால : தாடகவதை படலம் : 73.

அப்பொழுது விசுவாமித்திரர் ரகுநாதனுக்கு அநேக படைக்கலங்களைக் கொடுத்தார்.

பிறகு விசுவாமித்திரர் ஓர் அழகான சோலையின் அருகில் இவர்களை அழைத்துப் போய், அங்கே தாம் செய்யும் யாகத்தைக் காப்பாற்றவேண்டுமென்று சொன்னார். அக்காட்டிலிருந்த அநேக ரிஷிகள் அவருடன் கூடி ஒரு பெரிய யாகம் தொடங்கினார்கள்.

‘உலகத்தை ஆளும் தசரத மகாராஜாவின் புதல்வரான இராமலக்ஷ்மணர்கள் ஆறு நாள்

வரையில் தேவர்கள்பொருட்டு விசுவாமித்திர முனிவர் செய்த யாகத்தை கண்ணைக் காக்கின்ற இமைகள் போல் காப்பாற்றினார்கள்.'

எண்ணுதற்கு ஆக்க அரிது இரண்டு மூன்று நாள்
விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக்காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக்காக்கின்ற இமையில் காத்தனர்.

— பால : வேள்விப்படலம் : 41.

மாரீசன், சுபாகு முதலான இராக்கதர்கள் அதை அழிக்க வர, அப்பொழுது ரிஷிகள் காப்பாற்றும்படி இராமனை வேண்ட, இராமர் மாரீசனைச் சமுத்திரத்தில் ஆழ்த்தி, சுபாகு முதலான மற்ற இராக்கதர்களைக் கொன்று, யாகத்தைக் காப்பாற்றினார். யாகம் முடிந்ததும் விசுவாமித்திரர் மிக்க மகிழ்ச்சியை அடைந்து இராமருக்குப் பின்னும் அநேக மந்திரங்களை உபதேசித்தார்.

அதற்கப்பால், மிதிலையில் சனகமகாராஜா செய்யும் வேள்விக்குப் போகவேண்டுமென்று புறப்பட்டுப் போகுங்காலத்து, வழியில் ஒரு கல்லின்மேல் இராமபிரானுடைய பாததூள்பட, அந்தக்கல் ஒரு அழகான பெண்ணாக மாறவே, அந்தப்பெண் இவர்களை வணங்கி நின்றாள். அவளைக் கண்ட இராமபிரான் இவள் யாரென்று வினவ, "இவள் கௌதம மகரிஷியின் மனைவி அகலிகை என்பவள். ஒரு

நாள் காலையில் ரிஷி ஆற்றங்கரைக்குப் போய் பூசை செய்து கொண்டிருக்கும் பொழுது, தேவேந்திரன் அகலிகையின் மேல் காதல் கொண்டவனாய், ரிஷி போல் வேடம் தரித்து அவளுடன் கூடியிருக்க, அதைத்தெரிந்த பிற்பாடும் அவள் சும்மா இருந் தாள். இதை ஞானதிருஷ்டியால் அறிந்த ரிஷி திரும்பிவந்து, அதிக கோபங்கொண்டு, "தேவேந் திரனுடைய உடலில் அருவருப்பை உண்டாக்கும் ஆயிரம் குறிகள் தோன்றக்கடவது" என்று சாபங் கொடுத்து, அவன் போன பிறகு, அகலிகையைப் பார்த்து, 'நீ கல்லாகக்கடவது' என்று சபித்தார். அப்பொழுது அகலிகை, "பரமசிவனுக்குச் சமான மான மகரிஷியே! சிறியோர் செய்த பிழைகளைப் பொறுத்துக்கொள்ளுவது பெரியவர்களுடைய கட மை என்று சொல்லப்பட்டிருக்கின்றது; ஆதலால், இச்சாபத்திற்கு முடிவு செய்யவேண்டும்" என்று கேட்க, "செழிப்புள்ளதும், வண்டுகள் மொய்த்து ஒலிக்கும்படியானதுமான குளிர்ந்த மாலையை அணிந்த தசரதகுமாரனான இராமனுடைய காலி னின்றும் புறப்பட்டதூள் உன்மேல் பட்டால் இந்தக் கல் உருவம் நீங்கும்" என்று கௌதமரிஷி கூறினார்.

பிழைத்தது பொறுத்தல் என்றும் பெரியவர் கடனே என்பர்
அழல்தரும் கடவுள் அன்னாய் முடிவு இதற்கு அருளுக என்ன
தழைத்து வண்டு இமிரும் தண்தார் தசரத இராமன் என்பான்
கழல்துகள் கதுவ இந்தக் கல் உருத் தவிர்தி என்றான்.

— பால : அகலிகைப்படலம் : 80.

என்று அவளுடைய கதையைச் சொல்லி, இராம பிரானைப் பார்த்து,

'கறுத்த நிறத்தையுடைய அரக்கியான தாடகை யுடன் நீ செய்த போரில் நான் உன் கையின் திறத் தைக் கண்டேன். இங்கே உன் காலின் திறத்தைக் கண்டேன்.'

மை வண்ணத்து அரக்கி போரில் மழை வண்ணத்து
அண்ணலே உன்
கைவண்ணம் அங்குக்கண்டேன் கால்வண்ணம்
இங்குக்கண்டேன்.

— பால : அகலிகை : 82.

என்று இராமச்சந்திரனைப் புகழ்ந்து, அகலிகையை அழைத்துப் போய்க் கௌதமரிடத்தில் ஒப்புவித்து விட்டு, மூவரும் மிதிலை நோக்கிச் சென்றார்கள்.

ஆழ்ந்த அகழியும் பெரிய மதிற்சுவர்களும் படைத்த அந்த மிதிலா நகரத்தில் போகும்போது ஆகாயத்தை அளாவிய ஓர் அரண்மனையின்மேல் மாடியில் எவ்வுலகத்துமில்லாத அழகையுடைய ஓர் பெண்ணரசி நிற்பதை இராமர் பார்த்தார். சனக மகாராஜாவின் மகளான சீதையாகிய அந்தப் பெண்ணும் இராமனைப் பார்த்தாள். இருவரும் ஒரு வர்மேல் ஒருவர் அளவற்ற காதல் கொண்டனர். விசுவாமித்திரர் இராமலக்ஷ்மணர்களை சனகமகா ராஜாவின் சபைக்கு அழைத்துச் சென்றார். அங்கே கௌதமரின் மகனான சதானந்த முனிவர் அவர்

களை வரவேற்ருர். பின், அவர் விசுவாமித்திரருடைய கதையைச் சொல்லக்கேட்டு இராமலக்ஷ்மணர் மகிழ்ந்து அன்று இரவு தமக்களித்த விடுதியில் இருந்தனர்.

மறுநாள் அவர்கள் சனகன் கொலுவிருக்கும் சபையை அடைந்தனர். சனகன் விசுவாமித்திர ரிஷியை உபசரித்து ஆசனத்தில் அமர்வித்து, "இவ்வரசகுமாரர்கள் யார்" என்று கேட்க, விசுவாமித்திரர், சூரியகுலத்தில் மனுமுதலாக ஆண்ட அரசர்களுடைய பெருமையை எல்லாம் எடுத்துரைத்து, இறுதியில் தசரதன் பெருமையையும் கூறி அவருடைய மக்கள் என்று அறிவித்தார். அப்பொழுது சதானந்தர் சீதையின் பிறப்பை இவ்வாறு கூறினர்.

"உழும்போது கொழுவின் முனையிலிருந்து சூரியோதயம் போன்ற ஒளியைவீசி பூமிதேவியின் உருவம் வெளியில் வந்தது போல, கடலிலிருந்து உண்டான தெளிவான அமிர்தத்துடனே பிறந்த மகாலக்ஷ்மியும் ஒதுங்கக்—கண்டோர் தொழுகின்ற, அழகும் குணங்களும் நிறைந்த, பெண்களுக்கு அரசியான சீதாதேவி தோன்றினாள்."

உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிர் ஒளிபோல்
பொழிகின்ற புவி மடந்தை திருவெளிப்பட்டெனப் புணரி
எழுகின்ற தெள்ளமுதோடு எழுந்தவளும் இழிந்து ஒதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண் அரசி தோன்றினாள்.

— பால : கார்முகப்படலம் : 17.

இவ்வாறு சீதாதேவியின் பிறப்பைச் சதானந்தர் கூறினர். அதைக்கேட்ட விசுவாமித்திரர் சனகனைப்பார்த்து, "நீ, என் மகளான சீதையை எவன் பரமசிவனுடைய வில்லை வளைக்கிறனே அவனுக்கே கல்யாணம் செய்துகொடுப்பேன்" என்று சொல்லியிருப்பதைக் கேள்விப்பட்டு இராமன் அவ்வில்லை வளைக்க வந்திருக்கிறன்" என்று சொல்ல, சனகன் அந்தவில்லைக் கொண்டுவரும்படி ஏவலாளர்களுக்குக் கட்டளையிட்டார். உடனே மலைபோன்ற அந்த வில்லை அங்குக் கொண்டுவந்து வைத்தனர். அதன் பெருமையை ச்தானந்தர் சொல்லக் கேட்ட விசுவாமித்திரர் இராமனைப் பார்க்க, இராமர் எழுந்து, அதன் அருகில் சென்று, அப்பெரியவில்லை சீதைக்கு அணியப்போகும் புஷ்பமாலையை எடுப்பதுபோல் எடுத்து வளைக்கவே, அவ்வில் இற்று விழுந்தது. அதைக்கண்டவரும் கேட்டவரும் அளவிலா மகிழ்ச்சியை அடைந்தனர்.

தான் நினைத்தபடி முடிந்ததென்று சந்தோஷித்த விசுவாமித்திரர் சனகனைப்பார்த்து, "இனி கல்யாணத்திற்கு வரும்படி உடனே தசரதனுக்கு ஓலை அனுப்ப வேண்டும்" என்று சொல்ல, அப்படியே சனகனும் செய்ய, அதையறிந்த தசரதர் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்து, வசிஷ்டரோடும், மனைவிகளோடும், மந்திரி சிற்றரசர்களோடும், சேனையோடும், அயோத்தியின் சனங்களோடும் புறப்பட்டுவந்தார். சனகமகாராஜா தசரதரை வர

வேற்று, சபையில் இருக்கச்செய்து, சீதையைச் சபைக்கு வரவழைக்க, எல்லோரும் அவளைக்கண்டு மகிழ்ந்தனர். இராமன் சபைக்கு வருவதற்காக ஊர்வலம் வரும்பொழுது, மிதிலையின் பெண்கள், "இராமனுடைய தோள்அழகைப் பார்த்தவர்கள் அதையே பார்த்துக்கொண்டு நின்றார்கள்; வீரக் கழல்களை அணிந்த தாமரைபோன்ற கால்களைப் பார்த்தவர்கள், அவைகளையே பார்த்துக்கொண்டு நின்றார்கள்; நீண்ட கைகளைப் பார்த்தவர்களும் அப்படியே; வாள்போன்ற கண்களையுடைய மாதர் களில் முழுவடிவத்தையும் பார்த்தவர்கள் யார் திரு மால் விஸ்வரூபமெடுத்து மூவுலகத்தையும் அளந்த காலத்து அவர் ரூபத்தைப் பார்த்தவர்கள் போலா னார்கள்."

தோள்கண்டார் தோளேகண்டார் தொடு கழல் கமலமன்ன
தாள் கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாரும் அஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினைமுடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்.

— பால: உலாவியல்படலம்: 19.

பிறகு வசிஷ்டர் ஏற்படுத்தியபடி திருமணம் மிக்க சிறப்போடு நிறைவுபெற்றது.

சக்ரவர்த்தி திருமகனான இராமனுக்கு எதிரில் நின்று சனகமகாராஜா "தாமரைமலரில் இருக்கும் மகாலக்ஷ்மியும் பரம்பொருளான மகாவிஷ்ணுவும்

*போல நீ என் அழகிய மகளான சானகியுடன் நீடுழிகாலம் வாழ்வாயாக" என்று குளிர்ந்த நல்ல நீரைத் தாரைவார்த்து, தாமரைபோன்ற பெரிய கைகளால் கன்னிகாதானம் செய்தான்"*

கோமகள் முன்சனகன் குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்மென நீ என்
மாமகள் தன்னொடு மன்னுதி என்று
தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்.

— பால : கடிமணப்படலம் : 87.

*பின், இராமனுடைய தம்பிமாருக்கு சீதையின் தங்கைகளைக் கொடுத்து மணம் செய்வித்தனர்.*

*தசரதர் முதலானோர் சிலநாள் மிதிலையில் தங்கி யிருந்து, பிறகு சனகனிடத்தில் விடைபெற்று அயோத்திநோக்கி புறப்பட்டார்கள்.*

*மீண்டுவரும் வழியில் சமதக்னி முனிவருடைய மகனான பரசுராமர் என்பவர், இராமன் சிவன் வில்லை ஒடித்த ஒலியைக்கேட்டு, அரசர்கள்மேல் கோபங் கொண்டவனாகையால், இராமனுடைய செருக்கை அடக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு தன் தகப்பனிடத்தில் இருந்த திருமாலின் வில்லை எடுத்துவந்து, இராமனைப்பார்த்து, "சிவனுடைய சொத்தைவில்லை ஒடித்ததனால் மிகவும் கர்வித்தாய் போல் இருக்கிறது. இந்த திருமாலின் வில்லை வளை, பார்ப்போம்" என்றார். இராமர், புன்சிரிப்புடன்*

அந்தவில்லே வாங்கி, அதில் ஓர் அம்பைத் தொடுத்து, தோள்வரையில் வாங்கி "நீ ஒரு பிராமணன். ஆதலால் உன்னைக் கொல்லக் கூடாது. ஆனல், என் அம்போ வீணபோகாது. ஆகையால், இதற்கு இலக்கு என்ன? சீக்கிரம் சொல்" என்ருர். பரசுராமர் நடுநடுங்கி "நியாயமான வழியில் நடப்பவனே! கோபித்துக் கொள்ளாதே; நீ இவ்வுலகத்தில் உள்ளோர் யாவர்க்கும் முதல்வன் என்பதை அறிந்தேன். திருத்துழாய் மாலையை அணிந்தவனும், சக்கராயுதத்தைப் பிடித்தவனுமான மகாவிஷ்ணுவின் அம்சமானவனே! பிறையைச் சடையில் அணிந்த பரமசிவனுடைய வில் வேறு வேருக ஒடிவதே அல்லாமல் உன்கையில் அப்படி ஒடியாமல் நிற்குமோ!"

நீதியாய் முனிநதிடேல் நீ இங்கு யாவர்க்கும்
ஆதியான் அறிந்தனென் அலங்கல் நேமியாய்
வேதியா இறுவதே அன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ

— பால: பரசுராமபடலம் :37.

என்று புகழ்ந்து, "இராமா! உன் அம்பை என்மேல் விட்டு நான் இதுவரையில் செய்த தவத்தை எல்லாம் வாங்கிக்கொள்" என்ருர். அப்படியே இராமனும் அம்பைவிட, அது அவருடைய தவத்தை வாரிமீண்டது. பரசுராமரும் இராமனுக்கு ஆசீர்வாதம் செய்து விடைபெற்றுச் சென்

ரூர். தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். அப்பொழுது அங்கேவந்த தேவர்களில் ஒருவனுனை வருணனிடத்தில் இராமர் அந்தவில்லை ஒப்புவித்தார். எல்லோரும் மகிழ்ச்சியால் ஆரவாரிக்க, அரசர் முதலானோர் அயோத்தியை அடைந்தார்கள்.

# அயோத்தியா காண்டம்

அயோத்தி வந்தபிறகு, ஒருநாள் கேகய நாட்டு அரசன் தன்பேரனை பரதனை அனுப்பும்படி எழுத, அப்படியே பரதனையும் சத்ருக்னனையும் தசரதர் அனுப்பிவைத்தார். சில நாட்கள் கழிந்த பின்னர், தசரதருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அதாவது, தாம் அநேக வருடங்கள் அரசாண்டதனாலும், இராமன் பெரியவனாய்விட்டபடியாலும், தொன்றுதொட்டுவரும் மரபின்படி, தாம் காட்டுக்குப் போய்த் தவம்செய்யவேண்டி இருப்பதனாலும், இராமனுக்கு உடனே பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும் என்பதே. அப்பொழுது தம் குலகுரு வான வசிஷ்டரையும், சுமந்திரனையும், மற்ற அரசர் களையும் சபைகூட்டி இவ்வாறு கூறினார். "குணங்க ளால் சிறந்தவனான இராமன் எனக்கு மகனாகப் பிறந்ததனால், சீதையாகிய இலக்குமியை மணக்க அதை கண்ணாரக்கண்ட நான், பெண்களுக்குரிய அருமையான நற்குணங்களைப் பெற்ற பூமிதேவி யாகிய மாதையும் அவன் மணப்பதைக்கண்டு களிக்க ஆவலாய் இருக்கின்றேன்."

பெருமகன் என் வயின் பிறக்க சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்ட யான்
அருமகள் நிறை குணத்து அவனி மாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்பதாயினேன்.

— அயோத்தியா : மந்திரப்படலம் : 29.

இதைக்கேட்ட எல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். உடனே இராமரை அழைத்து தம் எண்ணத்தைத் தெரிவிக்க, அவரும் ஒப்புக்கொண்டார். சோதிடர்களை அழைத்துக் கேட்க, அவர்கள் மறுநாளே பட்டாபிஷேகத்திற்கு நல்லநாள் என்று சொல்ல, அவ்விஷயத்தை எல்லோருக்கும் தெரிவிக்கும்படி தசரதர் கட்டளையிட்டார். வசிஷ்டரும் இராமருக்கு வேண்டிய நீதிகளையெல்லாம் உபதேசித்தார்

இதை அறிந்த உலகங்கள் எல்லாவற்றையும் தன் பெருமைபெற்ற வயிற்றில் அடக்கிய நாராயணனைத் தன்வயிற்றில் அடக்கிய தவத்தையுடைய கோசலை திருமாலை வணங்கி, "என்னிடத்திற் பிறந்த இராமனுக்கு இனி அருள்புரிந்து அவனைக் காப்பாற்றுவது உன்னுடைய கடமை" என்று வேண்டினள்.

என்வயின் தரும் மைந்தற்கு இனி அருள்
உன்வயிற்றது என்றுள் உலகு யாவையும்
மன்வயிற்றின் அடக்கிய மாயனைத்
தன்வயிற்றின் அடக்கு தவத்தினள்.

— அயோத்தியா : மந்திரப்படலம் : 94.

தசரதர் கட்டளையின்படி யானையின்மேல் முரசு அறைந்து இந்த நல்ல செய்தியைத் தெரிவிக்கும்போது, கேட்டுக்கொண்டிருந்த மந்தரை

என்னும் (கைகேயியின் தோழியான) கூனி, முன் ஒருகால் இராமன் வில்வித்தை கற்கும்போது எய்த உண்டைஅம்பு தற்செயலாய்த் தன கூனின்மேல் பட, அதை இராமன் தன்னை ஏளனம் செய்ய எண்ணி எய்தான் என்று தவருகக் கருதி, அக் காரணத்தால் கோபங்கொண்டு, தனக்குநேரும் ஓர் சமயத்துக்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தவள், இப்பொழுது நல்ல சமயம் வாய்த்தது என்று எண்ணிக் கைகேயியின் அரண்மனையைச் சேர்ந் தாள். அங்கே கைகேயியைப்பார்த்து "நாளைக்கு இராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆகப்போகிறதே, தெரியுமா?" என்று கேட்டாள். அதைக்கேட்ட கைகேயி அளவற்ற மகிழ்ச்சியை அடைந்து தன் கழுத்திலிருந்த ஒரு முத்துமாலையை எடுத்து அவளுக்குத் தந்தாள். கூனி கோபம்கொண்டு மாலை யை வீசி எறிந்து, "இராமன் அரசனுல் உனக்கு என்ன பயன்? பரதன் அரசனுல் உனக்கு எல்லாப்பெருமையும் உண்டாகும்" என்ருள். அப் பொழுது கைகேயி,

"நீ எனக்கு நன்மை செய்பவளுமல்ல; என் மகனை பரதனுக்கு நன்மை செய்பவளுமல்ல; பொதுவாக தர்மத்தை நோக்கினுல் உனக்கும் நல்லவள் அல்ல; நீ முன்செய்த தீவினை உன்னைத் தூண்டுதலாலே, உன் மனத்துக்கு நல்லவை என்று தோன்றியவற்றை, யோசனை செய்யாமல் சொன் ஞய், அறிவில்லாதவளே!" என்ருள்.

எனக்கு நல்லேயும் அல்லே நீ என் மகன் பரதன்
தனக்கு நல்லேயும் அல்லே அத்தருமமே நோக்கில்
உனக்கு நல்லேயும் அல்லே வந்து ஊழ்வினே தூண்ட
மனக்கு நல்லன சொல்லினே மதியிலா மனத்தோய்

— அயோத்தியா : மந்தரை சூழ்ச்சி : 65.

*இதைக்கேட்ட கூனி, "அடி, பைத்தியக்காரி! இராமன் அரசனுனல் கௌசல்யைக்கல்லவா எல்லாச் செல்வமும் சேரும்; நீ அவளிடத்தில் பிச்சைவாங்கித்தான் சாப்பிடவேண்டும்" என்று சக்களத்திப் பொருமையைக் கிளறிவிட்டாள். இராமனிடத்தில் தனக்குள்ள அன்பு ஒருசிறிதும் குறையாத கைகேயியின் உள்ளம், சக்களத்திப் பொருமையால், முழுவதும் மாறிவிட்டது. கூனியின் சொல்படி தன் ஆபரணங்களையெல்லாம் கழற்றி எறிந்து, திலகத்தை அழித்து, தரையில்படுத்துக் கொண்டாள். இக்காட்சி எப்படி இருந்ததென்ருல், இனி சீதையாகிய இலக்ஷ்மி அயோத்தியை நீங்கிப் போகின்ருள் ஆதலின் அவளுக்குப்பதிலாக அவள் தமக்கையாகிய மூதேவி அயோத்தியில் நுழைந்து குடிகொண்டது போல் இருந்தது.*

*இவள் இப்படி இருக்க, தசரதர் சந்தோஷ சங்கதியைக் கைகேயிக்குச் சொல்லலாம் என்று அவளுடைய மாளிகைக்குவர, அவள் அலங்கோலமாகப் புரளுவதைக்கண்டு, என்ன விஷயம் என்று வினவ, அவள் "முன்பு சம்பராசுரனுடன் தாங்கள்*

போர்செய்த காலத்து எனக்கு இரண்டுவரம் கொடுப்பதாகத் தாங்கள் சொல்லியிருந்தீர்கள். அதில் ஒன்று, பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவும், மற்றொன்று இராமன் காட்டுக்குப்போகவும் தரவேண்டும்" என்று கேட்க, தசரதர் துக்கத்தில் ஆழ்ந்து மூர்ச்சித்தார். அப்பொழுது, கைகேயி இராமரை வரும்படி சொல்லி அனுப்பினாள்; தம் தாயைப்பார்க்க ஆவலுடன் வந்த இராமர் எதிரில் ஓர் யமனைப்போல் தனியாய்,

தாயென நினைவான் முன்னே
கூற்று எனத்தமியள் வந்தாள்

— அயோத்தியா : கைகேசி சூழ்வினை : 103.

இராமன் வந்து கைகேயியைப்பணிந்து, "எதற்காக என்னைவரச் சொன்னீர்கள்?" என்று வணக்கத்துடன் கேட்க, அதற்குக் கைகேயி,

"கடல்சூழ்ந்த உலகத்தையெல்லாம் பரதனே ஆண்டுகொண்டிருக்க, நீ போய், நீண்ட பெரிய சடைகளைத்தரித்து, செய்தற்கு அரிய தவத்தைச் செய்துகொண்டு, புழுதியை உடைய காட்டை அடைந்து, பாவங்களை நீக்கும் ஆறுகளில் நீராடி, பதினான்கு வருடங்கள் கழிந்தபிறகு திரும்பிவா என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டார்" என்றாள்.

*ஆழிசூழ் உலகமெல்லாம் பரதனே ஆள நீ போய்த்
தாழ் இரும் சடைகள் தாங்கித்தாங்கரும் தவம் மேற்கொண்டு
பூழிவெங்கானம் நண்ணிப்புண்ணியத் துறைகள் ஆடி
ஏழு இரண்டு ஆண்டின் வா என்று இயம்பினன் அரசன் என்றாள்.

— அயோத்தியா : கைகேசி சூழ்வினை : 107.

அதைக்கேட்ட இராமர் தம் மனம் சிறிதும் வருந்தாமல், தம்முகம் அப்பொழுது மலர்ந்த தாமரைபோல் விளங்கக் கைகேயியைப் பார்த்து,

"அரசனது கட்டளையல்லாவிட்டாலும் உம்முடைய கட்டளையை நிறைவேற்ற மாட்டேன் என்பேனா? என் தம்பிக்குவந்த செல்வம் எனக்கு வந்ததுபோல் அல்லவா"

மன்னவன் பணி அன்றாகின் நும் பணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?

— அயோத்தியா : கைகேசி சூழ்வினை : 110.

"இதோ இப்பொழுதே காட்டுக்குச் செல்கிறேன்" என்று விடைபெற்றுக்கொண்டு போனார். காட்டுக்குப்போகும் முன் மற்ற இரண்டு தாய்மாருக்கும் சொல்லவேண்டுமென்று கருதி, முதலில் கோசலையினுடைய மாளிகையைநோக்கி நடந்தார். அச்சமயத்தில் "மேகங்கள் சூழப்பெற்ற மலையைப் போன்றவனான இராமன், கிரீடத்தைத் தரித்துக்

*அரும்பதவுரை :—இரும் = பெரிய, பூழி = தூசு : புழுதி.

கொண்டுவருவான்" என்று மகிழ்ச்சியுடன் எதிர் பார்த்துக்கொண்டிருந்த கோசலையின் முன்னே, வீசுகின்ற சாமரம் இல்லாமலும், வெற்றிக்கு அடையாளமான வெண்ணிறமுள்ள குடை இல்லாமலும், எல்லாவற்றையும் செய்விக்கின்ற விதி முன்னே செல்லவும், தர்மதேவதை புலம்பிக்கொண்டு பின்னே செல்லவும், இராமன் தனியனாய் வந்து எதிரில் நின்றான்.

குழைக்கின்ற கவரி இன்றிக் கொற்றவெண் குடையும் இன்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத்தர்மம் பின்இரங்கி யேக
மழைக்குன்றம் அனையான் மௌலி கவித்தனன் வரும் என்று
தழைக்கின்ற உள்ளத்து அன்னாள் முன்ஒரு தமியன் சென்றான்.

— அயோத்தியா : நகர்நீங்குபடலம் : 2.

இதைக்கண்ட கோசலை "பட்டாபிஷேகத்திற்கு ஏதாவது தடை உண்டாயிற்றோ" என்று கேட்டாள். அதற்கு இராமர் நடந்ததை சுருக்கமாகச் சொல்லித் "தனக்காக வருத்தப்படாதிருக்க வேண்டும்" என்று வேண்டினார். ஆனால், கோசலை அதிக துக்கத்தில்மூழ்கி, "நான் உன் தகப்பனாரிடத்தில் சொல்லி இதை மாற்றுவிக்கிறேன்" என்று கூறி கைகேயியின் அரண்மனையை நோக்கிச்சென்றாள். அங்கே வசிஷ்டரும் வந்தார். எல்லாருங் கூடிக் கைகேயியை வேண்டிக்கொண்டும் அவள் மனம் சிறிதும் மாறவில்லை. அப்பொழுது தசரதர் "எனக்கு ஒரு ரிஷி சாபம் இருப்பதனால் இராமன்

கட்டாயம் காட்டுக்குப் போவான், நானும் உயிரை விடுவேன்,'' என்றார்.

இப்படியிருக்க, இராமன் சுமித்திரை அரண்மனை நோக்கிச் செல்லும்போது, வழியில் லக்ஷ்மணர் வில்லும்கையுமாய் நின்றுகொண்டு "இப்பொழுதே தசரதனைக்கொன்று இராமனுக்கு முடிசூட்டுவேன்'' என்று ஆரவாரித்தலை நோக்கி, அவன் கோபத்தை ஆற்றி, இருவரும் சுமித்திரையிடம் சென்று நடந்ததைச் சொல்ல, அவள் "லக்ஷ்மணா! இராமன் இருக்கிற இடந்தான், அயோத்தி; இராமன்தான் உன் தகப்பன்; சீதைதான் நான் என்று எண்ணுவாய்'' சுமித்திரை மீண்டும் சொல்லுவாள்; "மகனே இந்த இராமன் பின்செல்; தம்பியைப்போல் அல்லாமல் அடிமையைப்போல் ஏவல் செய்.'' வளம்பெற்ற இந்த அயோத்திக்கு இராமன் திரும்பிவந்தால் நீயும் வா; இல்லாவிடில், அவனுக்குமுன் நீ உன் உயிரைவிடு'' என்று தன் நீண்ட கண்களினின்றும் நீர் வழிய நின்றாள்.

பின்னும பகர்வாள் மகனே இவன் பின்செல்; தம்பி
என்னும் படிஅன்று அடியாரின் ஏவல் செய்தி
மன்னும் நகர்க்கே இவன் வந்திடில் வா அது அன்றேல்
முன்னம் முடி என்றனள் நீர்விழி சோர நின்றாள்.

— அயோத்தியா : நகர் நீங்குபடலம் : 151.

இருவரும் அவளிடம் விடைபெற்றுக் கொண்ட பின், இராமர் தம் இருப்பிடம் சென்று, சீதையை நோக்கி, "என் தகப்பனர் இட்ட கட்டளையால் நான் காட்டுக்குப்போக வேண்டியிருக்கிறது. ஆகையால், நீ இங்கேயே மாமிமார் மூவர்க்கும் ஏவல் செய்து கொண்டிரு" என்று சொல்ல, சீதை "உங்களை விட்டுப் பிரிந்து ஒருபொழுதும் இருக்கமாட்டேன்; ஆகையால், நானும் உங்களுடன் கட்டாயம் வந்தே தீர்வேன்" என்று உடனே புறப்பட்டாள். அப்பொழுது இராமர் கோசலை, சுமித்திரை என்ற இரண்டு தாய்மாரிடத்திலிருந்து கஷ்டத்துடன் பிரிந்து, எதிரில் நின்ற வசிஷ்டமகரிஷியை வணங்கி, தம் உயிருக்குச்சமானமான தம்பியுடனும் தாமரையிலிருக்கும் இலக்ஷ்மியின் அவதாரமான சீதையுடனும் ஓர் தேரின்மேல் போனன்"

அன்ன தாயர் அரிதில் பிரிந்த பின்
முன்னர் நின்ற முனிவனைக்கை தொழா
தன்னது ஆருயிர்த்தம்பியும் தாமரைப்
பொன்னும் தானும் ஓர் தேர் மிசைப்போயினன்.

— அயோத்தியா நகர் நீங்கு படலம் : 238.

சுமந்திரன் செலுத்தும் தேரின்மேல் ஏறி மூவரும் காட்டை நோக்கிச் சென்றனர்.

இதைக் கேள்வியுற்ற அயோத்தியின் மக்கள் யாவரும் "நாமும் இராமருடன் காட்டுக்குப் போ

வோம்" என்று புறப்பட்டார்கள். அன்று இரவு ஒரு பெரியவனத்தில் தங்கி இருக்கும்பொழுது, நள்ளிரவில் எல்லோரும் உறங்குவதைக்கண்டு, இராமனும் சீதையும் இலக்ஷ்மணனும் அவர்களுக்குத் தெரியாமல் காட்டைநோக்கிப் புறப்பட்டார்கள். இப்படி காட்டுக்குப்போன இராமர்,

சீதாபிராட்டியின் கற்பும், தமது மேன்மைக் குணமும், தம்பியான இலக்குமணனும், குறைவில்லாத தம் அருளும், நல்ல அறிவும், சத்தியமும், ஒழுங்காக செய்யப்பட்ட தம் வில்லுமே தமக்குப் பாதுகாவலாக நடுஇரவில் போயினர்.

தையல் தன் கற்பும் தன் தகவும் தம்பியும்
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேமமாகக் கொண்டு
ஐயனும் போயினன் அல்லின் நாப்பணே.

— அயோத்தியா : தைலமாட்டுப்படலம் : 48.

அவர்கள் சிறிதுதூரம் சென்றபின் கங்காநதியின் கரையை அடைந்தார்கள். அங்கே படகுகளைச் செலுத்தும் வேட்டுவர்களுக்குத் தலைவனான குகனைச் சந்தித்து, அவனுடைய நற்குணங்களைக்கண்டு இராமபிரான் அவனிடத்தில் மிக்க அன்பு கொண்டு, அவனுடன் நட்புப்பாராட்டினதேயல்லாமல், அவனைத் தன் தம்பியர்களுள் ஒருவனாக ஆக்கிக்கொண்டார். குகனும் கண்களில் நீர்ததும்ப இராமரை

வணங்கி, படகுகளைக்கொண்டு வந்து, மூவரையும் கங்கையின் அக்கரைக்கு ஏற்றினன். குகனை அங்கேயே இருக்கும்படி சொல்லி, மூவரும் பாரத்வாச ஆசிரமத்தைச் சேர்ந்து, அவர் சொற்படி சித்திர கூடம் என்னும் மலையின்மேல் தங்கியிருந்தார்கள்.

இப்பால், இராமச்சந்திரர் முதலானவர்கள் நள்ளிரவில் காட்டுக்குப்போன பிறகு, சூரியன் புறப்படுமுன் சுமந்திரன் தேரை ஓட்டிக்கொண்டு அயோத்தி நோக்கிச்செல்ல, 'இராமர் திரும்பிவிட்டார்' என்று மகிழ்ந்து அவருடன் சனங்களெல்லாம் அயோத்திக்குத் திரும்பினார்கள். சுமந்திரனுடைய தேரொலியைக்கேட்ட தசரதர் "இராமன் திரும்பினனே?" என்றுவினவ, 'இல்லை, காட்டுக்குச் சென்றான்' என்று சொன்னவுடனே உயிரை விட்டார்.

ஊரில் அரசனில்லாமையால் வசிஷ்டர் ஏவலரை அனுப்பி, பரதனை அழைத்துவரும்படி சொல்ல, அவனும் பரத சத்ருக்னர்களை அழைத்து வந்தான். ஊரில் எவர் முகத்திலும் மகிழ்ச்சியில்லாததைக் கவனித்த பரதன் கைகேயியிடம் சென்று என்ன காரணம் என்று கேட்க, அவள் நடந்ததைச் சொன்னாள். பரதனுக்கு அடக்க முடியாதகோபம் மூண்டு, கைகேயியை நோக்கி, "உலகத்தார் இதைச்சரி என்று ஒப்புக்கொள்ளமாட்டார்கள்; இன்பவாழ்க்கையை விரும்பி நான் பழியை மேற்கொள்ளேன்.

*அப்படி மேற்கொண்டால் அந்தப்பழி நம்மை ஒரு நாளும் விட்டு ஒழியாது; இந்த ஊரில் இலக்குமி நிற்கமாட்டாள்; யாருடன் நீ யோசனை செய்தாய்; யார் உனக்கு இந்த வழி காட்டினார்கள்; எல்லாத் தர்மத்தையும் அடியுடன் கெடுத்து என்ன காரியம் செய்துவிட்டாய்" என்று கோபத்துடனும் துக்கத் துடனும் அதட்டிக் கூறினான்.*

பாரோர் கொள்ளார் யான் உயிர்பேணிப்பழி பூணேன்
தீராது ஒன்றோதுன்பம் இவ்வூரில்திரு நில்லாள்
ஆரோடு எண்ணிற்று யார் உரைதந்தார் அறமெல்லாம்
வேரோடுங்கேடாக முடித்து என் விளைவித்தாய்.

— அயோத்தியா : பள்ளிப்படை : 82.

*பிறகு கோசலையிடம் சென்று "என் தாய் செய்த காரியம் எனக்குத்தெரியாது: நான் அதற்கு உடந்தையாயிருந்து செய்து இருந்தேனானால், மீளா நரகத்தில் விழக்கடவேன்" என்று சத்தியம் செய்து, பின்பு வசிஷ்டரை நோக்கி, "எனக்கு இந்த இராச்சியம் வேண்டியதில்லை: நாமெல்லோரும் உடனே சென்று இராமபிரானை அழைத்துவந்து முடிசூட்ட வேண்டும்" என்று சொல்ல, அவர் அதற்கு உடன் படவே, முரசு அறைவித்து, எல்லோரும் காட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். கங்கைக்கரையின் சமீபத்தில் வந்தபொழுது, அக்கரையில் இருந்த குகன், பரதன் இராமபிரான்மேல் படையெடுத்து வந்தான் என்று தவறாக நினைத்து, போர்செய்யச் சித்த*

மானன். பிறகு சமீபத்தில்வந்த பரதனைப்பார்த்து, 'இவன் சண்டைசெய்ய வரவில்லை' என்று கண்டு கொண்டு, ஒருபடகில் இக்கரைக்கு வந்து, பரதனைத் தொழுது, "நாட்டை ஆளாமல் இங்கு ஏன் வந்தாய்?" என்று கேட்க, பரதன் "இராச்சியத்தை இராமருக்குக் கொடுக்கவந்தேன்" என்று சொல்ல, குகன் "உன் தாய்சொல் கேட்டு உன் தகப்பனார் உனக்குத்தந்த இராச்சியத்தை, 'இதை ஒப்புக்கொள்ளுவது அதர்மம்' என்று எண்ணி அதைவிட்டு, உன்முகத்திலே கவலை குடிகொண்டிருக்க இங்கு வந்தாய் என்பதை ஆராய்ந்து பார்த்தால், புகழ்பெற்ற பரதா! ஆயிரம் இராமராலும் உனக்கு எவ்விதத்திலும் ஒப்பாக மாட்டார்கள்" என்று புகழ்ந்தான்.

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னை
தீவினை என்ன நீத்து சிந்தனை முகத்தில் தேக்கி
போயினை என்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியினம்மா!

— அயோத்தியா: குகப்படலம்: 35.

பிறகு, குகன் உறவினர்களும் தேவர்களும் வணங்கும்படி சிறப்புடன்நின்ற கோசலையைப் பார்த்து, பரதனைதொழுது, 'வெற்றி மாலையை அணிந்தவனே! இவர் யார்?" என்று கேட்க, பரதன் 'அரசர்கள் தலைவாயிலில் தங்கி நிற்கும் தசரத சக்ரவர்த்தியின் மூத்தமனைவி: மூவுலகத்தை

யும் படைத்த பிரமதேவனை உண்டாக்கிய திருமாலைத் தன் பிள்ளையாகப் பெற்றதனால் தான் அடைந்த செல்வத்தை நான் பிறந்ததனால் இழந்த பெருந்தன்மை உடையவளான கோசலை" என்றான்.

சுற்றத்தார் தேவரொடும தொழநின்ற கோசலை
யைத் தொழுது நோக்கி
வெற்றித்தார்க்குரிசில இவர் யார் என்று குகன்
வினவ வேந்தர் வைகும்
முற்றத்தான் முதல் தேவி மூவுலகும் ஈன்றானை
முன்னீன்றானைப்
பெற்றத்தால் பெருஞ்செல்வம் யான் பிறத்தால்
துறந்த பெரியாள் என்றான்.

— அயோத்தியா: குகப்படலம் : 65.

பிறகு பரதன் மற்றவர்களையும் அறிமுகம் செய்வித்த பிற்பாடு, குகன் படகுகளை வரவழைத்து எல்லோரையும் அக்கரையில் ஏற்றியபின், சித்திர கூடம்நோக்கிப் புறப்பட்டார்கள். அம்மலையை நெருங்கியபொழுது, இவர்களைககண்ட இலஷ்மணர் "பரதன் போருக்கு வருகிறான்" என்று தவறாக எண்ணிக் கோபங்கொள்ள, இராமர் அவருடைய கோபத்தை ஆற்றுகையில், அழுத கண்ணுடன் பரதன் வந்து தொழுதான். அவனால் தசரதர் இறந்ததை அறிந்து துன்பத்தில் ஆழ்ந்த இராமரை வசிட்டர் தேற்றியபிறகு, பரதன் "நீ அயோத்திக்குத்

திரும்பிவந்து அரசு ஆளாவிட்டால், நானும் காட்டிலேயே இறப்பேன்' என்று சொல்ல, அப்பொழுது அசரீரி, "பரதா! நீதான் அரசாளவேண்டும்; இராமன் காட்டுக்குச் செல்லவேண்டும்" என்று கூற, பரதன் இராமபிரானுடைய பாதுகைகளைக் கொடுக்கும்படி கேட்டு, அவைகளை வாங்கிக்கொண்டு, அயோத்திக்குச் செல்லாமல், அருகில் இருந்த நந்திக் கிராமத்தில் அப் பாதுகைகளுக்கு முடி சூட்டுவித்து, அவைகளையே அரசனாக மதித்து, நாட்டைக் காத்து வந்தான்.

பரதன் முதலானவர்கள் போனபிறகு, 'இங்கே இருந்தால் அயோத்தியிலிருந்து அநேகர் அடிக்கடி வருவார்கள்' என்று நினைத்து, சித்திரகூடத்தை நீங்கி மூவரும் காட்டில் வேறிடத்துக்குச் சென்றார்கள்.

# ஆரண்ய காண்டம்

அவர்கள் சிறிது தூரம் சென்றபின், அத்திரி மகரிஷியின் ஆச்ரமத்தை அடைந்து, அவரும் அவர் மனைவி அனுசூயையும் வரவேற்க, அங்கே ஒருநாள் தங்கி இருந்து, மறுநாள் தண்டகவனம் புகுந்தார்கள். புகுந்த சிறிது நேரத்தில் விராதன் என்னும் மலைபோன்ற அரக்கன் திடீரென்று அவர்களை எதிர்த்து, சீதையை தூக்கிக்கொண்டு போய்விட்டான். அதைக்கண்ட இராமபிரான் அவன்மேல் அம்புகளைத் தொடுக்கவே, அவன் சீதையைக் கீழேவிட்டு இராமலக்ஷ்மணர்களைத் தூக்கித் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு ஓட லுற்றான். அப்பொழுது இராமபிரான் தன் வாளை உருவி அவனைக்கொன்று வீழ்த்தினார். உடனே அவன் உடலிலிருந்து ஒரு திவ்ய ரூபம் கிளம்பி ஆகாயத்தில் விளங்கிற்று. அதைக்கண்டு அதி சயிக்கின்ற இராமபிரானைப் பார்த்து, கந்தர்வனாக மாறிவிட்ட விராதன் "ஓ இராமா! நீதான் முழு முதற் கடவுள். "கோபித்த ஒரு முதலை தன் காலைக் கவ்விக்கொள்ளக் கஜேந்திரன் என்னும் யானை தனக்கு உண்டான துன்பத்தினால் தன் துதிக்கை யை உயரமாகத் தூக்கிக்கொண்டு, உடல் எல்லாம் நடுங்க, இவ்வுலகத்தைச் சூழ்ந்த திசைகளெல்லாம் தான் இட்ட ஒலி கேட்கும்படி, 'சரணமடைந்தவர் களைக் காப்பாற்றும் ஒப்பற்ற ஆதிகாரணமாகிய

பரம்பொருளே !' என்று கூப்பிட, நீயல்லவா அப்பொழுது 'ஏன்' என்று பதில் சொல்லி, அங்கேபோய் அந்த யானையைக் காப்பாற்றினாய்."

கடுத்த கராம் கதுவ நிமிர் கை எடுத்து மெய் கலங்கி
உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலி கொள்ள உறு துயரால்
அடுத்த பெரும்தனி மூலத்து அரும்பரமே பரமேஎன்று
எடுத்துஒரு வாரணம் அழைப்ப நீயோஅன்று ஏன்என்றாய்.

— ஆரண்ய : விராதன் வதை படலம் : 49.

இப்பொழுது உன்கை தீண்டலால் நான் சாப விமோசனம் பெற்று பழையபடி கந்தர்வனானேன். என் பெயர் தும்புரு. முன் தேவலோகத்தில் ஒரு பெண்ணோடு கூடியதனால் இந்தச் சாபம் பெற்று அநேக வருடங்கள் இராக்கதனாய்க் காட்டில் திரிந்து இன்று உன் அருளால் தேவலோகம் மீண்டும் போகின்றேன்" என்று சொல்லி மறைந்தான். அப்பால் சிறிது தூரம் சென்று சரபங்க மகரிஷி யின் ஆசிரமத்தை அடைந்தபோது, அங்கே தேவேந்திரன் வந்து சரபங்க மகரிஷிக்குப் பிரம தேவன் சத்தியலோகத்தை அளித்ததாகச் சொல்ல, அவர் "மற்ற உலகங்களைப்போல அழிந்துபோகும் சத்தியலோகம் எனக்கு வேண்டியதில்லை. என்றும் அழியாத பரமபதத்தைக் கோரி நான் இந்நாள்வரை தபம் செய்தேன். அதை அளிக்க அதோ இராம பிரான் வருகின்றார்" என்று சொன்னார். இராம னைக்கண்ட தேவேந்திரன் அவரை வாயாரத் துதித்து

மறைய, அப்பொழுது ரிஷி இராமபிரானை வர வேற்று "இராமா! உனக்காக இத்தனை நாள் நாங்கள் காத்திருந்தோம். இதோ உன் எதிரில் தீயில் குதிக் கின்றோம். எங்களுக்கு முக்தி அருள்வாய்" என்று வேண்டி, தீயில் தம் மனைவியுடன் மூழ்கி பரமபதம் அடைந்தார்.

பிறகு இராமலக்ஷ்மணர்கள் சீதையுடன் தண்டகவனம் சேர்ந்தார்கள். அங்கே அநேக வரு டங்களாக இராக்கதர்களால் துன்பப்படுத்தப்பட்ட முனிவர்கள் இராமனை நோக்கி "எங்கும் செல்லு தலையுடைய ஆக்ஞா சக்கரத்தினால் இவ்வுலகத்தைக் காப்பாற்றிய செல்வம் நிறைந்த தசரத சக்ரவர்த்தி யின் திருமகனே! எங்கள் வாழ்க்கை நீங்குதலில் லாத இருளால் சூழப்பட்டுள்ளது; நீ ஒரு சூரியன் போல் தோன்றினாய்; அருளும் வீரமும் உள்ள வனே! நாங்கள் உனக்கு அடைக்கலம்" என் றார்கள்.

உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்குஇலா
இருளிடை வைகலேம் இரவி தோன்றினாய்
அருளுடை வீர நின் அபயம் யாம் என்றார்.

— ஆரண்ய : அகத்திய : 16.

இராமபிரான் அவர்களுக்கு அபயமளித்து "நீங்கள் ஒரு சிறிதும் பயப்படவேண்டாம்; எத்தனை இராக்கதர்கள் வந்தாலும் அவர்களை எல்லாம்

கொன்று உங்களைக் காப்பாற்றுவேன்" என்று சொல்லி, அங்கே பத்துவருடகாலம் தங்கியிருந்தார். பிறகு சுதீக்ஷண முனிவர் ஆசிரமத்தை யடைந்து அவர் வழிகாட்ட, அகஸ்தியர் ஆசிரமத்துக்குப்போய் அவரை வணங்கினார்கள். அவர் இவர்களை மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்று "சக்ரவர்த்தித் திருமகனே! நீ இங்கே வசிப்பாயானால், வேதங்கள் வாழும்; மனுநீதி வாழும்; அறம் வாழும்; இப்பொழுது அரக்கர்களால் தாழப்பட்ட தேவர்கள் உயர்வார்கள்; இப்பொழுது உயர்ந்திருக்கிற அரக்கர்கள் தாழ்வார்கள்; இதுமட்டுமா? பதினன்கு உலகங்களும் வாழும்; இதில் சந்தேகம் இல்லை; உண்மையே யாகும்" என்றார்.

வாழும மறை வாழும மனுநீதி அறம வாழும
தாழும் இமையோர் உயர்வர் தானவர்கள் தாழ்வார்
ஆழி உழவன் புதல்வ ஐயம்இலை மெய்யே
ஏழ்உலகும் வாழும் இனி இங்கு உறைதி என்றான்.

— ஆரண்ய : அகத்திய 53.

இவ்வாறு முகமன் கூறி இராமருக்கு மேலான மந்திரங்களை உபதேசித்து, பலமுள்ள பல அம்புகளையும் ஈந்து, அழகுள்ள பஞ்சவடியில் தங்கும்படி உத்தரவளித்தார் அப்படியே மூவரும் பஞ்சவடியை நோக்கிச் செல்லலானார்கள்.

வழியில் ஒரு பெரிய கழுகு உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். அக்கழுகு இவர்களைப் பார்த்து

"நீங்கள் யார் ?" என்று கேட்க, "நாங்கள் அயோத்தியை ஆண்ட தசரதனுடைய குமாரர்கள்" என்றூர்கள். அதைக்கேட்டு அது மிக மகிழ்ந்து "நான் சடாயு என்னும் பெயர்கொண்ட கழுகு அரசன். தசரதர் என்னுடைய நண்பர். அவர் நலமாயிருக்கிரூரா ?" என்று கேட்க, 'அவர் இறந்துவிட்டார்' என்று சொல்லவே மிகவும் புலம்பி, பிறகு எல்லா வரலாற்றையும் இலக்குமணனுல் அறிந்து, "நீங்கள் பஞ்சவடியில் இருங்கள் ; நானும் சமீபத்தில் இருக்கின்றேன். உங்களுக்கு ஆபத்து நேர்ந்தால் என்னுல் இயன்ற அளவு உதவி புரிவேன்" என்று சொல்லி விடைபெற்றுப் போனூர். இராமலக்ஷ்மணர்கள் சீதையுடன் கோதாவரிக் கரையில் இருக்கும் பஞ்சவடி அடைந்தனர். அங்கு இலக்குமணர் ஏற்படுத்திய ஓர் அழகான பர்ணசாலையில் தங்கி இருந்தார்கள்.

இப்படியிருககுங் காலத்து ஒரு நாள் இராமபிரான் குளிப்பதற்காகத் தனியாய்க் கோதாவரிக் சரையைச் சேர்ந்தார் அப்பொழுது, "சிறந்த நீல இரத்தினம் போனற, கருநிறத்தையுடைய அரக்கர்களுக்கு அரசனை இராவணனைக் குலத்தோடு அழியுமபடி செய்யும துர்க்குணத்தை உடையவளான சூர்ப்பனகை, மூதலில் உயிரோடு கூடவே பிறந்து, பின்பு வெளிப்பட்டு, கெடுதிசெய்யும் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு கூடவே தங்கியிருக்கும் கொடிய நோய் போன்றவள்."

நீலமாமணி நிற நிருதர் வேந்தனை
மூலநாசம் பெற முடிக்கும் மொய்ம்பினள்
மேலை நாள் உயிரொடும் பிறந்து தான் வினை
காலம் ஓர்ந்து உடன் உறை கடிய நோயனாள்.

— ஆரண்யகாண்டம்: சூர்ப்பனகை: 8.

*அச்சமயத்தில் ஆகாயத்தில் அவ்வழியாய்ப் போய்க் கொண்டிருந்தவள் இராமபிரானைக்கண்டு அவர்மேல் அளவற்ற காதல் கொண்டாள். "எப்பொழுதும் அதிகமாக விளங்குகின்ற இவ்வழகனுடைய முகத்துக்கு, இரவில் குவிந்தும் பகலில் மலர்ந்தும் வரும் தாமரைமலரை உபமானமாகச் சொல்லலாமா? சொல்லக்கூடாது. சந்திரனைச் சொல்லலாமென்றால், அது வளர்பிறையில் வளர்ந்தும் தேய்பிறையில் தேய்ந்தும் வரும்; பூர்ண சந்திரனைச் சொல்லலாமென்றாலோ, அதற்கும் ஒரு களங்கம் உண்டு என்று சொல்லி எல்லோரும் இகழ்வார்கள்."*

அதிகநின்று ஒளிரும் இவ்வழகன் ஆண்முகம
பொதி அவிழ் தாமரைபபூவை ஒக்குமோ
கதிர் மதியாம் எனில் கலைகள் தேயும் அம்
மதி எனில் மதிக்கும் ஓர்மறு உண்டு என்பரால்.

— ஆரண்ய: சூர்ப்பனகை படலம்: 38.

*என்று இராமபிரான் அழகில் ஈடுபட்டு, ஒரு மந்திரத்தை உச்சரித்து அதன்பயனாய்த் தன் விகார*

மான உருவம்மாறி ஒரு அழகான பெண் வடிவங் கொண்டு இராமர் அருகில் வந்தாள். அவள் வரவை அவளுடைய ஆபரணங்கள் செய்யும் ஒலியால் அறிந்த வேதத்துக்கு முதல்வரான இராமபிரான் 'இலக்ஷ்மியைப் போன்ற அழகும் நற்குணமும் உடையவளே! உன்வரவு நல்வரவு ஆகுக; நீ இவ்விடத்துக்கு வந்தது நாங்கள் செய்த நல்வினையே யாகும்; உன்னுடைய ஊர் எது? உன் பெயர் என்ன? உன் உறவினர் "யார்" என்று கேட்டார். அறிவில்லாத சூர்ப்பனகை தன் கதையைச் சொல்லத் தொடங்கினள்."

தீதுஇல் வரவுஆக, திருநின் வரவுசேயோய்
போதஉளது எம்உழை ஓர்புண்ணியம் அதுஅன்றோ
ஏதுபதி ஏதுபெயர் யாவர்உறவு என்றான்
வேதமுதல்; பேதையவள் தன்னிலை விரிப்பாள்.

— ஆரண்ய : சூர்ப்பனகை : 38.

"நான் பிரமதேவனது பேரனுடைய மகள்: குபேரனுக்கும் இராவணனுக்கும் தங்கை; என் பெயர் காமவல்லி" என்றாள். அதற்கு இராமர் "இரக்கதனை இராவணனுடைய தங்கையானால் உனக்கு இவ்வளவு அழகான உருவம் எப்படி அமைந்தது?" என்று கேட்டார். அதற்கு அவள் "நான் தீயோராகிய அரக்கர்களுடன் வாழ்வதில்லை; தவம்செய்து தேவர்கள் கொடுத்த வரத்தால் இந்தஉருவம் பெற்றேன்" என்றாள். பின்னும்

இராமர் "மூவுலகத்தை ஆளும் இலங்காதிபதியின் தங்கையானல், தோழிமாரும் ஏவலாளரும் இல்லாமல் இக்காட்டில் தனியாய் வந்தது எப்படி?" என்றார். அதற்கு அவள் "நான் இராக்கதருடன் சேருவதில்லை; எப்பொழுதும் தேவர்களுடனும் முனிவர்களுடனும் வாழ்கின்றேன். இப்பொழுது உன்னிடத்தில் ஒரு காரியமாய் வந்திருக்கிறேன்" என்றாள். "அது என்ன" என்று இராமர் கேட்க, "தாங்கள் அடைந்த காமத்தின் தன்மையைத் தாங்களே சொல்லிக்கொள்ளுவ தென்பது நல்ல உயர்ந்தகுலத்தில் பிறந்த மாதர்க்குத்தகுதி அன்று. எல்லா இன்பத்தையும் அடையத்தக்க உயிரோடு கூடி வாழ்வதற்கும் வகையில்லாமல் வருந்துகிறேன்: நான் என்ன செய்வேன்? எனக்குத் துணை யாருமில்லை; ஆதலால், இந்தக்காமன் செய்யும் கொடுமையினின்று என்னை காப்பாற்றுவாய்" என்றாள்.

தாம்உறு காமத்தன்மை தாங்களே உரைப்பது என்பது
ஆம் எனலாவதன்றல் அருங்குல மகளிர்க்கு அமமா
ஏம் உறும் உயிர்க்கு நோவேன் என் செய்கேன் யாரும் இல்லேன்
காமன் என்று ஒருவன் செய்யும் வன்மையைக்காத்தி என்றாள்.

— ஆரண்ய : சூர்ப்பனகை : 45.

இதைக்கேட்ட இராகவர் "சுந்தரி, நீ சொல்வது தொன்றுதொட்டு வரும் சாதிமுறைமைக்கு ஏற்ற செயலன்று: நீயோ பிராமணப்பெண்; நானோ க்ஷத்திரியன்" என்றார்.

சுந்தரீமரபிற்கு ஒத்ததொன்மையின் துணிவிற்று அன்ருல் அந்தணர்பாவை நீ யான் அரசரில் வந்தேன் என்ருன்.

— ஆரண்ய : சூர்ப்பனகை : 49.

*அதற்கு அவள் "என் தந்தை அந்தணன் என்பது உண்மையே; ஆனல் என் தாய் சால கடங்கர் மரபில் பிறந்தவள்; ஆதலால் நாம் மணத்தற்கு ஒரு தடங்கலும் இல்லை" என்ருள். இராமபிரான், "உன் உறவினர் கன்னிகாதனம் செய்து கொடுத்தாலல்லது நான் உன்னை மணக்க முடியாது. மேலும் நான் உன்னுடன் தனியாய்ப் பேசினல் அவர்கள் கோபிப்பார்கள். ஆதலால், நீ இவ்விடத்தைவிட்டுப் போ" என்ருர். அதற்கு அவள் "வேதங்களே மாந்தர் மணப்பதற்காக காந்தர்வம் என்னும் ஓர் முறையை வகுத்து இருக்கின்றன. மேலும், என்னை மணந்தாயானல், உன்னை மூவுலகுக்கும் அரசனுக்கி, தேவர்களும், அரக்கரும் உனக்கு ஏவல்செய்யும்படி கட்டளை இடுவேன்" என்ருள். அப்பொழுது வில்வித்தையில் தேர்ந்த இராமபிரான் "அரக்கருடைய அருளேயும் பெற்றேன்; உன்னல் உண்டாகும் இன்பத்தையும் பெற்றேன்; அதுமட்டுமா! உன்னேடு கூடி அழிவில்லாத செல்வத்தை எப்பொழுதும் அனுபவிக்கும் பாக்கியத்தையும் பெற்றேன்; அயோத்தியை விட்டுக்காட்டில் வந்து நான் செய்த தவத்தின் பயன் இப்பொழுது தான் கிடைத்தது." என்று சொல்லி,*

ஒளி உள்ள பற்கள் விளங்க (பரிகாசமாகச்) சிரித்தார்.

*நிருதர்தம் அருளும் பெற்றேன் நின்நலம்பெற்றேன் நின்னோடு
ஒருவரும் செல்வத்து யாண்டும் உறையவும் பெற்றேன் ஒன்றோ
திருநகர் தீர்ந்தபின்னர் செய்தவம் பயந்த என்று
வரிசிலை வடித்த தோளான் வாள் எயிறு இலங்க நக்கான்

— ஆரண்ய : சூர்பணகை : 56.

அச்சமயத்தில் பர்ணசாலையிலிருந்து சீதையும் வெளியே வரலானாள். அவளைப்பார்த்துச் சூர்ப்பனகை “வாசனை பொருந்திய கூந்தலையுடைய தன் மனையாளை இவன் காட்டுக்குக் கொண்டுவர மாட்டான்; இவ்வளவு அழகான உருவத்தையுடைய பெண் இக்காட்டில் வேறொருவருமில்லை; ஆதலால் தாமரை மலரைவிட்டு, இரண்டு பாதங்களும் பூமியில் படியும்படி, மகாலக்ஷ்மியே இங்கு வந்தாளோ’ என்று மனம் திகைத்து நின்றாள்.

†மருஒன்று கூந்தலாளைவனத்துஇவன்கொண்டுவாரான்
உருவுஇங்கு உடையராக மற்றையோர் யாரும் இல்லை
அரவிந்தமலருள் நீங்கிஅடி இணை படியில தோயத்
திருஇங்கு வருவாள் கொல்லோ என்று அகம் திகைத்து நின்றாள்.

— ஆரண்ய : சூர்ப்பனகை : 59.

---

* (அ-ரை). நிருதர் = அரக்கர் வடித்த=தேர்ந்த. எயிறு=பற்கள்.

† (அ-ரை) மரு = வாசனை. அகம் = மனம். பொன் = இலக்குமி
சாலை = பர்ணசாலை.

பிறகு இவளும் தன்னைப்போல் வந்தவ ளென்று தவருக எண்ணி, "இதோடு" என்ருள். சீதைபயந்து ஓடிவந்து இராமரைத் தழுவிக் கொண்டாள். இராமர் சூர்ப்பனகையைப் பார்த்து "நீ இங்கே இருந்தாயானல் என்தம்பி கோபிப் பான்" என்று சொல்லியும் அவள் போகாதது கண்டு, "கல்போன்ற நெஞ்சை உடைய இவளோடு நாம் உறவு கொள்ளமாட்டோம் என்று பலவாறு சொல்லியும் இவ்விடத்தைவிட்டு நீங்காமல், கபட மான வார்த்தைகளை சொல்லிக்கொண்டிருக்கிருள்" என்று சொல்லி, குற்றமற்ற இராமச்சந்திரர் மின்ன லுடன் நீங்காமல், செல்லும மேகம்போல சனகன் மகளான இலக்ஷ்மிபோன்ற சீதாபிராட்டி யுடன் அங்கிருந்து நீங்கி அந்த அழகிய சோலையி லிருந்த பர்ணசாலையைச் சேர்ந்தார்.

தன்னெடும் தொடர்வு இலாதேம் என்னவும் தவிராள் தான் இக்
கல்நெடும் மனத்தி சொல்லும் கள்ளவாசகங்கள் என்னு
மின்னெடு தொடர்ந்து செல்லும் மேகம்போல் மிதிலை வேந்தன்
பொன்னெடும் புனிதன்போய் அப்பூம்பொழில்சாலை புக்கான்.

— ஆரண்ய: சூர்ப்பனகை: 69.

அதைக்கண்ட அரக்கி "இவள் இவனுடைய மனைவிபோல் இருக்கிறது. இவள் இருக்கிறவரையில் என்னைக் காதலிக்கமாட்டான். ஆதலால் இவளைக் கொல்லவேண்டும்," என்று முடிவுசெய்து கொண்டு, மறுநாள் காலை வழக்கம்போல் இராமபிரான்

கோதாவரிக்குப் போனவுடனே, தன் சுயரூபத்தோடு பர்ணசாலை நோக்கி ஓடினாள். இதை மரத்தடியில் நின்று பார்த்துக்கொண்டிருந்த இலக்குமணர், அவள் மயிரை பிடித்துக்கொண்டு, தன் வாளை உருவி அவளுடைய காதையும் மூக்கையும் அறுத்து விட்டார். அவள் கீழேவிழுந்து ஓ என்று அலறி, அழுது "ஓ இராவணா! இந்திரசித்தே! என்னைக் காப்பாற்றுங்கள். எல்லோரும் கும்பகர்ணனைப்போல் தூங்குகிறீர்களா?" என்று கதறினாள். இராமர் திரும்பிவந்தவர், கீழேபுரளும் அரக்கியைக்கண்டு "நீ யார்?" என்றார். "என்னைத் தெரியாதா? நேற்றும் வந்தேனே, நான் இராவணன் தங்கையான சூர்ப்பனகை" என்றாள். "சிவந்த கயல் மீன்போன்ற கறுத்த பெரிய கண்களோடும், தேன் பொருந்திய தாமரைமலரில் வசிக்கும் இலக்ஷ்மியே இவள் என்று பார்த்தவர்கள் நினைக்கும்படியான தோற்றத்தோடும், நேற்று வந்தவரோ நீர்!" என்று இராமர் கேட்க, "அழகிய கண்களையுடைய அரசனே! முலைகளையும், குண்டலமணிந்த காதுகளையும், கொடிபோன்ற மூக்கையும் அறுத்துத் தள்ளிவிட்டால், ஒருவர்க்கு அழகு அழியாதோ?" என்றாள்.

செங்கயல் போல் கருநெடும் கண் தேமரு
தாமரை உறையும்
நங்கை இவர் என நெருநல நடந்தவரோ தாம்
என்ன,

கொங்கைகளும் குழைக்காதும் கொடி மூக்கும் குறைத்து அழித்தால்

அங்கண் அரசே ஒருவர்க்கு அழியாதோ அழகு என்றாள்.

— ஆரண்ய : சூர்ப்பனகை : 119.

*இராமபிரான் இலக்குமணனைப் பார்த்து "நடந்தது என்ன?" என்று கேட்க, இலக்குமணர் "இவள் யாரோ, தெரியாது. வேகமாக ஓடிவந்து பர்ணசாலையில் நுழையப் போனாள். அதைக்கண்டு நான் அவளைத் தண்டித்தேன்" என்றார். அப்பொழுது இராமபிரான் அவளைப் பார்த்து நாங்கள் உலகமெல்லாம் ஒருத்தனாய் ஆண்ட தசரதனுடைய பிள்ளைகள். எங்கள் சிறிய தாய் சொல்லைக் கேட்டு காட்டில் புகுந்தோம். பிராமணர்களும், முனிவர்களும், வேண்டிக்கொண்டதனால் கடல்போன்ற அளவிட முடியாத இராக்கதர்களைக் கொன்று விட்டுத்தான், மலைபோன்ற சிறந்த மாளிகைகளையுடைய அயோத்தியில் புகுவோம்: இதை நீ நன்றாய்த் தெரிந்து கொண்டு நினைவில் வைத்துக்கொள் என்றார்.*

*தரை அளித்ததனி நேமித்தயரதன் தன் புதல்வர் யாம் தாய் சொல் தாங்கி

விரை அளித்த கான்புகுந்தேம் வேதியரும் மாதவரும் வேண்ட நீண்டு பண்டை

* (அ-ரை) நேமி = ஆகஞாசக்கரம், விரை = வாசனை, வரை = மலை, நெருநல் = நேற்று.

கரை அளித்தற்கு அரிய படைக்கடல் அரக்கர்
குலம் தொலைத்துக்கண்டாய்

வரை அளித்தகுலமாட நகர்புகுவேம் இது தெரிய
மனக்கொள் என்றான்.

— ஆரண்ய : சூர்ப்பணகை : 136.

மேலும், நீ, யார் பலமுள்ள வீரர்கள் என்று நினைக்கிறாயோ, அவர்களையெல்லாம் கொண்டு வா, உன் எதிரிலேயே அவர்களைக் கொல்லுவேன்" என்று கோபத்துடன் கூற! அவள் பயந்து ஓடிப் போய், அக்காட்டில் தன் பாதுகாவலுக்காக இராவணன் ஏற்படுத்திய கரனிடத்தில் முறையிட்டாள். கரன் அவளை நோக்கி "யார் இப்படிச் செய்தார்கள்" என்று கேட்க, "இரண்டு மனிதர்கள்; தவவேடம் பூண்டவர்கள்; கையில் கட்டமைந்த வில்லையும் வாளையும் ஏந்தியுள்ளார்கள்; மன்மதனைப்போன்ற அழகான தேகத்தை உடையவர்கள்; தசரதனுடைய பிள்ளைகள்; போரில் எதிர்ப்படும் அரக்கரைத் தேடித் திரிபவர்கள்" என்றாள்.

இருவர் மானிடர் தாபதர் ஏந்திய
வரிவில் வாள் கையர் மன்மதன் மேனியர்
தரும நீரர் தசரதன் காதலர்
செருவில் நேரும நிருதரைத் தேடுவார்.

— ஆரண்ய : கரன்வதை : 4.

உடனே கரன், பதினன்கு சேனுதிபதிகளை அனுப்பி வைத்தான். அவர்களை எல்லாம் இராம பிரான் சில நிமிஷங்களில் கொன்ருர். சூர்ப்பனகை மறுபடியும் ஓடி கரனிடத்தில் சொல்ல, அவனும், தூஷணனும், திரிசிராவும் அநேக இராக்கதர்களுடன் இராமன்மேல் படையெடுத்து வந்தார்கள். அப்பொழுது இலக்குமணர் தன் தாய் சொன்னபடி தானே போர் புரிய விரும்பி, இராமனைப் பார்த்து, சிங்கத்தைப் போன்ற வலிமையையுடையவனே! இந்தப்போரை எனக்குத்தந்து என் தோளினை வருத்துகின்ற சோம்பலை நீக்கிவிடு என்ருன்.

*ஆளியின் துப்பினுய்இவ்வமர் எனக்கு அருளி நின்று என்
தோளினைத்தின்னு கினற சோம்பினைதுடைத்தி என்ருன்.

— ஆரண்ய: கரன்வதை: 63.

அதற்கு இராமபிரான் "முனிவர்கள் என்னைச் சரணமடைந்த காலத்து, 'நானே இராக்கதர்களைக் கொல்வேன்' என்று வாக்குத்தத்தம் செய்தேன். ஆகையால், இலக்குமணு! நீ சீதையைப்பத்திரமாய் காத்துக்கொண்டிரு' என்று சொல்லி, "காதணிகளை அணிந்த சந்திரனை மலராகப்பெற்ற ஒரு பூங்கொம்பைப் போன்ற சீதை தளர்ந்து வருந்த, இலைகளால் செய்யப்பட்ட பர்ணசாலையிலிருந்து ஒப்

* (அ-ரை.) ஆளி = சிங்கம், துப்பு = வலிமை, அமர் = போர், குழை = காதணி, எயிறு = பல் முறை = மடங்கல் = சிங்கம்.

*பற்ற கோதண்டத்தை ஏந்திய மேருமலை போன்ற இராமச்சந்திரர், மேகங்கள் போல கர்ச்சிக்கின்ற ஒளி விளங்கும் கோரப்பற்களையுடைய இராக்கதர் காணும்படி, குகையினின்று புறப்படும் சிங்கத்தைப் போல் கோபத்துடன் வெளிப்பட்டுச் சென்றார்."*

குழையுறு மதியம் பூத்த
கொம்பனாள் குழைந்து சோரத்
தழையுறு சாலைநின்றும்
தனிச்சிலை தரித்த மேரு
மழைஎன முழங்குகின்ற
வாள் எயிற்று அரக்கர் காண
முழையினின்று எழுந்து செல்லும்
மடங்கலின் முனிந்து சென்றான்.

— ஆரண்ய : கரன்வதை : 65.

*அப்பொழுது கூடப்பிறந்தே கொல்லும் நோய் போன்ற சூர்ப்பணகை "இவன்தான் இராமன்" என்றாள். மூன்று கடிகை நேரம் நடந்த கடும் போரில் இரகுநாதர் வந்த இராக்கதர்களை யெல்லாம் கொன்று விட்டார். "அழகான சிறகுகளையுடைய குளவி தன்னை அடைந்த புழுக்களைத் தன்னைப் போலவே குளவிகளாய் ஆக்குதல் போல, தேவனான இராமபிரான் வஞ்சனைமிக்க இராக்கதரை வளைத்து, தன் அம்புகளின் பரிசுத்தத்தால் தேவர்களாக்கி விட்டார்."*

*அஞ்சிறை அறுபதம் அடைந்த கீடத்தைத்
தஞ்சென தன்மயம் ஆக்கும் தன்மை போல்
வஞ்சகத்து அரக்கரை வளைத்து வள்ளல தான்
செஞ்சரத் தூய்மையால் தேவர் ஆக்கினான்

— ஆரண்ய: கரன்வதை: 125.

ஒருத்தர் பின் ஒருத்தராக வந்த மூன்று வீரர்களும் மடிந்தார்கள். இறுதியில் வந்த கரனோடு போர்புரியும்போது இராமபிரான் தம் வில்லை மிகவும் வளைக்க நேர்ந்ததனால் அது ஒடிந்து விட்டது. அச்சமயம் அவர் தம்கையைப் பின்னே நீட்ட, பின்னால் நின்ற வருணன், முன் இராமர் தன்னிடத்தில் கொடுத்துவைத்த வில்லைக் கொடுக்க, உடனே வாங்கி ஓர் அம்பைப்பூட்டி எய்யவே, கரன் தலை அற்று விழுந்தது.

விழவே, சூர்ப்பனகை தன் தலைமேல் கைகளை வைத்துக்கொண்டு அழுது கொண்டே ஓடி இலங்கையில் நுழைந்தாள். அப்பொழுது "இலங்கையில் சிலர் என்ன ஆச்சரியம்! இராவணன் தங்கை என்று சொன்னவுடனே, அம்மா! தாயே! என்று காலில் விழுவார்களேயல்லாமல், யாராவது ஒருத்தர் இவளுக்குத் தீங்கு செய்வார்கள் என்று நினைக்கவும் முடியுமோ! ஆதலால், இவளுடைய மூக்கை இவளே அறுத்துக் கொண்டாள் போலும்! என்றனர்."

*(அ-ரை.) அறுபதம் = குளவி, கீடம் = புழு, தூய்மை = பரிசுத்தம்.

*என்னையே இராவணன் தங்கை என்றபின்
அன்னையே என்று அடி வணங்கல் இன்றியே
உன்னவே ஒண்ணுமோ ஒருவரால் இவள்
தன்னையே அறுத்தனன் தான் என்றார் சிலர்.

— ஆரண்ய : மாரீசன் வதை : 30.

*இலங்கையில் இராவணன் கொலுவீற்றிருக்கும் சபையில் புகுந்து, அவன் அடிமேல் விழுந்து, "அண்ணா! எனக்கு நேர்ந்த அவமானத்தைப் பார்" என்று கதறினாள். அதைக்கண்ட இராவணன் "உன்னை இப்படி செய்தவர் யார்?" என்றான். "தசரதனுடைய பிள்ளைகள், இருவர் தவவேடம் பூண்டுள்ளார்கள். ஒரே உலகத்தில் இரண்டு மன்மதர்கள் இருக்கிறார்களா! வில்வித்தையில் அவர்களை விட வல்லவர்கள் யாராவது உண்டோ? அழகிலும் வல்லமையிலும் அவர்களுக்கு சமானமாக எவரைச் சொல்லமுடியும்! அவர்களில் ஒவ்வொருவரும் திரிமூர்த்திகளுக்குச் சமானமானவர்கள்."*

மாரர் உளரே இருவர் ஓர் உலகின் வாழ்வார்
வீரர் உளரே இவரின் வில்லதனின் வல்லார்
யார் ஒருவர் அன்னவரை ஒப்பவர்கள் ஐயா
ஓர் ஒருவரே இறைவர் மூவரையும் ஒப்பார்

—ஆரண்ய : மாரீசன் : 36.

**(அ-ரை) உன்னல் = *நினைத்தல்.***

இராவணன், "கரன் உன்னைக் காப்பாற்ற வில்லையோ?" என்று கேட்டான். "கரதூஷண திரிசிரர்களையும், கணக்கற்ற இராக்கதசேனையையும், மூன்று கடிகை நேரத்தில் இராமன் ஒருத்தனே கொன்றான்" என்றாள். "உன்னை இப்படிப் பங்கம் செய்வதற்குக் காரணம் என்ன" என்றான். அதற்கு சூர்ப்பனகை "இராமனுடைய மனைவி சீதை ஒப்பு உயர்வு இல்லாத கட்டழகுடையவளும் காமரமென்னும் பண்போன்ற இசைப்பாட்டையும், தேன் போன்ற இரசம் நிறைந்த இனிய சொல்லையும், வண்டுகள் மொய்க்கும் மலரையுடைய கூந்தலையுடையவளும், தேவர்களும் அதிசயிக்கத்தக்க அழகுடைய தேவமாது என்று சொல்லத்தக்கவளுமாய் இருக்கின்றாள். அவளுக்குத் தாமரையிலிருக்கும் இலக்குமி ஏவல் செய்வதற்கும் யோக்கியதை இல்லாதவளாவள்; நம்மைப்போன்றவர் அவளுடைய அழகை எடுத்து உரைக்க முயல்வது அறியாமையே ஆகும்.

* காமரமுரலும் பாடல் கள்ளென கனிந்த இன்சொல்
தேமலர் நிறைந்த கூந்தல் தேவர்க்கும் அணங்காம் என்ன
தாமரை இருந்த தையல் சேடியாம் தரமும் அல்லள்
யாம் உரை வழங்கும் என்பது ஏழைமைப்பாலதன்றே.

— ஆரண்ய : மாரீசன் வதை: 96.

---

(அ-ரை.) கள்=தேன், அணங்கு=தேவமாது, சேடி=தோழி.

"ஆகாயத்தை அளாவிய மார்பைஉடையவனே! பரமசிவன் ஒரு பெண்ணை இடப்பாகத்தில் வைத்துக்கொண்டார்; இலக்குமியைத் திருமால் மார்பில் வைத்துக்கொண்டார்; பிரமதேவர் சரஸ்வதியை நாக்கில் வைத்துக்கொண்டார்; மேகத்திலே தோன்றும் மின்னலைவிட மெல்லிய இடையை உடைய சீதையை நீ பெற்றால் எங்ஙனம் வைத்து வாழப் போகிறாய்?"

*பாகத்தில் ஒருவன் வைத்தான்
பங்கயத்து இருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான்
அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தின் மின்னை முன்னே
வென்ற நுண் இடையை நீயும்
மாகத்தோள் வீர பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்தி!

—ஆரண்ய: மாரீசன்: 76.

என்று பலவாறு சீதையின் அழகை வர்ணித்து "அப்படிப்பட்டவளை உனக்காக எடுக்கப்போனேன். அப்பொழுது இராமன் தம்பி என் மூக்கை அறுத்தான்" என்றாள்.

சீதையின் வர்ணனையைத் தன் தங்கை சொல்லக் கேட்ட இராவணன் 'தன் தம்பியான கரன் கொல்

* (அ·ரை.) ஆகம் = மார்பு, மாகம் = ஆகாயம்.

லப்பட்டதையும் மறந்தான்; தன் தங்கையின் மூக்கை அறுத்தவனுடைய வலிமையையும் மறந்தான்; அதனால் தனக்கு உண்டான பழியையும் மறந்தான். பரமசிவனையும் தோற்கடித்த காமனுடைய அம்பினாலே, "எந்தப் பெண்ணையாவது வலிய கற்பழித்தாயானால் நீ இறக்கக் கடவாய்" என்று முன் தனக்கு வேதவதி கொடுத்த 'வரம்' ஒன்று உளது. வரங்கேட்ட காலத்தில், மனிதனால் தனக்குச் சாவு நேரலாகாது என்று கேட்டுப் பெற்றிலன். ஆகவின், மனிதனால் சாவு வரலாமன்றோ? ஆகவின், முன்னைப்பெற்ற வரன்" என்றார் என்பர். ஆகவே, சாபத்தையும் மறந்தான். ஆனால் கேட்ட சீதையை மாத்திரம் மறக்க முடியவில்லை.

கரனையும் மறந்தான் தங்கை மூக்கினைக்கடிந்து நினருள்
உரனையும் மறந்தான் உற்ற பழியையும்மறந்தான்வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினால் முன்னைப்பெற்ற
வரனையும் மறந்தான்கேட்ட மங்கையை மறந்திலாதான்.

— ஆரண்ய : மாரீசன் வதை : 83.

சீதைமேல் உண்டான காமம் வேகமாக அதிகரித்து உடலெல்லாம் வெந்துபோக ஒரு பளிங்கு மாளிகையில் பூவினால் செய்த படுக்கைமேல் படுத்தபொழுது தன் கண் எதிரே ஓர் அழகான பெண் நிற்பது கண்டு, அதை உருவெளித் தோற்

* (அ ரை.) உரன்=வலிமை, வரன்=வரம்.

றம் என்று அறியாமல், சீதைதான் என்று நினைத்து சூர்ப்பனகையை அழைத்துவரச் சொன்னான். அவள் வந்தாள். "பகைவருடைய கொழுப்புத்தோய்ந்து நின்ற கூறிய வாளையுடைய இராவணன், அந்த அறையில் வந்து புகுந்த பொய் குடிகொண்டிருக்கும் நெஞ்சையுடைய கொடியவளான சூர்ப்பனகையைப்பார்த்து, பெண்களிற் சிறந்தவளே ! நேராகப் பார். மை தீட்டிய வாள்போன்ற கண்களையுடையவளும், மயில் போன்ற சாயலை உடையவளுமாய், இங்கே வந்து என் முன் நிற்கின்ற இந்தப் பெண் தானே நீ சொன்ன சீதை என்று கேட்டான்.'

பொய் நின்ற நெஞ்சில் கொடியாள் புகுந்தாளை நோக்கி
நெய் நின்ற கூர்வாள் அவன் நேர்உற நோக்கு நங்காய்
மை நின்ற வாள் கண் மயில் நின்றென வந்து என்முன்
இந் நின்றவளாம் கொல் இயம்பிய சீதை என்றான்.

— ஆரண்ய : மாரீசன் வதை ; 148.

அதற்கு சூர்ப்பனகை, "ஆம், செந்தாமரை மலர்போன்ற கண்களோடும், அழகு நிறைந்த பெரிய தோள்களோடும், முழங்கால்வரை தாழ்ந்த பெரிய கைகளோடும், அழகிய மாலையை அணிந்த மார்பினோடும், மை மலைபோல இங்கு வந்தவன்தான் வலிமை பொருந்திய வில்லை ஏந்திய இராமன்" என்று சொன்னாள்.

*செந்தாமரை கண்ணொடும் செங்கனி வாயினோடும்
சந்தார் தடம் தோளொடும் தாழ் தடக்கைகளோடும்
அந்தார் அகலத்தோடும் அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவனாகும் அவ்வல்வில் இராமன் என்றாள்.

— ஆரண்ய : மாரீசன் வதை : 149.

அதைக்கேட்ட இராவணன், "அடி பைத்தியக்காரி! நான் கண்டது பெண் உருவம்; நீயோ ஓர் ஆண் உருவம் கண்டாய். நாம் மனிதர்களை மயக்குவது வழக்கம். இப்பொழுது மனிதர்கள் நம்மை மயக்குகிறார்கள். சரி. நான் சீதையை அடைந்தாலல்லது உயிர்வாழ முடியாது" என்று சொல்லி உடனே புறப்பட்டு, தன் மாமனும், தாடகையின் மகனும், முன்னர் விசுவாமித்திரன் யாகத்தினின்றும் இராமன் அம்புக்குத் தப்பிக் கடலில் மூழ்கினவனுமான, மாரீசனிடத்தில் சென்றான். மாரீசன் இவனைக்கண்டு என்றும் வாராதவன் ஏன் வந்தானோ என்று பயந்து அவனை வரவேற்று, "இவ்வளவு தூரம் வந்ததற்குக் காரணம் என்னவோ!" என்று கேட்டான். அப்பொழுது இராவணன் சீதையினிடத்தில் தனக்குள்ள அளவற்ற காதலைக் கூறினான். அதைக்கேட்ட மாரீசன் "இராவணா! நீ இராமனைச் சாதாரண மனிதன் என்று நினைக்காதே, அவனைப் பகைத்தாயானால் இராக்கதகுலம் முழுவதும் அழிந்துபோம்" என்றான். இதைச் சொன்னதும்

(அ-ரை.) சந்து = அழகு, அஞ்சனம் = மை.

இராவணன் அடக்கமுடியாத கோபங்கொண்டு, "நான் சொன்னபடி செய்கிறாயா? அல்லது இப்பொழுதே கொன்று விடட்டுமா? என்று வாளை உருவினான். மாரீசன் "உன்னுடைய நன்மையைக் கருதி உண்மையைச் சொன்னேனேயல்லது எனக்குச் சாவு உண்டாகும் என்று பயந்து சொன்னது அல்ல. கேடு வரும் காலத்து ஒருவர் நன்மையைச் சொன்னாலும் அது கெடுதிபோலத்தான் தோன்றும். ஆதலால், அறிவில்லாதவனே! நான் செய்யவேண்டிய காரியத்தைச் சொல்" என்றான்.

*உன் வயின் உறுதிநோக்கி உண்மையை உணர்த்தினேன் மற்று
என் வயின் இறுதி நோக்கி அச்சத்தால் இசைத்தேன் அல்லேன்
நன்மையும் தீமை அன்றோ நாசம் வந்து உற்றபோது
புன்மையின் உற்ற நீராய் செய்வது புகறி என்றான்.

— ஆரண்ய : மாரீசன் வதை : 202.

இராவணன் கோபம் அடங்கி, "காமத்தால் சாவதைவிட இராமன் அம்பால் போர்க்களத்தில் செத்துப்புகழ் பெறுவதே மேலானது. ஆதலால், நீ எப்படியாவது நான் சீதையை அடையும்படி செய்ய வேண்டும். ஒரு பொன்மானைப்போல் வேடம் தரித்து அவர்கள் வாழும் பர்ணசாலையினிடத்தில் நீ திரிவாயானால், இராமன் உன்னைப் பிடிக்க வருவான். வெகுதூரம் சென்றபிறகு, "சீதா, இலக்குமணா!

* (அ-ரை.) நீராய்=உடையவனே! புகறி=சொல்லுவாய்.

என்று உரத்த குரலில் கூவி நீ மறைந்துபோ' என்ருன். இதற்கு இசைந்து சென்ற மாரீசன் எவ்வுலகத்துமில்லாத ஓர் அற்புதமான மான் வடிவம் கொண்டு, இயற்கையான மான் புல் மேய்வது போல் சீதை காணும்படி மேயலாஞன்.

இதைப் பார்த்ததே, எல்லாவற்றையும் விட்டுத் தன் கணவன்பின் காட்டில் புகுந்த சானகி, விதி வசத்தால் இதன் மேல் அதிக விருப்பம் கொண்டு, பர்ணசாலைக்குள் விரைந்து சென்று, "இதோ பாருங்கள். ஒரு பொன்மயமான மான் வந்து மேய்கின்றது.' என்ருள். இராமபிரான் வெளியில் வந்து பார்த்து, "இலக்ஷ்மணு! இதற்கு ஒப்பாக எதைச் சொல்ல முடியும்!" என்று அதிசயப்பட்டார். அப்பொழுது இலக்குமணர், "இது இயற்கை அல்ல. இராக்கத மாயைபோல் தோன்றுகிறது. வந்தோம். பார்த்தோம். இனி போகலாமே" என்ருர். அதற்குள் சீதை, இதைப் பிடித்துத் தந்தால், நாம் அயோத்திக்குப் போனபின் நம் அரண்மனையை அழகுபடுத்தும, என்ருள். உடனே இலக்குமணர், "இது இராக்கதமாயை. இதனல் நமக்குத் துன்பம் விளையும்" என்ருர். அதற்கு இராமபிரான், "இராக்கதனைல் கொல்வோம்; இல்லையாஞல் பிடித்துக்கொள்வோம்." என்ருர். "அப்படியாஞல் நான் பிடித்துக் கொண்டுவருகின்றேன்" என்று இலக்குமணர் புறப்பட்டார். "அப்

பொழுது அன்னப்பேடை போன்ற நடையினை யுடைய சீதாபிராட்டி மிகவும் வருந்தி, சிவந்த வாயினின்றும் அமிர்தம் ஒழுகுவதுபோல குழந்தைகள் பேசும் மழலைச் சொற்களால் கிளிகள் கொஞ்சுவது போலக் குழறிக்கொண்டு, "நாயக, நீர் பிடித்துத் தரமாட்டீரோ?" என்று சொல்லி, சிவந்த இரேகைகளையுடைய நீலோற்பல மலர்களிலிருந்து முத்துக்கள் சிந்துவதுபோல், கண்களினின்றும் தாரை தாரையாய்க் கண்ணீர் ஒழுக, பர்ணசாலைக்குப் போனாள்."

*ஆயிடை அன்னம் அன்னாள் அமுதுஉடுத்து அனையசெய்ய
வாயிடை மழலை இன் சொல் கிளியினில் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி நல்கலை போலும் என்னாச்
சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சிதறப்போனாள்

— ஆரண்ய : மாரீசன் வதை : 237

அதைக்கண்டு, "மலையின் உச்சிபோல் உயர்ந்ததும், அழகுடையதுமான தோள்களை உடைய இராமபிரான், ஆலோசனையுடைய தம்பி சொன்ன மொழியை மனத்தில் ஏற்றுக் கொள்ளாமல், சந்திரனுக்கு உவமை கூறத்தக்க முகத்தையுடைய சீதையின் கோபத்தையே நோக்கி, சிந்துரமும் பவளமும்போன்ற சிவந்த வாயில் புன்சிரிப்புத் தோன்ற, அந்த மானைத் தொடர்ந்து சென்றார்."

*(அ-ளை.) மாழ்கி = வருந்தி, குழறி = குளறி, சிந்துபுசிதறி = மிக சிந்த.

*மந்திரத்து இளையோன்சொன்ன வாய்மொழிமனத்துக்கொள்ளான்
சந்திரற்கு உவமை சான்ற வதனத்தாள் சலத்தை நோக்கிச்
சிந்துரப் பவளச் செவ்வாய் முறுவலன் சிகரச்செவ்விச்
சுந்தரத்தோளினுன் அம் மானினைத் தொடரலுற்றன்

— ஆரண்ய : மாரீசன் வதை : 240.

"இலக்குமணு! நீ சீதையைக் காத்துக்கொண்டிரு. விரைவில் இம்மானைப் பிடித்துக்கொண்டு வருகிறேன்" என்று தன் வில்லை எடுத்துக்கொண்டு மானின் பின் தொடர்ந்தார். மானும் முதலில், மெல்ல மெல்ல காடுகளில் நுழைந்தும், ஆறுகளைக் கடந்தும், மலைகள்மேல் தாவியும், பள்ளத்தாக்கில் குதித்தும், வெகுதூரம்வரை இராமர் தன்பின் வரும்படி சென்றது. அப்பொழுது இராமபிரான் "இலக்குமணன் சொன்னது சரி; இது மாய மான்தான்" என்று தெளிந்து, தன் வில்லில் அம்பைத்தொடுத்து எய்தார். தன் உண்மை உருவத்துடன் கீழே விழும் மாரீசன், "சீதா, இலக்குமணு!" என்று கூவி இறந்தான். இதனுல் என்ன தீங்கு விளையுமோ! என்று பயந்து இராமபிரான் மிக்க வேகமாய் திரும்பிவரலானுர்.

மானை பிடிக்கப்போன இராமபிரான் எப்பொழுது திரும்பி வருவாரோ! என்று எதிர்பார்த்திருந்த சீதை, மாரீசன் குரலைக்கேட்டு, அது இராம

* (அ ரை.) மந்திரம் = யோசனை, சலம் = கோபம், முறுவல் = புன்சிரிப்பு.

*பிரான் குரல் என்று தவருக எண்ணி பயந்து, இலக்குமணனை நோக்கி, "உம்முடைய அண்ணலார் ஆபத்துக்குள்ளானுர் என்று அறிந்தும் ஏன் சும்மா நிற்கின்றீர்?" என்று கேட்டாள். அதற்கு இலக்குமணன் "அற்ப உயிர்கள் வாழும் இவ்வுலகில் இராமபிரானிலும் பலத்தில் மேற்பட்டவர்கள் இருக்கிருர்கள் என்று சொல்லலாமோ? நீர் உம்முடைய பெண் தன்மையால் இவ்விதம் உரை செய்தீர்" என்று உண்மையை உணர்ந்தவன் சீதைக்குத் தெரியச் சொன்னுன்.*

எண்மையார் உலகினில் இராமற்கு ஏற்றம் ஓர்
திண்மையார் உளர் எனல் செப்பற்பாலதோ
பெண்மையால் உரைசெயப் பெறு திரால் என
உண்மையான் அனையவட்கு உணரக் கூறினுன்.

— ஆரண்ய : சடாயு உயிர்நீத்த படலம் : 5.

*மேலும் "மேகத்தைப் போன்ற கறுத்த நிறத்தையுடைய புண்டரீகாக்ஷனையாரென்று நினைத்துத் துன்பத்தில் அழுந்துகிறீர்" என்ருன்.*

கார் என கரியஅக் கமலக் கண்ணனை
யார் எனகருதி இவ்விடரின் ஆழ்கின்றீர்.

— ஆரண்ய : சடாயு : 7.

*சீதை கோபங் கொண்டு "நீர் உடனே செல்லாவிட்டால் நான் காட்டுத் தீயில் விழுந்து உயிரை*

இழப்பேன்" என்று புறப்பட்டாள். இலக்குமணன் கைகூப்பி, "நீர் ஏன் இறக்க வேண்டும்; நீர் சொன்ன சொல் எனக்குப் பயத்தைத் தருகின்றது. இனி அதை மறக்கமாட்டேன். துன்பத்தை விட்டு இங்கே இருப்பீராக. அடியேன் போகின்றேன். கடுமையான விதியினை நாம் வெல்ல முடியுமோ?

துஞ்சுவது என்னை நீர் சொற்ற சொல்லை யான்
அஞ்சுவன் மறுக்கிலேன் அவலம் தீர்ந்து இனி
இங்கிரும் அடியனேன் ஏகுகின்றனேன்
வெஞ்சின விதியினை வெலல வல்லமோ!

— ஆரண்ய : சடாயு : 15.

என்று சொல்லி, 'ஏதாவது ஆபத்து நேர்ந்தால் சடாயு இருக்கின்றார்' என்று நினைத்து விரைவில் இராமபிரான் சென்றவழி போனான்.

மறைவில் நின்று பார்த்திருந்த இராவணன், "இதுதான் நல்ல சமயம் என்று நினைத்து, மாறு வேடம் பூண எண்ணி, தலையில் நரைத்த சடையும், உண்ணாவிரதத்தால் மெலிந்த மேனியும், வயது முதிர்ந்ததனால் தளர்ந்த நடையும், கையில் முப்பகையும் வென்ற தண்டும் ஏந்திய ஓர் கிழச்சந்நியாசி வேடம் தரித்து, நெடுந்தூரம் காட்டில் நடந்து வந்ததனால் உண்டான களைப்புத் தோன்றும்படி மெல்ல நடந்து வந்து, மெல்லிய குரலில் "இந்தக் குடிசை

யில் இருப்பவர் யார்?" என்று கேட்டான். யாரோ முனிவர் வந்தார் என்று நினைத்த சீதை வெளியில் வந்து பார்த்தாள். அவளைப் பார்த்தவுடனே இராவணனுடைய மனம் முதலில் கலங்கி, பின்பு அளவிலாமகிழ்ச்சியை அடைந்தது. சிவந்த இதழ்களையுடைய தாமரை மலரை நீங்கி இங்கே வந்தவளான சீதையின் இரத்தின காந்தியையுடைய திருமேனி அழகைக் காணுவதற்கு எனக்குள்ள இந்த இருபது கண்கள் போதுமோ? இமையாத கண்கள் ஆயிரம் இல்லையே" என்று இராவணன் துன்பத்தை அடைந்தான்.

*சேய் இதழ்த்தாமரைச் சேக்கை நீத்து இவண்
மேயவள் மணி நிற மேனி காணுதற்கு
ஏயுமே இருபது இங்கு இமைப்பில் நாட்டங்கள்
ஆயிரம் இல்லை என்று அல்லல் எய்தினன்.

— ஆரண்ய : சடாயு : 29.

அப்பொழுது சீதை "உள்ளே எழுந்தருளுங்கள்" என்று ஓர் ஆசனமிட்டு உபசரித்தாள். உட்கார்ந்த இராவணன், "இங்கு இருப்பவர் யாவர்? நீ யார்?" என்றான். சீதை "அயோத்தியையாண்ட தசரதருடைய மூத்த மகன். தாய் சொல் கேட்டுத் தம்பியுடன் காட்டுக்கு வந்திருக்கிறார். நான் அவர் மனைவி சனகமகாராஜாவின் மகள் என்று சொல்லி,

*(அ-ரை) சேய்=சிவந்த, சேக்கை=தங்குமிடம், அல்லல்=துன்பம்

"நீர் எங்கிருந்து வருகின்றீர் ?" என்று கேட்டாள். அவன் "மூவுலகத்தையும் ஆள்பவனான இராவணேசுவரனைப் பார்ப்பதற்காக இலங்கைக்குப் போய்த் திரும்பி வருகின்றேன்" என்றான். சீதை அதற்கு "முனிவரான நீர் அந்தப் பாதகரான இராக்கதர் ஊருக்குப் போகவேண்டிய காரணம் என்ன ?" என்று வினவினாள். இராவணன் "இராக்கதரைப் பாதகர் என்று நினைப்பது தவறு. இராக்கதர் சென்றவழி மனிதர் செல்வராயின் உலகத்துக்கு நன்மையுண்டாகும்." என்றான். அதைக்கேட்ட சீதை, இவன் யாரோ என்று சந்தேகித்து, "என் கணவர் இங்கிருக்கும்போது இராக்கதர் வருவாராயின் எல்லோரும் மடிந்து போவார்கள்" என்றாள். "சிங்கத்தை மான் கொல்லுமோ!" என்று இராவணன் சிரித்தான். சீதை "கரன் முதலான கணக்கிலா இராக்கதரைத் தாம் ஒருவராய் நின்று மூன்று கடிகையில் கொன்றதை நீர் கேட்கவில்லை போலும்!" என்றாள். இதைக் கேட்டதே அவன் கோபங்கொண்டு "நீ அறிவில்லாத பெண் ஆனதினால் இராவணனுடைய வீரத்தை அறியமாட்டாய்" என்றான். அப்பொழுது சீதை, "இராவணனைக் கார்த்தவீர்யார்ச்சுனன் ஜெயித்தான். கார்த்தவீர்யார்ச்சுனனைப் பரசுராமன் தோற்கடித்தான். அந்தப் பரசுராமனை என் நாயகர் வென்றார்" என்றாள். உடனே இராவணன் நாகத்தைப்போல் சீறி எழுந்தான். அவனுடைய மாயவேடம் நீங்கியது.

பத்துத் தலைகளோடும், இருபது கைகளோடும், தன் சுயரூபம் கொண்டு இடிபோல கர்ச்சித்தான். சீதை, இவன் இராவணன் என்று அறிந்து நடு நடுங்கி, யமனைக் கண்டவள் போல் பயந்தாள்.

இராவணன், "சீதா, நீ என்னை மணந்தாயா னால், உன்னை மூவுலகத்துக்கும் அரசியாக்குவேன்" என்றான். இதைக்கேட்டவள், பயம் தெளிந்து, "நிலையில்லா இந்த உயிரைக் காப்பாற்றுவதற்காக என் கற்பை விடுவேனோ? உன்உயிரைக் காப் பாற்றிக்கொள்ள எண்ணினால் உடனே ஓடிப்போ" என்றாள். இராவணன் "இராமன் அம்பு என்னைக் கொல்லாது. நீ விரைவாக என்னுடன் வா" என்றான். சீதை பயந்து, "நாயகா!" என்று கதறிக் கீழே விழுந்தாள்,

இராவணன் அவளைத் தீண்ட அஞ்சி, பூமி யுடன் பெயர்த்து எடுத்துத் தன் தேரின்மேல் வைத்துக்கொண்டு தேரை ஆகாயத்தில் செலுத்தி னான். அதைக்கண்ட சீதை "என்னைக்காப்பாற்று பவர் யாரும் இல்லையா!" என்று அழுதபோது, "நில்லடா, நில்லு, நில்லு," என்று பேரிரைச் சலிட்டுக்கொண்டு, சடாயு இராவணனை எதிர்த்து, அவன் தேர்க்கொடியை அறுத்து, அவன் கிரீடங் களையும் கீழே தள்ளினார். இராவணன் கோபாவேச னாய், தனக்குச் சிவன் கொடுத்த வாளை உருவிச் சடாயுவின் இறக்கைகளை அறுத்துவிட்டான்.

சடாயு கீழே வீழ்ந்தார். இராவணன் தேரை வேகமாய் ஆகாயத்தில் செலுத்திக்கொண்டு போகலானன். அப்பொழுது சீதை "ஆபத்தில் அகப்பட்ட என்னை அருகில் வந்து 'அஞ்சாதே' என்று சொல்லிய இந்த நல்லவனு தோல்வியடைவது? இந்தப்பாவியான இராவணனு வெற்றி அடைவது? பாவந்தானு வெல்வது? தர்மம் வெல்லும் என்று சொல்லிய வேதம் பொய்த்துப் போகுமோ? இவ்வுலகத்தில் தர்மம் என்பது ஒன்று இல்லையோ?" என்று புலம்பினுள்.

அல்லல் உற்றேனை வந்து அஞ்சல் என்ற இந்
நல்லவன் தோற்பதே! நரகன் வெல்வதே!
வெல்வதும் பாவமோ! வேதம் பொய்க்குமோ!
இல்லையோ அறம் என இரங்கி ஏங்கினுள்.

— ஆரண்ய : சடாயு : 133.

இவ்வாறு பலவிதமாகப் புலம்பி, கீழே ஓர் குன்றின்மேல் சில குரங்குகள் இருப்பதைப் பார்த்து. "இவர்கள் என்னைக் கொண்டுபோன திக்கை என் கணவனுக்குச் சொல்லுவார்கள்" என்று நினைத்து, தன் ஆபரணங்களைக் கழற்றி முன்தானியில் சிறிது கிழித்து, அதில் ஒரு சிறு மூட்டை ஆக்கி அவர்கள் நடுவில் எறிந்தாள். பிறகு இராவணன் இலங்கையைச் சேர்ந்து, அசோகவனத்தில் அவளைச் சிறை வைத்து, கோரரூபமுள்ள அரக்கிமாரைக் காவல்வைத்துப் போனுன்.

இப்பால், வேகமாய்த் திரும்பிவரும் இராம பிரான், இலக்குமணன் வருவதைக்கண்டு திடுக்கிட்டு, நடந்ததை அறிந்து வருந்தினர். இருவருமாய் விரைவில் பர்ணசாலையைச் சேர்ந்து, சீதையைக்காணுமல் சுற்றுப்பக்கமெல்லாம் தேட, பூமியில் தேர் தெற்குத் திக்காய் நடந்த அடையாளத்தைப் பார்த்து, யாரோ தேரின்மேல் அவளைத் தூக்கிக்கொண்டு போயிருக்கிருர்களென்று எண்ணி, அதன்வழியே செல்ல, அந்த அடையாளம் திடீரென்று மறைந்தது. அதனுல் தேரை ஆகாயத்தில் செலுத்திஞன் என்று தெரிந்து கொண்டு, பின்னும் சிறிது தூரம் அந்த தெற்குத் திக்கின் வழியே செல்ல, ஒடிந்துவீழ்ந்த ஒருகொடி காணப்பட்டது. இதனுல், 'யாரோ எதிர்த்துள்ளார்கள்' என்று அறிந்து, பின்னும் சிறிது தூரம் செல்ல, குண்டலங்களும், கிரீடங்களும் கண்டு பலர் போர் செய்தனரோ என்று எண்ணி, வேகமாய் இருவரும் ஓடும் வேளையில், பூமியின்மேல் ஒரு வெள்ளி மலைபோல் சடாயு விழுந்திருப்பதைக் கண்டார்கள். அவர் இறந்துவிட்டாரோ என்று பயந்து, பிறகு அவர் கண்விழிக்க, பயம் தெளிந்தார்கள். "நடந்தது என்ன" என்று அவர் கேட்க, இராமபிரான் "எடுத்துக் கொண்டு போனவன் யார்?" என்று வினவ, "கொண்டு போனவன் இராவணன். அவனைத் தடுத்தபோது என் சிறகை அறுத்தான்" என்ருர். அதைக்கேட்ட இராமபிரான் அடக்க முடியாத கோபங்கொண்டு "இதோ, இப்

பொழுதே இவ்வுலகத்தை எல்லாம் அழிக்கின்றேன்" என்று தன் வில்லை எடுக்க, அப்பொழுது சடாயு, "அம்பைத்தொடுக்கும் கட்டமைந்த வில்லைப் பிடித்த அழகிய கைகளையுடைய மக்களே! கச்சையணிந்த கொங்கைகளை யுடையவளும், வஞ்சிக் கொடி போன்ற மெல்லியவளுமான சீதையைக் காட்டில் தனியே விட்டு, கொம்புகளையுடைய மானின்பின் இருவரும் போய் உங்கள் குலத்துக்குப் பழியை உண்டாக்கிக் கொண்டீர்கள். ஆராய்ந்து பார்த்தால் இது உங்கள் குற்றமேயல்லாமல் உலகம் செய்த குற்றம் ஒன்றுமில்லை" என்றார்.

*வம்புஇழை கொங்கை வஞ்சி
வனத்திடைத்தமியள் வைகக்

கொம்புஇழை மானின் பின்
போய்க் குலப்பழி கூட்டிக்கொண்டீர்

அம்புஇழை வரிவில் செங்கை
ஐயன் மீர் ஆயுங்காலை

உம் பிழை என்பதல்லால் உலகம்
செய் பிழையும் உண்டோ.

— ஆரண்ய: சடாயு: 211.

இராமபிரானும் கோபம் மாறி, 'இராவணன் எங்கிருப்பவன்' என்று கேட்க, அதைச்சொல்ல

* (அ-ரை). வம்பு = கச்சு = இரவிக்கை, வஞ்சி = கொடி.

வாயைத்திறந்தவர் உயிரைவிட்டார். அதனால் மிக்க சோகமடைந்து, இருவரும் அவருக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களை யெல்லாம் செய்து முடித்தார்கள்.

'இனி, சீதையைத் தேடுவதே வேலை' என்று தீர்மானித்து, தெற்குத்திக்கில் நெடுந்தூரம் சென்ற பொழுது சூரியன் மறைந்தான். இருவரும் ஒரு மலைக்குகையில் தங்கி இருக்கையில், இராமன் சீதையை நினைந்து புலம்ப, இலக்குமணன் தேற்ற ஆற்றி, " இலக்குமணா! எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா " என, உடனே இலக்குமணர் புறப்பட்டார். சிறிது தூரம் சென்றதும் அங்கேயிருந்த அயோமுகி என்னும் அரக்கி, இலக்குமணன்மேல் காதல்கொண்டு "என்னை மணக்க வேண்டும்" என்றுகூற, அதை இலக்குமணன் மறுக்க, அவள் அவரைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினாள். இலக்குமணன் வாளை உருவி அவள் காதையும் மூக்கையும் அறுத்தான். அவள் அலறிக்கொண்டு கீழே விழுந்தாள்.

இதைக்கேட்ட இராமபிரான், ஏதோ விபத்து நேர்ந்ததென்று பயந்து, தன் ஆக்நேயாஸ்திரத்தைச் சுழற்ற, அது இரவைப் பகலாக்கியது. அதன் ஒளியால் இலக்குமணன் வருவதைக்கண்டு, நடந்ததை அறிந்து, இருவரும் குகைக்குத் திரும்பி இரவைக் கழித்தார்கள்.

பொழுது விடிந்தபிறகு பின்னும் அநேக காத வழி சென்றனர். செடிகளும், மரங்களும் ஒடிக்கப் படும் சப்தமும், விலங்குகளெல்லாம் பயந்து ஓடுவதும் அறிந்து, இதற்குக்காரணம் என்ன? என்று கவனிக்க, அங்கு ஒரு கோரரூபமுள்ள இராக்கதன் வயிற்றில் வாயையுடையவனாய், எல்லா வற்றையும் தன் கைகளால் வாரி வாயில் இடுவது கண்டு, இராமபிரான் வாளை உருவி அவன் கைகளை வெட்ட, உடனே அவன்உடலில் இருந்து ஓர் ஒளி கிளம்பி, ஓர் கந்தர்வனாய் ஆகாயத்தில் தோன்றி, இராமச்சந்திரனைத் துதித்து, "நீ சபரி என்னும், தவசியிடம் சென்றால் அவள் சீதையைத் தேடும் வழியைச்சொல்வாள்" என்று சொல்லி மறைந் தான்.

அவன் சொல்லியபடியே, மதங்காச்ரமத்தை யடைந்து, அங்கே தம்மை எதிர்பார்த்துத் தவம் செய்து கொண்டிருந்த சபரி என்னும் பெண் தவசி யைக்கண்டு, அவள் உபசரித்துக்கொடுத்த பழங் களை உண்டபிறகு, அவள் சுக்கிரீவன் என்னும் குரங்கு அரசன் இருக்கும் மலைக்குப் போகும் வழியைச்சொல்லி, பிறகு இரகுநாதர் எதிரிலேயே உடலைத்துறந்து முக்தியடைந்தாள்.

# கிட்கிந்தா காண்டம்

அதன் பின்பு இராமலட்சுமணர் அவ்விடத்தை விட்டு நீங்கி பம்பாநதியை அடைந்து, அதைக்கடந்து சிறிது தூரம் சென்று, சுக்கிரீவன், வாலிக்குப் பயந்து ஒளிந்து கொண்டிருக்கும் மலையின் அருகில் செல்ல, இவர்கள் வருவதைக்கண்ட சுக்கிரீவன், இவர்கள் தன்னைக் கொல்ல வாலி அனுப்பிய வீரர்கள் என்று பயந்து ஓடி ஓர் குகைக்குள் நுழைந்து ஒளிந்து கொண்டான். அப்பொழுது அவனுடைய மந்திரியான அநுமார் அவனுக்குத் தைரியம் சொல்லி, தாம் ஓர் பிரமசாரிவேடம் பூண்டு இராம இலக்குமணர்கள் அருகில் சென்றார். இராம பிரானைக் கண்டதே அநுமாருக்கு அவரிடத்தில் எல்லையில்லாத பக்தியுண்டாகி, "இவர் மும்மூர்த்திகளுக்கும் மேலான முழுமுதல் கடவுளே" என்று தெளிந்து, அவரை வணங்கினார். அவர் "நீ யார்" என்று கேட்க, "நான் சுக்கிரீவனுக்கு மந்திரி. என் பெயர் அநுமான்" என்று சொல்லி, "உங்களை யார் என்று நான் சுக்கிரீவனுக்குச் சொல்வது" என்று கேட்க, இலக்குமணர், "சூரியகுலத்தில் பிறந்து, ஒளிவிளங்கும் ஆஜ்ஞா சக்கரத்தால் அரசாண்ட மேன்மைக் குணமுடையவன், தேவர்

*களுக்காக அசுரரைக் கொன்ற வீரன், பல யாகங்களைச் செய்து, தேவலோகத்தையும் ஆண்டு, நற்காரியங்களைச் செய்தவன், வெண்குடையின் கீழ் அருள் நிறைந்த மனத்துடன் அரசாண்ட தசரதனென்பவன் அயோத்திக்குச் சக்ரவர்த்தி.'*

*சூரியன் மரபில் தோன்றிச்சுடர் நெடு நேமி ஆண்ட
ஆரியன் அமரர்க்காகி அசுரரை ஆவி உண்ட
வீரியன் வேள்வி செய்து விண்ணுலகோடும் ஆண்ட
காரியன் கருணையன்ன கண்ணன் அக்கவிகை *மன்னன்.*

**— கிட்கிந்தாகாண்டம் : மராமர : 29.**

*'அந்த சக்ரவர்த்தியின் மகன்தான் இந்த ஆண்மைக் குணமுடையவன்; தன் சிறிய தாயார் கட்டளையிட்டதனால், தனக்கு வந்த இராச்சியத்தைத் தன் தம்பிக்கு அன்போடு கொடுத்து, பெரிய காட்டினுள் புகுந்தார்; இவருடைய பெயர் இராமர். வில் வித்தையில் தேர்ந்த இந்த வீரருக்குக் குற்றேவல் செய்யும் அடிமை நான்" என்று சொன்னார்.*

அன்னவன் சிறுவனும் இவ்வாண்தகை அன்னை ஏவத்
தன்னுடை உரிமைச்செல்வம் தம்பிக்குத்தகவில் நல்கி
நல் நெடும் கானம் சேர்ந்தான் நாமமும் இராமன் *என்பான்*
இந்நெடும் சிலை வலானுக்கு ஏவல் செய் அடியன் *யானே.*

**— கிட்கிந்தாகாண்டம் : மராமர : 31.**

---

* (அ·ரை) *மரபு = வமிசம், நேமி = சக்கரம்.*

இவ்வாறு இலக்குமணர் நடந்த விஷயங்களை யெல்லாம் விவரமாகச் சொல்ல, அநுமார் இராமச் சந்திரன் அடியில் விழுந்து பணிந்து, அங்கே சிறிது நேரம் தங்கி இருக்கும்படி சொல்லி, சுக்கிரீவ னிடத்தில் போய், "இங்கே வருகிறவர்கள் வாலியின் நண்பர்கள் அல்லர்; தசரத சக்ரவர்த்தியின் குமாரர் கள். குணத்தாலும், வீரத்தாலும், மும்மூர்த்திகளுக் குச் சமானமானவர்கள். நீ செய்த நல்வினைப்பய னால் அவர்கள் நம்மிடத்தில் வருகிறார்கள். ஆதலால், நீ அஞ்சாமல் அவர்களை வரவேற்பாய்" என்று கூற, அவனும் அப்படியே அவர்களை வரவேற்றான். இரகுநாதர் சுக்ரீவனைப்பார்த்து, "உன் சரித்திரத் தைச் சொல்லவேண்டும்" என்று கேட்க, சுக்ரீவன் சொல்லலானான். "என் தாயுடன் இந்திரன் கூடிய தனால் என் அண்ணன் வாலியும், அவளுடன் சூரியன் கூடியதால் நானும் பிறந்தோம். இந்தக் குரங்கு இராச்சியமாகிய கிஷ்கிந்தைக்கு வாலி அரசனாய் ஆண்டு வந்தான். அவன் அளவில்லாத பலத்தையுடையவன். அவன், தன்னை எதிர்த்து யார் நின்றாலும் அவர்களுடைய பலத்தில் பாதி தனக்கு வரவேண்டுமென்று வரம் பெற்றிருக்கிறான். அவனை வெல்பவர் உலகத்தில் யாருமில்லை. ஒரு நாள் இராவணன் வாலி பூசை செய்யுங்காலத்து பின்புறத்திலிருந்து வந்து இவனைப்பிடித்து கொள்ள, அப்பொழுது வாலி அவனைத் த வாலால் இறுகப்பிடித்து இழுத்து ஏழுகடல்கள

மூழ்க வைக்கவே, இராவணன் பயந்து சரணமடைய, அவனை விடுதலை செய்தான். இப்படிப்பட்டவனை ஒருநாள் மாயாவி என்னும் இராக்கதன் வலியசண் டைக்கு அழைக்க, அவனோடு போர் செய்து அவனைத் தோற்கடித்தான். அந்த இராக்கதன் ஓடி ஓர் குகையில் நுழைந்தான். வாலியும் அவனைத் துரத்திக்கொண்டு அவன் பின்னே குகையில் நுழைந்தான். வெகுநாள் கழிந்தும் வாலி வெளியில் வராதது கண்டு, அவன் இறந்தான் என்றும், இராக்கதன் ஜெயித்தான் என்றும் தீர்மானித்து, இராக்கதனை வெளியில் வரவொட்டாமல் குகையின் வாயைத் கற்களால் அடைத்து, மந்திரிகளின் வேண்டுகோளுக்கு இணங்கி நான் பட்டாபிஷேகம் செய்து கொண்டேன்.

சில நாட்கள் கழிந்த பிறகு, வாலி நாங்கள் அடைத்த கற்களைச் சிதற அடித்து, வெளியில் வந்து நான் அரசனாய் இருப்பதைக்கண்டு கோபங் கொண்டு என்னைக் கொல்வதற்கு முயற்சி செய்தான். நான் ஓடிவந்து இம்மலையினமேல் ஏறிக்கொண் டேன். இம்மலைக்கு வாலிவந்தால் அவன் தலை உடைந்து போகக்கடவது என்று ஒரு முனிவரு டைய சாபம் இருத்தலால் நான் தப்பிப்பிழைத் தேன். நான் வந்துவிட்டபிறகு என் மனைவியான ருமையையும் வலிய கைப்பற்றினன்" என்றான்.

இதைக் கேட்ட சீதாராமர் "இன்று முதல் நாம் இருவரும் உயிர் நண்பர்கள். நீ எனக்கு ஒரு

தம்பி. உன் சுற்றத்தார் என் சுற்றத்தார். உன் பகைவர்கள் என் பகைவர்கள்" என்று நட்பு பாராட்ட, சுக்கிரீவன் அன்பின் மிகுதியால், இவ்வாறு இராமச்சந்திரனைத் துதி செய்தான். "பூமியும் நீயே: விண்ணும் நீயே; மற்ற நீர், தீ, காற்று என்னும் பூதங்களும் நீயே; தாமரைமலரின்மேல் இருக்கும் பிரமதேவனும் நீயே: கடலும் நீயே; கடலில் கண்வளரும் மாசில்லாத் திருமாலும் நீயே; பாவங்களை அழிக்கும் அறக்கடவுளும நீமே; மூற் காலத்தில் உலகங்களையெல்லாம் படைத்த நீ இப்பொழுது நாய்போன்ற என்னைக் காப்பாற்ற இங்கே எழுந்தருளினாய்

வையம் நீ வானும் நீ மற்றும் நீ மலரின்மேல்
ஐயன் நீ ஆழி நீ ஆழிவாழ் அமலன் நீ
செய்யதீவினை தெறும்தேவும் நீ நாயினேன்
உய்யவந்து உதவினாய் உலகம்முந்து உதவினாய்.

— கிட்கிந்தா : மராமர : 141.

மேலும், "நான் செய்த நல்வினைப்பயன் உன்னை இவ்விடத்தில் கொண்டுவந்து விட்டது; தாய்போன்ற உன்னுடைய அடியாருக்கு நான் அடிமை; இனிமேல் எனக்கு எந்தக்காரியம் அரியது? எதுவும் மிகவும் எளியதாய் விட்டது" என்று குற்றமற்ற சுக்ரீவன் சொன்னான்.

---

(அ-ரை). உய்ய = பிழைக்கும்படி, இத்தலை = இவ்விடத்தில் வசை = குற்றம்.

என் எனக்கு அரியது எப்பொருளும் எற்கு எளிதலால்
உன்னை இத்தலை விடுத்து உதவினோர் விதியினோர்
அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியன் யான்
மன்னவர்க்கு அரசஎன்று உரைசெய்தான் வசை இலான்.

— கிட்கிந்தா : மராமர : 142

பிறகு இராமச்சந்திரர் "உன் மனைவியைக்கைப் பற்றினவனைக் கொன்று உனக்கு இராச்சியம் அளிப்பேன்" என்று வாக்குத்தத்தம் செய்தார். இதைக்கேட்ட சுக்ரீவன் அளவற்ற மகிழ்ச்சியை அடைந்து, "நீ எனக்கு இராச்சியம் தந்தால், நான் வானரசேனையை ஏவி, சீதாபிராட்டியைத் தேடுவதே யல்லாமல், இராவணனைவென்று சீதாபிராட்டியை மீட்பேன்" என்றான்.

ஆனால், அவனுக்கு ஒரு சந்தேகம் பிறந்தது. அதாவது, வாலியைக்கொல்ல இராமருக்கு வலிமை உண்டா என்பதே. அந்தச் சந்தேகத்தை, இராம பிரான் ஏழுபெரிய மராமரங்களை ஒரே அம்பால் அழித்து நீக்கினார்.

அதன்பிற்பாடு, சுக்கிரீவன் சீதை தங்களிடத்தில் எறிந்த அணிகளைக்கொண்டு வந்து காட்டினான். இராமபிரான் துக்கக்கடலில் மூழ்கினார். "எனது குலத்தில் பிறந்த பெருமைக்குணமுடைய அரசர்கள், கருநிறமுள்ள கடலைத் தோண்டினர்; கங்காநதியை மேல்உலகத்திலிருந்து இவ்வுலகத்துக்குக் கொண்டு வந்தனர்; போர்செய்யும் குணத்தை

*யுடைய புலியும் மானும் ஒரே துறையில் நீர் உண்ணும்படி செய்தனர்; நானோ அழகிய அணிகளை அணிந்த ஒரு பெண்ணின் துயரத்தைக் கூடத் தீர்க்க முடியாதவனாய் இருக்கிறேன்"*

*கருங்கடல் தொட்டனர் கங்கை தந்தனர்
பொரும்புலி மாவொடு புனலும் ஊட்டினர்
பெருந்தகை என் குலத்து அரசர் பின் ஒரு
திருந்து இழை துயரம் நான் தீர்க்ககிற்றிலேன்.

**— கிட்கிந்தா : கலன்காண் : 22.**

*"மேலும், யாவரும் விரும்பத்தக்க அழகை யுடைய என் தகப்பனாரது சத்தியம் தவறினால் எனக்குப் பழிவரும் என்று எண்ணி, பட்டாபிஷேகம் வேண்டாம் என்று மறுத்தேன்; ஆனால் கரும்பினும் இனிய சொற்களையுடைய என்மனைவியைப் பகைவனான இராவணன் கவர்ந்து போனதனால், பெரியபழியை அடைந்தேன்; இந்தப்பழியினின்றும் நீங்குவதெப்படி?" என்று புலம்பினார்.*

†விரும்பு எழில் எந்தையார் மெய்ம்மை வீயுமேல்
வரும் பழி என்றலால் மகுடம் சூடலேன்
கரும் பழி சொல்லியைப்பகைஞர் கைக்கொளப்
பெரும் பழி சூடினேன் பிழைத்தது என்னரோ.

**— கிட்கிந்தா : கலன்காண் : 24.**

---

* (அ-ரை). *தொட்டனர் = தோண்டினர், புனல் = நீர் தகை = குணம், இழை = அணி.*

† (அரை). *எழில் = அழகு, மெய்ம்மை = சத்தியம்.*

இப்படித் துக்கக்கடலில் ஆழ்ந்த இராமபிரான் சுக்ரீவன் தேற்றத்தேறி, "இனி நீ வாலியை போருக்கு அழைத்தால் நான் மறைவில் நின்று கொல்வேன்" என்றார். அதற்கு உடன்பட்டு, சுக்ரீவன் சென்று வாலியைப் போருக்கு அழைத்தான். அதைக்கேட்ட வாலி உடனே புறப்பட்டான். அப்பொழுது அவனுடைய மனைவியான தாரை "உம்முடைய தம்பி யாரோ துணைவனைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறார்" என்று சொல்ல, அதற்குவாலி "யார்வந்தாலும் அவர்களுடைய பலத்தில்பாதி எனக்கு வரும். ஆதலால் நீ பயப்படாதே" என,

அதைக்கேட்ட தாரை, "அரசனே! சுக்ரீவனுக்கு உயிர்த்தோழனாய் உன்னைக் கொல்வதற்காக அவருடன் "இராமன்" என்பவன் வந்திருக்கிறான் என்று நம்மிடத்தில் அன்புள்ளவர்கள் சொன்னார்கள் "என்றாள்."

*அன்னது கேட்டு அவள் அரச ஆயவற்கு
இன்னுயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன்
உன்னுயிர் கோடலுக்கு உடன் வந்தான் எனத்
துன்னிய அன்பினர் சொல்லினார் என்றாள்.

— கிட்கிந்தா : வாலிவதை : 21.

தாரை இதைச்சொல்லவே, வாலி கோபித்து "அடி, அறிவில்லாதவளே! இராமனுடைய குணம் உனக்குத் தெரியாது.

* (அரை). கோடல் = கொள்ளல்.

" தாம் செய்த நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளுக்கும், அவைகளால் உண்டாகும் பிறப்பு, நோய், துன்பம் முதலியவைகளுக்கும் முடிவு காணுமல் துயரத்தால் கடவுளை நோக்கி முறையிடும் உலகத்தாருக்கு, அவ்வினைகளைப் போக்குவதற்கு இதுதான் நல்லவழி என்று தானே நடத்திக்காட்டுபவனுன இராமன், தன் ஸ்வபாவத்துக்கு விரோதமான காரியம் செய்வான் என்று எவ்வளவு அறிவில்லாச்சொல்லை சொன்னுய்? நீ பெண்ணுனதனுல் இந்தக்குற்றம் செய்து பாவியானுய் " என்ருன்.

உழைத்த வல் இரு வினைக்கு ஊறு காண்கலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறெலாம்
இழைத்தவற்கு இயல்பல இயம்பி என் செய்தாய்
பிழைத்தனை பாவி உன் பெண்மையால் என்ருன்.

— கிட்கிந்தா : வாலிவதை : 22.

மேலும், " தன்தந்தை அரசுபுரிந்த பெரிய உலகத்தை எல்லாம் தான் அடைந்து, பின்பு தன் தாயின் சக்களத்தியான கைகேயி கட்டளையிட, அவளுடைய மகனுக்கு அளவில்லா மகிழ்ச்சியுடன் கொடுத்த சிறந்த அறிவாளியான இராமனைப் புகழாமல், இவ்விதமான பழிமொழிகளைக் கூறலாமா? "

*ஏற்ற பேர் உலகுஎலாம் எய்தி ஈன்றவள்
மாற்றவள் ஏவ மற்ற அவள்தன் மைந்தனுக்கு
ஆற்றரும் உவகையால் அளித்த ஐயனைப்
போற்றிலை இன்னன புகறல் பாலையோ.

— கிட்கிந்தா : வாலிவதை : 24.

*அதுவுமின்றி, "நிலைபெற்ற உலகங்களெல்லாம் ஒன்றாய்ச்சேர்ந்து தன்னை எதிர்த்தாலும் வெற்றியைத்தரும் பலமுள்ள கோதண்டத்தைத்தவிர அவனுக்கு வேறேதுணை வேண்டுமோ? இராமன் தனக்குத்துணை தானேயாவன். அப்படிப்பட்டவன் அற்பச்செயலையுடைய குரங்காகிய சுக்ரீவனோடு சிநேகம் செய்வானா?"*

நின்ற பேர் உலகெலாம் நெருக்கி நேரினும்
வென்றி வெம் சிலையலால் பிறிது வேண்டுமோ
தன்துணை ஒருவரும் தன்னில் வேறு இலான்
புன் தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ.

— கிட்கிந்தை : வாலிவதை: 25.

இன்னமும்கேள்: *"தன்னுடைய தம்பிமார்களைத்தவிர வேறே உயிர் தனக்கு இல்லையென்று இவ்வுலகத்தில் அவர்களுடன் இணங்கி வாழ்பவன், நானும் என் தம்பியும் எதிர்த்துப் போர்செய்யும் போது, அந்தக்கருணைக் கடலான இராகவன் நடுவில் அம்பு தொடுப்பானா?"*

* (அரை). எய்தி = அடைந்து, உவகை = மகிழ்ச்சி, நெருக்கி = ஒன்று சேர்ந்து, புணரும் = சேரும்.

*தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர்
இம்பரின் இலதென எண்ணி ஏய்ந்தவன்
எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரிடை
அம்பு இடை தொடுக்குமோ அருளின் ஆழியான்.

— கிட்கிந்தா : வாலிவதை : 26.

*என்று பலவாறு இராமனைப்புகழ்ந்து, வெளியே வந்து, சுக்ரீவனோடு போர்செய்து, அவனை ஒரு பாறையின்மேல் மோத எண்ணி மேலே தூக்கிய போது, மறைவில் இருந்த இராமபிரான் ஒரு அம்பை எய்தார். அது அவன் மார்பைத்துளைக்கவே வாலி சுக்ரீவனைவிட்டு அந்த அம்பைத் தன் நான்கு கைகளாலும் வாலாலும் பிடித்துக்கொண்டு கீழே விழுந்தான். விழுந்தவன் இது யாருடைய அம்பாய் இருக்கலாம் என்று அதை இழுத்துப் பார்க்க, அப்பொழுது என்ன கண்டான்? 'மூன்று உலகங்களுக்கும் மூக்கியமான மந்திரமாக உள்ளதும், தன்னுடைய பக்தர்கள் தன்னையே அடையும் படியான சச்தியைக்கொடுப்பதும், அது ஒன்றே இப்பிறப்பிலேயே எழுபிறப்பில் செய்த பாவங்களையும் போக்கத்தக்கதுமான பதமாகிய இராமன் என்ற சிறப்புடைய பெயரைக்கண்டான்.'*

* மும்மைசால் உலகுக்கு எல்லாம்
மூல மந்திரத்தை முற்றும்
தம்மையே தமக்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தைத்தானே

---

* (அ-ரை). இம்பர் = இந்த உலகம், எம்பி = என் தம்பி.

இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்தினை இராமன் என்னும்
செம்மை சேர் நாமம் தன்னைக்
கண்களில் தெரியக்கண்டான்.

— கிட்கிந்தா : வாலிவதை : 71.

*காணவே, இச்செய்கையால் இராமனுக்குப் பெரிய பழி வந்ததே!' என்று வெட்கப்பட்டு இவ்வாறு சொன்னான். "சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக இராச்சியத்தைக் கைவிட்ட இச்சிறந்த வீரன் எங்களைப்போன்ற குரங்குகளுக்காகத் தங்களுடைய விற்போர் முறையை விட்டுவிட்டதனால், இவன் பிறந்ததனாலே, வேதம் முதலான நூல்களில் சொல்லப்பட்ட தர்மங்களை இதுவரையில் விடாத சூரியகுலமும் இனி கைவிட்டது போலும்!' என்று வெட்கப்பட்டுச் சிரித்தான்.*

இல்லறம் துறந்த நம்பி எம்மனோர்க்காகத் தங்கள்
வில்லறம துறந்த வீரன் தோன்றலால் வேத நூலில்
சொல்லறம் துறந்திலாத சூரியன் மரபும் தொல்லை
நல்லறம் துறந்ததென்று நகைவரநாண உட்கொண்டான்

72

*அச்சமயத்தில் இராமபிரான் எதிரில் வந்தார். அவரைக்கண்ட வாலி கோபத்தால் இவ்விதமாய்ப் பரிகாசம் செய்யத் தொடங்கினான்.*

---

* (அ-ரை.) நம்பி = ஆண்மக்களில் சிறந்தவன்.

"இராமா! நீ, சத்தியத்தையும் குலதர்மத்தையும் பாதுகாப்பதற்காகத் தன் உயிரை விட்ட பரிசுத்தமான வள்ளலாகிய தசரதனுடைய மகன்! தனக்கு வந்த இராச்சியத்தை வேண்டாமென்று உனக்குக் கொடுக்கவந்த பரதனுடைய அண்ணன்! "நான் எல்லா உயிர்க்கும் தாய் போன்றவன்; எல்லார்க்கும் நண்பன்; தர்மத்தைக் காப்பாற்றுவதே என்னுடைய கொள்கை என்று சொல்லிக்கொண்டிருப்பவன்; ஆனால் நீ பிறர் தீமை செய்யாமல் விலக்கி, நீயே தீமை செய்தால் அது குற்றம் ஆகாதா" என்று கேட்டான்.

*வாய்மையும் மரபும் காத்து மன் உயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே நீ பரதன் முன் தோன்றினையே
தீமைதான் பிறரைக்காத்து தான் செய்தால் தீங்கு அன்றுஆமோ
தாய்மையும் அன்றி நட்பும் தருமமும் தழுவி நின்றாய்.

—கிட்கிந்தா: வாலிவதை: 76

"சித்திரத்திலும் எழுதமுடியாத ரூப சௌந்தர்யத்தையுடைய இராமா! உங்கள் சூரியகுலத்தில் பிறந்த எல்லோருக்கும் ராஜதர்மம் இயல்பாக உடையதன்றோ? ஆனால், உனக்கு உயிர் போன்றவளும், சனகமகாராசாவின் மகளான அன்னம் போன்றவளும், அமிர்தம்போல அருமையாகக் கிடைத்தவளுமான சீதையைப் பிரிந்த பின்பு,

---

(அ-ரை) வாய்மை=சத்தியம், மரபு=குலதர்மம், தூயவன் பரிசுத்தமானவன், கோ=அரசன், ஓவியம்=சித்திரம்.

'இன்னது செய்தல் தகும், இன்னது செய்தல் தகாது' என்ற பகுத்தறிவை நீ இழந்தாய் போலும் என்று ஏளனம் செய்தான்.

கோவியல் தர்மம் உங்கள் குலத்து உதித்தோர்கட்கு எல்லாம்
ஓவியத்து எழுதவொண்ணாஉருவத்தாய்உடைமை அன்றோ
ஆவியை சனகன் பெற்ற அன்னத்தை, அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை

— கிட்கிந்தா : வாலிவதை : 78.

பின்னும், "இராமா! இராக்கதர் உனக்கு ஒரு தீங்கு இழைத்துச் சென்றால் அதற்குப் பதிலாக குரங்குகளுடைய அரசனைக் கொல்லும்படி மநுதர்ம சாஸ்திரம் சொல்லியிருக்கின்றதா? மேலும், உனக்கு இயல்பாக உடைய அருளை எங்கே கொட்டி விட்டாய்? அதுவுமன்றி, என்னிடத்தில் என்ன குற்றத்தைக் கண்டாய்? உனக்கே இவ்வளவு பெரிய பழி வந்து சேர்ந்தால், புகழ் யாரிடத்தில் நிற்கும்!" என்று வினவினான்.

*அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல அதற்கு வேறு ஓர்
குரங்கினது அரசைக்கொல்ல மனுநெறி கூறிற்று உண்டோ
இரக்கம் எங்கு உகுத்தாய் என்பால்எப்பிழைகண்டாய்அப்பா
பரக்கழி இது நீ பூண்டால் புகழை யார் பரிக்கற்பாலார்

— கிட்கிந்தா : வாலிவதை : 79.

*(அ-ரை.) அழிவு=தீங்கு, இரக்கம்=கருணை, பாக்கழி=பெரும் பழி, கொற்றவன்=வெற்றியுடையவன், நல்கி=கொடுத்து.

மேலும், "போரில் ஒருவருடைய துணையுமின்றி வெற்றி பெறத்தக்க வீரனே! உன்னைப் பெற்ற தசரதன் உனக்குக் கொடுத்த இராச்சியத்தை உன் தம்பிக்குக் கொடுத்து நாட்டில் ஒரு மேலான காரியம் செய்தாய்; என் இராச்சியத்தை என் தம்பிக்குக்கொடுத்து காட்டில் ஓர் இழிவான காரியம் செய்தாய்; இதைவிடப் பெருமை பொருந்திய காரியம் ஒன்று இருக்கின்றதா?" என்று பரிகாசம் செய்தான்.

கூட்டு ஒருவரையும் வேண்டாக்கொற்றவபெற்றதாதை
பூட்டிய செல்வம் ஆங்கே தம்பிக்குக்கொடுத்து போந்து
நாட்டு ஒரு கருமம் செய்தாய் எம்பிக்கு இவ்வரசை நல்கி
காட்டு ஒரு கருமம் செய்தாய்கருமந்தான் இதன்மேல்உண்டோ

—கிட்கிந்தா : வாலிவதை : 81.

வாலி பின்னும் சொல்லுவான்: "இயல்பில் கோபமில்லாதவனான இராமா! காலில் கழலையும் மார்பில் மாலையும் அணிந்த வீரர்கள் செய்கிறதெல்லாம் ஆண்மக்களுக்கு உரிய நல்ல காரியம் ஆய்விட்டது போலும்! பழமையான அற நூல்களுக்கு எல்லாம் தலைவனான நீயே என் விஷயத்தில் இவ்விதமாகச் செய்தாயென்றால், இலங்கை வேந்தனான இராவணன் நீதியில்லாக் காரியம் செய்தானென்று அவன் மேல் எப்படிக் கோபம்கொள்வாய்?" என்றான்.

*அறைகழல் அலங்கல் வீரர்
    ஆயவர் புரிவது ஆண்மைத்
துறை எனல் ஆயிற்று அன்றே
    தொன்மையின் நன்னூற்கு எல்லாம்
இறைவன் நீ என்னைச் செய்தது
    ஈது எனில் இலங்கை வேந்தன்
முறையல செய்தான் என்று
    முனிதியோ முனிவு இலாதாய்.

**—கிட்கிந்தா : வாலிவதை : 82.**

*வரவரக்கோபம் அதிகமாக மூள, இவ்வாறு பழித்தான். நீ என்னைக் கொன்றது வீரமல்ல; நூல்களில் விதித்தது மல்ல; சத்தியத்தை மேற்கொண்டோர் செய்யும் காரியமுமல்ல; உன்னுடைய பூமிக்கு என்னுடைய உடல் பாரமுமல்ல; நான் உனக்குப்பகைவனுமல்ல; இப்படியிருக்க, உன்னுடைய நற்குணங்களை யெல்லாம்விட்டு, இரக்கமில்லாமல், இச்செயலைச் செய்தது என்னகாரணம்பற்றி?" என்று கேட்டான்.*

வீரம் அன்று விதி அன்று மெய்ம்மையின்
வாரம் அன்று நின் மண்ணினுக்கு என் உடல்
பாரம் அன்று பகை அன்று பண்பு ஒழிந்து
ஈரம் அன்று இது என் செய்தவாறு நீ.

**— கிட்கிந்தா : வாலிவதை : 84.**

* (அ-ரை.) *அறை=ஒலிக்கின்ற, கழல்=வீரர்கள் காலில் அணியும் அணி, அலங்கல்=மாலை, பண்பு=நற்குணம், ஈரம்=*

இராமபிரானுக்கு வந்தபழி அவனோடு போகாமல் அவன் குலத்துக்கே வந்தது என்பான்: "வானில் சஞ்சரிக்கும் சந்திரனுக்கு முற்காலத்திலிருந்து ஒரு கரியநிறத்துக் களங்கம் உள்ளது போல, பெருமை பொருந்திய நீ பிறந்து சூரிய குலத்துக்கும் அழிவில்லாத ஒரு களங்கம் படைத்து வைத்தாய்" என்று பழித்துரைத்தான்.

*கார் இயன்ற களங்கநிறத் தொன்மை
ஊர் இயன்ற மதிக்கு உளதாம் எனச்
சூரியன் மரபுக்கும் ஓர் தொன்மறு
ஆரியன் பிறந்து ஆக்கினையாம் அரோ.

—கிட்கிந்தா : வாலிவதை : 87.

இப்படிப் பலவாறு பேசியதெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த இராமச்சந்திரர் வாலியைப் பார்த்து, "நீ குகையிலிருந்து வெளியில் வந்தபோது உன் தம்பி குற்றம் செய்தானு, இல்லையா என்று தீர விசாரியாமல், அவனைக் கொல்ல முயற்சி செய்தாய். அதுவுமல்லாமல் அவனுடைய மனைவியைக் கைப்பற்றினுய். இது நியாயமா?" என்ருர். அதற்கு வாலி, முதல் குற்றத்துக்குப்பதில் சொல்லாமல், இரண்டாவதற்கு, "பகைவருடைய உடலின் கொழுப்பும், பூசிய

* (அ-ரை.) கார்=மேகம், களங்கம்=கறுப்பு, மாசு, மரபு=வமிசம் மறு=மாசு.

நெய்யும் பொருந்திய சக்கராயுதத்தையுடைய திருமால் போன்றவனே ! எங்களுக்கு வேதங்களில் சொல்லிய முறைப்படி கலியாணம் செய்துகொள்ளும் வழக்கம் இல்லை; பரம்பரையாக வரும் நல்ல குணங்களு மில்லை ; எப்பொழுது எந்தவிதமாகச் செய்ய எண்ணு கிறோமோ, அவ்விதமாகவே செய்து முடிப்பது எங்களுடைய இயல்பு" என்றான்.

*மணமும் இல்லை மறை நெறி வந்தன
குணமும் இல்லை குலம் முதற்கு ஒத்தன
உணர்வு சென்றுழிச்செல்லும்' ஒழுக்கலால்
நிணமும் நெய்யும் இணங்கிய நேமியோய்

—கிட்கிந்தா: வாலிவதை : 105.

அப்பொழுது இராமபிரான், "என் குற்றங் களைக் கண்டுபிடிக்க மாத்திரம் உனக்கு எல்லாச் சாஸ்திரங்களும் தெரியும். உன் குற்றங்களைச் சொன்னால் நான் குரங்கு என்கிறாய்" என்றார்.

மேலும், "மனிதர்க்கும், தேவர்களுக்கும், விலங் குகளுக்கும் வித்தியாசம் அறிவினாலேயல்லது பிறப் பினாலே அல்ல. ஒரு முதலை தன் காலைப்பற்றி ஒரு பக்கமாக இழுக்க, தன் பெருமை பெற்ற அறிவின் பயனால், சங்கத்தைக் கையிலேந்திய வெற்றி உடைய வனை திருமாலைக் கூவி அழைத்து விடுதலையும் முக்தியும் அடைந்த கஜேந்திரனும் ஒரு விலங்கு தானே," என்றார்.

*மாடு பற்றி இடங்கர் வலித்திடக்
கோடுபற்றிய கொற்றவன் கூயது ஓர்
பாடு பெற்ற உணர்வின் பயத்தினால்
வீடு பெற்ற விலங்கும் விலங்கரோ

—கிட்கிந்தை : வாலிவதை : 109.

*அதைக் கேட்ட வாலி, "சரி, அப்படியானால் நேரில் வந்து போர் செய்வதை விட்டு, வேடர்கள் காட்டு விலங்குகளைக் கொல்வதைப் போல, மறைந்து நின்று என்மேல் ஏன் அம்பு எய்தாய்?" என்று கேட்டான். அதற்கு இலக்குமணர், "உன்னைக் கொல்வதாகச் சுக்ரீவனுக்கு வாக்களித்தார். பிறகு நேரில் வந்து, உன்னோடு சண்டை செய்தால் நீயும் அடைக்கலம் அடைவாய் என்று நினைத்து மறைந்து நின்று எய்தார்'' என்றார். இதைக் கேட்கவே வாலிக்கு ஞானம் பிறந்து, இராமரைப் பார்த்து இவ்வாறு சொன்னான்: "சித்திரத்தில் எழுதிய உருவம் போன்ற அழகிய வடிவத்தை உடையவனே! அடியேன் உன்னிடத்தில் பெறவேண்டிய வரம் ஒன்று இருக்கின்றது. அது என்னவென்றால், என் தம்பியான சுக்ரீவன், பூவினால் ஆக்கிய கள்ளைக் குடித்து புத்தி தடுமாறி இருக்கும் சமயத்தில், உன் விஷயத்தில் ஏதாவது குற்றம் செய்தானேயானாலும், அவன்மேல் கோபித்து, என்மேல் தொடுத்த யமனைப்போன்ற அம்பை அவன் மேல் தொடுக்காதே என்பதே.'*

ஓவிய உருவ! நாயேன் உளதொன்று பெறுவது உன்பால்
பூவியல் நறவம மாந்தி புந்தி வேறுற்ற போது
தீவினை இயற்று மேனும் எம்பிமேல் சீறி என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல் என்றான்

— கிட்கிந்தா: வாலிவதை: 127.

*இவ்வாறு இராமபிரானை வரம் வேண்டி, பிறகு சுக்ரீவனைப் பார்த்து, "ஆலோசனை மிக்க தம்பி! வேதங்களும், மகரிஷிகளும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், நூல்களின் தேர்ந்த கருத்தும், மற்றைப் பெரியோர் எல்லோரும் நிச்சயமாகச் சொல்லும் பரம்பொருளே, தர்ம மார்க்கத்தை இவ்வுலகத்தில் நிலைநிறுத்தும் பொருட்டு, பகைவர்களைக் கொல்லும் கோதண்டத்தை எடுத்துக் கொண்டு, ஒலிக்கின்ற வீரக்கழலை அணிந்து இராமனாக அவதரித்தது! இதைச் சிறிதும் சந்தேகமில்லாமல் மனத்தில் கொள்வாய்' என்று உறுதிமொழி கூறினான்.*

*மறைகளும் முனிவர்யாரும் மலர்மிசை
அயனும் மற்றைத்
துறைகளின் முடிவும் சொல்லும் துணி
பொருள் துணிவில் தூக்கி
அறைகழல் இராமன் ஆகி
அறநெறி நிறுத்த வந்த
இறைஒரு சங்கை இன்றி எண்ணுதி
எண்ணம் மிக்கோய்

—கிட்கிந்தா: வாலிவதை: 132.

---

* (அ-ரை.) *அயன்=பிரமன், சங்கை=சந்தேகம்.*

இந்தச் சமயத்தில், வாலியின் மகனான அங்கதன், தன் தகப்பன், இராமன் அம்பால் அடிபட்டு விழுந்தான் என்று கேள்விப்பட்டு, ஓடிவந்து, அவன் மார்பின்மேல் விழுந்து அலறினான். அப்பொழுது, வாலி அவனுக்குத் தேறுதல் சொல்லி, இராமபிரானைப் பற்றிய இரகசியத்தையும் இவ்வாறு கூறினான் "பிள்ளாய்! சிறுபிள்ளைத் தன்மையை விட்ட நீ, என் சொல்லைக் கேட்பாயானால், தன்னை விட மேலான பொருள் ஒன்றும் இல்லாததும், மெய்யே உருவம் எடுத்தது போன்றதுமான முழுமுதல் கடவுளே, கையில் வில்லைத் தாங்கி, கால்கள் தரையில்படும்படி நின்று, நம்முடைய கண்களுக்குத் தெரியும்படி நமக்குக் காட்சி கொடுத்தது! மயக்கத்தினால் உண்டாகும் பிறவி நோய்க்கு இவன் தான் மருந்து என்று எண்ணி இவனை எந்நேரமும் வணங்குவாயாக." என்றான்.

* பாலமை தவிர் நீ என் சொல்
பற்றுத் என்னின் ஐயா
மேல் ஒரு பொருளும் இல்லா
மெய்ப்பொருள் வில்லும் தாங்கிக்
கால் தரை தோய நின்று கண்
புலக்கு உற்றது அம்மா
மால் தரும் பிறவி நோய்க்கு
மருந்து என வணங்கு மைந்த.

— கிட்கிந்தா : வாலிவதை : 148.

* (அ-ரை) மால் = மயக்கம்

வாலி, பின்னும் கூறுவான்: "அங்கதா! இவர்களுக்கு ஒருகால், பிறரோடு சண்டை நேர்ந்தால், நீ தவறாமல் இவன் பக்கம் போர் செய்" என்று சொல்லி, இராமபிரானைப் பார்த்து, "இராமா! என் மகனான அங்கதன் உன் அடைக்கலம்" என்று ஒப்புவித்தான். அப்பொழுது அங்கதன் இராமச் சந்திரருடைய பாதத்தை வணங்கினான். அங்கதன் தன்னுடைய அடிகளில் விழுந்து வணங்கினவுடனே, செந்தாமரை போன்ற அகன்ற கண்களையுடைய இரகுநாதன், பொன்னால் செய்யப்பட்ட தன்னுடைய உடைவாளை அவனிடத்தில் நீட்டி, "நீ இதை ஏற்றுக்கொள்" என்றார். எனவே, ஏழு உலகத்தில் உள்ளாரும் இராமனை வாழ்த்தினார்கள். அப்பொழுது வாலி அம்பை நழுவ விட்டதனால், உயிரை விட்டு, தேவலோகத்துக்கும் மேலான பரமபதத்தை அடைந்தான்.

* தன் அடி தாழ்த லோடும் தாமரைத்
தடங் கண்ணனும்
பொன் உடை வாளை நீட்டி நீ
இது பொறுத்தி என்றான்
என்னலும் உலகம் ஏழும்
ஏத்தின இறந்து வாலி
அந்நிலை துறந்து வானுக்கு
அப்புறத்து உலகன் ஆனான்

— கிட்கிந்தா : வாலிவதை : 152.

(அ-ரை) ஏத்தின = போற்றிசெய்தன.

பிறகு, இராமர் சுக்ரீவனை வாலிக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யும்படி ஏவி இலக்குமணரை சுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கும்படி கூறி, மழைக்காலம் போனபிறகு சேனைகளைக் கூட்டிக் கொண்டு வரும்படி கட்டளையிட்டு, மலையினமேல் போயிருந்தார்.

மழைக்காலம் கழிந்தும் சுக்ரீவன் வராதது கண்டு கோபங்கொண்டு, இலக்குமணரைப் பார்த்து "இலக்குமணா! சுக்ரீவன் செல்வச் செருக்கினாலே தான் அளித்த வாக்கை மறந்தான் போல் இருக்கிறது. நீ உடனே போய் அவன் வராததற்குக் காரணம் அறிந்து கொண்டுவா. மேலும், கொடியவர்கள் சாகும்படி அவர்களை அடியோடு அழித்து, தர்மத்தை இவ்வுலகத்தில் நிலைநிறுத்தும் பொருட்டு ஏந்தி வந்த கோதண்டம் உண்டு; யாராலும் தடுக்க முடியாத யமனும் உண்டு; உங்கள் குலத்தலைவனான வாலியைக் கொன்ற அம்பும் உண்டு; என்று நம்முடைய கட்டளையாகச் சுக்ரீவனுக்குச் சொல்வாய்" என்று கோபத்துடன் சொன்னார்.

வெம்பு கண்டகர் விண் புக வேர் அறுத்து
இம்பர் நல் அறம் செய்ய எடுத்த வில்
கொம்பும் உண்டு அரும் கூற்றமும் உண்டு உங்கள்
அம்பும் உண்டு என்று சொல்லு நம் ஆணையே.

— கிட்கிந்தா : கிட்கிந்தை படலம் : 4.

---

* (அ-ரை.) கண்டகர் = கீழ்மக்கள், இம்பர் = இவ்வுலகம், கூற்றம் = யமன்.

இப்படி ஏவப்பட்ட இலக்குமணர் அளவில்லாச் சினங்கொண்டு கிட்கிந்தையை நோக்கி வேகமாய்ச் சென்ருர். அதைக்கண்ட வானரங்கள், கோட்டை வாசலை மூடிக் கற்களால் அடைத்தன. அதைப் பார்த்து அவர் அடக்க முடியாக் கோபங்கொண்டு காலால் எட்டி உதைக்க, கற்கள் நான்கு பக்கத்தி லும் சிதறி, கதவுகள் திறந்துகொண்டன. வான ரங்கள் ஓடி அநுமாருக்கும் அங்கதனுக்கும் தெரி வித்தன. அங்கதன் விரைந்து சென்று, படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த சுக்ரீவனை எழுப்ப முயன் ருன். அங்கதன் சொல்வது சுக்ரீவனுக்குக் குடி வெறியினுல் புரியவில்லை. இதையறிந்த அநுமார், தாரையிடம் சென்று அவளை இலக்குமணர் வருகிற வழியில் போய், சிறிது நேரம் அவருடன் பேசி அவ ருடைய கோபத்தை ஆற்றும்படி சொன்னுர். அவளும், சில பெண் குரங்குகளைக் கூட்டிக்கொண்டு அவர் வரும் வழியில் சென்று நின்ருள். இந்தப் பெண் கூட்டத்தைக் கண்ட இலக்குமணர் தாமரை போன்ற தன் முகத்தை கூச்சத்தால் கீழே சாய்த்து, தன் பெரிய வில்லைத் தரையில் ஊன்றி, மாமியார் கூட்டத்தின் நடுவில் வந்த புதிய மரு மகளைப்போல் வெட்கப்பட்டுக்கொண்டு நிற்க, மேல் உலகத்திலிருந்து இந்தப் பூமியில் இறங்கிய தேவ மாதர்களைப் போன்ற வானரப் பெண்களுடைய கூட்டத்தில் புகுந்து, பொன்னிறமான தோளையும், பரிசுத்தமான மனத்தையும், அகன்ற கண்களையு

முடைய தாரை பயத்தினுல் நடுங்கிக்கொண்டு இவ் விதமாய்ச் சொன்னுள்.

* தாமரை வதனம் சாய்த்துத்
 தனுநெடும் தரையின் ஊன்றி
மாமியர் குழுவின் வந்தான்
 ஆம் என மைந்தன் நிற்ப,
பூமியில் அணங்கனுர் தம்
 பொதுவிடைப் புகுந்து பொன் தோள்
தூமன நெடும் கண் தாரை
 நடுங்குவாள் இனைய சொன்னுள்.

— கிட்கிந்தா : கிட்கிந்தை : 48.

"ஐயா! நீர் இராமபிரானை எப்பொழுதும் நீங் காதவர், இன்று இங்கே வந்ததற்கு என்ன காரணமோ?" என்று வினவினுள். அப்பொழுது "மலர்கள் விளங்கும் மாலையை அணிந்த மார்பை யுடைய இலக்குமணர், கோபங் குறைந்து, தன் மனத்தில் அருள்-உண்டாக, இவ்வார்த்தையைச் சொன்னவர்கள் யாரோ என்று தன் முகத்தை சிறிது எடுத்துப் பார்க்க, வெளுத்த பூர்ண சந்திரன் பகலில் வந்தது போன்ற அழகுடைய தாரையின் முகத்தை நோக்கவே, தன் தாய்மார்களும் இவ்வி தக் கோலத்துடன்தான் இருக்கிருர்கள் என்று கருதி மனம் வருந்தினுன்."

(அ-ரை.) குழு = கூட்டம், அணங்கு = தேவமாது, தூ = பரிசுத்தமான

*ஆர்கொலோ உரை செய்தார் என்று
அருள் வரச் சீற்றம் அஃகாப்

பார்குலாம் முழு வெண் திங்கள்
பகல் வந்த படிவம் போலும்

ஏர்குலாம் முகத்தினாளை
இறை முகம் எடுத்து நோக்கித்

தார்குலாம் அலங்கல் மார்பன்
தாயரை நினைந்து நைந்தான்.

— கிட்கிந்தா : கிட்கிந்தை : 51

*தன் கணவன் இறந்ததனால், "தாலியை நீக்கி, இரத்தினங்கள் இழைத்த மற்ற ஆபரணங்களையும் ஒழித்து, தேன் ஒழுகும் மலர் மாலையைச் சூடாமல், குங்குமமும் சந்தனமும் பூசாத பருத்த தனங்களைப் பாக்கு மரம் போன்ற கழுத்துடன் மறையும்படி மேலாடையை அணிந்த பெண்ணாகிய தாரையைப் பார்த்த வள்ளலான இலக்குமணர் கண்களில் நீர்துளிக்க நின்றார்."*

மங்கள அணியை நீக்கி
மணி அணி துறந்து வாசக்

கொங்கு அலர் கோதை மாற்றிக்
குங்குமம் சாந்தம் கொட்டாப்

* (அரை) *அஃகா = குறைய, இறை = சிறிது, ஏர் = அழகு, அலங்கல் = மாலை, நைந்தான் = வருந்தினன்.*

பொங்கு வெம் முலைகள் பூகக்
கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்
நயனங்கள் பனிப்ப நின்றான்.

— கிட்கிந்தா : கிட்கிந்தை : 52

பிறகு, கேட்டவளுக்குப் பதில் சொல்ல வேண்டு மென்று, "கார் காலம் கழிந்த பிறகு தன் சேனை யுடன் வருவேன் என்று சொன்ன சுக்ரீவன் இது வரையில் வராததனால் என்ன காரணத்தால் வரவில்லை என்பதை அறிந்துகொள்ள வந்தேன்" என்றார். அதற்குத் தாரை, "சுக்ரீவன் சொன்ன சொல்லை மறக்கவில்லை. சேனைகளைக் கூட்டிக் கொண்டு வரும்படி அநேகரை ஏவி இருக்கிறான். அவர்கள் வராததனால்தான் இவ்வளவு தாமத மாயிற்று" என்றாள்.

இதற்குள், அநுமாரும் அங்கதனும் சுக்ரீவனைக் குடிவெறியிலிருந்து நீக்கி, உட்காரவைத்து, இலக்கு மணரை வரவேற்று, எல்லோருமாய்க்கூடி இராம பிரான் இருக்கும் இடத்துக்குப் போக, அங்கே இராமர், வந்த குரங்குச் சேனைகளை நான்காய்ப் பிரித்து, ஒவ்வொரு திக்கிற்கும் ஒரு பாகத்தை அனுப்பி, தெற்குத் திக்கிற்கு அங்கதன், அநுமார், சாம்புவான் முதலான வீரர்களைப் போகச் சொன்னார். அநுமாருக்குச் சீதையை வர்ணித்து, அவளைக் கண்டால் அவளுக்குச் சொல்ல வேண்டிய

விஷயங்களைக் கூறி, தம் மோதிரத்தையும் அடை யாளமாகக் கொடுத்து, வழியையும் சொல்லி அனுப்பினர்.

இராமபிரான் சொல்லியபடியே தேடிக் கொண்டுபோன அங்கதன் முதலியவர்கள் எங்கும் சீதையைக் காணமல், இறுதியில் ஒரு பெரிய பிலத் தைக்கண்டு, அதில் சீதை இருக்கலாம் என்று நுழைந்து சிறிது தூரம் சென்றதே இருட்டில் ஒன் றும் தெரியாமல் பயப்பட, அநுமார் தம் வாலைநீட்டி, எல்லோரையும் பிடித்துக்கொள்ளும்படி சொல்லி, வெகு தூரம் அழைத்துச்சென்று, இறுதியில் உயி ருள்ள ஜந்துக்களே இல்லாத ஓர் ஊரைக்கண்டு, அதன் நடுவில் ஒரு பெண் இருப்பதைப் பார்த்தார் கள். அவள்தானே சீதையென்று சந்தேகித்து, பிறகு அவள் சுவயம்பிரபை என்னும் தேவ கன்னிகை சாபத்தால் அங்கு இருக்கிருள் என்று தெரிந்து, அநுமார், மேல் இருந்த பூமியைத் தூக்கி எறிய, அவள் தேவலோகம் சென்ற பிறகு, இவர் கள் வெளியே வந்து, சிறிது தூரம் சென்றதும் கடற் கரையைக் கண்டார்கள்.

கடற்கரைவரை இராமர் வழி சொல்லியதால் எடுத்த காரியம் முடியவில்லையே என்று துன்பத்தில் ஆழ்ந்தார்கள். சீதை அகப்படவில்லை என்று இராமருக்குச் சொன்னல், அவர் உடனே உயிரை விடுவார். அதைக்கண்ட இலக்குமணரும் தற்கொலை

செய்துக்கொள்வார். இதையறிந்த பரத சத்ருக்னரும், தாய்மாரும், மற்றும் அயோத்தி மக்களும் சாவார்கள். இப்படி நம்மால் கணக்கற்ற பேர்கள் சாவதைவிட நாமெல்லோரும் கடலில் விழுந்து சாவோம் என்று தீர்மானித்தார்கள்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சம்பாதி என்னும் கழுகு அரசன், எல்லா விவரங்களையும் தெரிந்துக்கொண்டு, "இராவணன் என்பவன் இலங்கையில் இருக்கிறன். இக்கடலைக் கடந்தால் இலங்கை இருக்கின்றது. சீதையை இலங்கையில் தான் சிறை வைத்திருப்பான்" என்று கூறி, பின்னும் நான் சடாயுவின் அண்ணன். சூரியன் சாபத்தால் என் இறக்கைகளை இழந்தேன். என் தம்பி இறந்ததனுல் இப்பொழுது கழுகுகளுக்கு அரசன் இல்லை. நான் உடனே அங்குப் போகவேண்டும். நீங்கள் எல்லோரும் "இராம, இராம" என்று சொன்னுல், என் இறக்கைகள் வளரும்" என்று சொல்ல, எல்லோரும் எழுந்து நின்று, கை கூப்பி, "இராம, இராம" என்று துதி செய்தார்கள். இறக்கைகள் வளர்ந்தன. அவர் பறந்து போய்த் தண்டகாரண்யம் சேர்ந்தார்.

யார் கடலைத்தாண்டுவது என்று யோசித்தார்கள். எல்லோரும் தங்களால் முடியாதென்று கூறினர்கள். அங்கதன் "நான் தாண்டுவேன். ஆனல் திரும்பி வரமுடியாது" என்றன். அப்பொழுது

சாம்பவான், "இதென்ன வேடிக்கை! வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடியது போல, அநுமார் இருக்க நாம் ஏன் கவலைப்பட வேண்டும். ஏனையா, அநுமாரே! ஒன்றும் தெரியாதவர் போல ஏன் பேசாமலிருக்கின்றீர்" என்றார். அவர் "இராமச்சந்திரர் அருளாலும், உங்கள் ஆசீர்வாதத்தாலும் இக்கடலைத் தாண்டி வருவேன்" என்றார். எல்லோரும் மகிழ்ச்சியடைந்து ஆசிகூற, மகேந்திர கிரியின் மேல் ஏறினார்.

# சுந்தர காண்டம்

இப்படி மகேந்திரகிரியின் மேல் ஏறிய அநுமார் தம் யோக சக்தியினால் ஆகாயத்தை அளாவும் பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு, இராமச் சந்திரனை மனத்தினால் தொழுதுகொண்டே கடலைத் தாண்டலானார். அங்கே, இந்திரனுக்குப் பயந்து, வாயுபகவான் உதவியால் கடலில் ஒளித்துக்கொண்டிருந்த மைந்நாக பர்வதம், வாயு புத்திரனுக்குத் தன் நன்றியைச் செலுத்த வேண்டுமென்று மேலே கிளம்பி வேண்ட, அநுமார் தாம் திரும்பிவரும்போது அதன்மேல் தங்கி இளைப்பாறுவதாகச் சொல்லி, வேகமாய் அதைத் தாண்டிச் சென்றார். அப்போது தன் எதிரில் அங்காரதாரை என்னும் ஒரு பெரிய அரக்கி நிற்பதைக் கண்டார். அவளை வழி விடும்படி வேண்ட, அவள் எதிர்த்து இவரைத் தின்னுவதற்காக வாயைத் திறக்க அநுமார் அவளுடைய வாயில் நுழைந்து, வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே புறப்பட்டார். பின்பு வெகுதூரம் இராம நாமத்தைச் சொல்லிக்கொண்டே போய், சூரியன் மறையும் சமயத்தில் இலங்கையின் மேல் குதித்தார்.

இராக்கதர்கள் பார்க்காதபடி தம்உருவத்தைச் சுருக்கிக்கொண்டு, இருட்டானபிறகு மதில் சுவரின்

சமீபத்தில் சென்று, அதின்மேல் ஏறி ஊருக்குள் போகலாமென்று நினைக்கும்போது, "யாரடா?" என்று கூச்சலிட்டுக்கொண்டு, நான்கு தலைகளும் எட்டுக் கைகளும் உடைய ஓர் அரக்கி தன்னோடு போர் செய்ய வருவதுகண்டு, அவளுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு அவள் மார்பில் குத்தினார். அவள் கீழே விழுந்து, பின் மூர்ச்சை தெளிந்து எழுந்து, "நான் இலங்கிணி, என்னைப் பிரமதேவர் படைத்து இலங்கையைக் காக்கும்படி அனுப்பினார். நான் 'எத்தனைக் காலம் காப்பது?' என்று கேட்க, 'ஒரு நாள் ஒரு குரங்கு வந்து உன்னைக் குத்தும். உடனே வந்துவிடு. பிறகு இலங்கை அழிந்து போம்' என்று சொன்னார்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டு பிரம்மலோகம் சென்றாள்.

அதன் பிறகு அநுமார் மதில் சுவரைத் தாண்டி ஊருக்குள் நுழைந்து தேடலானார். தெய்வத்தச்சனான விசுவகர்மாவினால் படைக்கப்பட்ட அவ்வூரைக் கண்டு அநுமார் அளவற்ற ஆச்சரியமடைந்தார். அகன்ற வீதிகளும், உயர்ந்த மாடமாளிகைகளும், பிரகாசிக்கும் விளக்குகளும், இடைவிடாது நடமாடும் கணக்கற்ற தேர்களும் யானைகளும் குதிரைகளும் ஆகியவற்றைக் கண்டும், உப்பரிகைகளின்மேல் அரக்கிமார்களுடைய ஆடல் பாடல்களைக் கேட்டும், பல வீதிகளைத் தாண்டி, இராவணன் கோயிலையும் அவன் தம்பிமார் முதலானவர்களுடைய அரண்மனைகளையும் ஒன்றும் விடாமல்

தேடிக்கொண்டே போனார். ஊர் முழுவதும் தேடியாயிற்று; ஆனால், சீதாதேவி காணப்படவில்லை.

அப்பொழுது துன்பத்தில் ஆழ்ந்த அனுமார் இவ்வாறு புலம்பினார். "நல்ல குலத்தில் பிறந்த கற்புடைய சீதாதேவியை இராவணன் கொன்றே விட்டானோ? அல்லது கொடிய செயலால் தின்று விட்டானோ? இலங்கைக்கு அப்புறத்தில் வேறே எங்கேயாவது சிறையில் வைத்தானோ? ஒருவகையாலும் அறிய முடியவில்லையே! கிட்கிந்தைக்குத் திரும்பிப் போய் இராமபிரானுக்கு என்னவென்று சொல்லுவேன்! ஆதலால், நான் இறந்தாலொழிய என் கொடிய துயரம் நீங்காது" என்றார்.

*கொன்றானோ கற்பு அழியாக்
குலமகளை கொடுந் தொழிலால்
தின்றானோ அப்புறத்தே செறித்தானோ
சிறை அறியேன் ஒன்றானும்
உணாகிலேன் மீண்டு
இனிப்போய் என் உரைக்கேன்
பொன்றாத பொழுது எனக்குக்
கொடும்துயரம் போகாதால்

— சுந்தர : ஊர்தேடு : 226.

இப்படி அவர் எண்ணித் துயரப் படும்போது, தூரத்தில் சிறிய விளக்கு ஒன்று எரிவது கண்டு,

*(அ-ரை.) செறித்தான் = அடக்கிவைத்தான், பொன்றாத = சாகாத.

'இதையும் பார்த்துவிடலாம்' என்று நினைத்து அதன் அருகில் செல்ல, அங்கே ஒரு விசாலமான பூஞ்சோலையின் நடுவில், ஓர் அசோகமரத்தின் அடியில், அரக்கிமார்களால் சூழப்பட்டு, ஒப்பு உயர்வு இல்லாத கட்டழகுடைய ஒரு பெண்மணி விசனமே ரூபமெடுத்ததுபோல் உட்கார்ந்திருந்ததைக் கண்டார்.

"இவள்தான் சீதாதேவி!" என்று துணிந்து, அளவற்ற மகிழ்ச்சியை அடைந்து, தம் உருவத்தை மிகச் சுருக்கிக்கொண்டு அம் மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்தார். கோர ரூபமுள்ள பல அரக்கிகள் தன்னைச் சூழ்ந்துகொள்ள, அளவிலாத் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் சீதாபிராட்டியைக் கண்டு, அநுமார், "உலகத்துக்கெல்லாம் தாயான இந்த சானகி, கற்புக்கே ஓர் அணிகலமாய், இப் பூலோகத்தில் எல்லாப் பெண்களுக்கும் ஓர் எடுத்துக்காட்டாய், என்றும் அழியாப் புகழைப் பெற்ற ஓர் மாதர்க்கரசி". என்று கொண்டாடினார்.

அவள்படும் வருத்தத்தைக் கண்டு அருகில் இருந்த விபீஷணனுடைய மகளான திரிசடையென்பவள், "அம்மா, பயப்படாதே, உனக்கு நல்ல காலம் பிறந்தது, ஒரு வண்டு உன் காதில் ரீங்காரம் செய்ததனால், உன் நாயகனுடைய தூதன் உன்னிடத்தில் வரப் போகிறான் என்று தெரிகிறது. அதுவுமன்றி, நான் ஒரு நல்ல கனவு கண்டேன். அதனால்

இராமபிரான் இங்கே வந்து இராவணனைக் கொன்று உன்னை மீட்பார் என்று நினைக்கிறேன்" என்று தைரியம் சொன்னாள்.

அச் சமயத்தில் அநுமார் அச் சோலையின் வெளியில் சந்திரன் உதித்தது போல் வெளிச்சம் உண்டாக, அது இன்னதென்று அறியாது திகைக்கும்போது, கணக்கற்ற விளக்குகளைத் தூக்கிக் கொண்டு தேவமாதர்கள் சூழ, இராவணன் அங்கே வருவதைக் கண்டார். அவருக்குப் பொறுக்க முடியாத கோபம் மூண்டது. கோபத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, அநுமார் 'இந்தக் கொடியவன் வந்தால் என்ன விளையுமோ!' என்று பயந்து, சீதா பிராட்டியை வாழ்த்தினார்.

"சானகி வாழி; இராகவன் வாழி; நான்கு வேதங்களும் வாழக்கடவன; பிராமணர் வாழக்கடவர்; நல்ல தர்மமும் வாழி" என்று யுகங்கள் தோறும் புதிது புதிதாகப் புகழை அடையும் அநுமார் மனப் பூர்வமாக வாழ்த்தினார்.

வாழி சானகி வாழி இராகவன்
வாழி நான்மறை வாழியர் அந்தணர்
வாழி நல்லறம் என்று உறவாழ்த்தினன்
ஊழி தோறும் புதிதுஉறும் கீர்த்தியான்.

— சுந்தர : நிந்தனை : 23.

அப்பொழுது இராவணன் சீதையிருக்குமிடத்தில் வந்து தன் ஆசையைத் தெரிவித்து, மூவுல

கத்தை ஆளும் செல்வத்தையுடைய தன்னை மணக்கும்படி வேண்டி தரையில் விழுந்து கும்பிட்டான்.

அவனைக் கண்டு முதலில் பதை பதைத்த சீதாபிராட்டி, பின்பு கோபத்தால் தைரியம் கொண்டு, அவனை ஒரு துரும்பாக மதித்து, அவன் நாணும்படி இவ்வாறு கூறினாள்.

"என் கணவனுக்கு பயந்தாய் ஆதலால், வஞ்சனையால் ஒரு மாயமானை ஏவி, அதன் பின்னே அவர் போன பிறகு மாறு வேடம் போட்டுக் கொண்டு வந்தாய்; நீ உயிரோடு இருக்கவேண்டுமென்று எண்ணினால் உன்னுடைய குலத்துச்கெல்லாம் விஷம் போன்றவளான என்னை உடனே விட்டு விடு; இல்லாவிட்டால், என் கணவன் வந்து உன்னை எதிர்த்தாரானால், அவரைப் பார்க்கவும் நீ பயப்படுவாய்"

*அஞ்சினை யாதலால் அன்று
ஆரியன் அற்றம் நோக்கி
வஞ்சனை மான் ஒன்று ஏவி மாயையால்
மறைந்து வந்தாய்
உய்ஞ்சனை போதி ஆயின் விடுதி
உன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை எதிர்ந்தபோது நோக்குமே
நினது நாட்டம்.

— சுந்தர : நிந்தனை : 41.

---

அ-ரை.) அற்றம் = (இல்லாத) சமயம், நாட்டம் = கண்கள்

"மேலும், அன்று சடாயுவந்து உன்னை எதிர்த்தபோது நீ தோற்றுப் போனாய்; கங்கையைச் சடையில் தரித்த பரமசிவனுடைய வாளால்தான் வென்றாய்; அது இல்லாதிருந்தால் அன்றே இறந்திருப்பாய். நீ தவம் செய்து பெற்ற வரம் நீ யமனால் சாகக்கூடாது என்றே ஒழிய, என் கணவனுடைய அம்பால் அழிய முடியாது என்று அல்ல."

*தோற்றனை பறவைக்கு அன்று துள்ளும்
நீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்றாய்
அன்று எனின் இறத்தி அனறே
நோற்ற நோன்பு உடைய வாழ்நாள்
வரம் இவை நுணித்த எல்லாம்
கூற்றினுக்கு அன்றே வீரன்
சரத்திறகும் குறித்தது உண்டோ.

— சுந்தர : நிந்தனை : 43.

அன்றியும், "பரமசிவனுடைய கைலாசத்தை எடுத்தேன்; எட்டுத்திக்குக் கஜங்களை வென்றேன் என்று உன்னுடைய வீரத்தை எல்லோரிடத்தும் சொல்லிக் கொள்ளும் நீ, அன்று பர்ணசாலையின் அருகில் இளையபெருமாள் வில்லைத்தாங்கித் தனியாய் நின்று கொண்டிருந்தபொழுது, அங்கேவரப் பயந்தாய். இப்பொழுது, மகாவீரனைப் போல தலைகளை எடுத்துக்கொண்டு பேசுவதேயல்லாமல், வெட்கமில்லாமல் பெண்கள் காலில் விழுகின்றாய்"

* (அ-ரை). சென்னி = தலை.

* மலை எடுத்து எண் திசை காக்கும் மாக்களை
நிலை கெடுத்தேன் எனும் மாற்றம் நேரும் நீ
சிலை எடுத்து இளையவன் நிற்கச்சேர்ந்திலை
தலை எடுத்து இன்னமும் மகளிர்த்தாழ்தியோ.

— சுந்தர : நிந்தனை : 16.

என்று இவ்வாறு கடுஞ்சொற்களால் அவனுடைய மனம் கொதிக்கும்படி ஏசவே, அவன் அடக்கமுடியாக் கோபங்கொண்டு, "இனி நீ இரண்டு மாதத்திற்குள் என்னை மணக்காவிட்டால் உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று அதட்டி, அச்சோலையினின்றும் வெளியேறினன். அப்பொழுது அரக்கிமார் சீதையைச் சூழ்ந்துகொண்டு அவளை வெருட்ட ஆரம்பித்தார்கள்.

அதுகண்ட அநுமார் ஒரு மந்திரத்தை உச்சரிக்க அவர்களெல்லாம் படுத்துத் தூங்கினர்கள். சீதாதேவி எல்லையில்லாத் துன்பத்தில் ஆழ்ந்து, இவ்வாறு புலம்பினள்.

"பகைவர் ஊராகிய இந்த இலங்கையில் இத்தனை மாதகாலம் இருந்து, என் கஷ்டங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு, என் உயிரையும் காப்பாற்றினேன்; எதற்காக என்றால், ஒலிக்கும் பெரிய வீரக்கழல்களை அணிந்த என் கணவனைக் காண்பேன் என்ற ஆசையால். ஆனல், பலநாட்கள்

---

* (அ-ரை.) மாக்கள் = விலங்குகள், மாற்றம் = சொல்.

*இராக்கதருடைய ஊரில் சிறையிருந்தவளான என்னை அந்தப் பரிசுத்தமான மனத்தையுடைய என் நாதர் தீண்டுவாரா?"*

* பொறை இருந்து ஆற்றி என் உயிரும் போற்றினேன்
அறை இரும் கழலவன் காணும் ஆசையால்
நிறை இரும் பல்பகல் நிருதர் நீள் நகர்
சிறை இருந்தேனை அப்புனிதன் தீண்டுமோ.

— சுந்தர : உருக்காட்டு : 11.

*பின்னும் தன்னையே நொந்து கொள்ளுகிறாள்: "உலகம் உள்ளளவும் நீங்காதபழியை நான் சுமந்துகொண்டு கவலையற்று வாழ்கின்றேன்; நல்ல குலத்தில் பிறந்ததனாலுண்டான என் மேன்மையும், என் நாணமும் நன்றாயிருக்கின்றன! கதைகளில் சொல்லப்பட்ட கற்புடைய பெண்களுடைய சரித்திரங்களில் கணவனைப்பிரிந்து இத்தனைநாள் வாழ்ந்தவர்கள் என்னைத்தவிர வேறொருவருமில்லை"*

†சொல் பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்
நல்பிறப்பு உடைமையும் நாணும் நன்று அரோ
கற்பு உடை மடந்தையர் கதையுளோர் கள்தாம்
இல் பிரிந்து உய்ந்தவர் யாவர் யான் அலால்.

— சுந்தர : உருக்காட்டு : 13.

---

* (அ-ரை). *பொறை=பொறுமை, அறை=ஒலிக்கின்ற, இரும் = பல, நிருதர் = அரக்கர், புனிதன் = பரிசுத்தமானவன்.*

† (அ-ரை.) *மடந்தையர் = பெண்கள், இல் = வீடு, உய்ந்தவர் = பிழைத்து இருந்தவர்கள்.*

பின், நடக்கப்போவதை நினைத்து அஞ்சுகின்றாள் : "எல்லாரும் அதிசயிக்கும்படியான நற்குணங்களையுடைய என் கணவர் இராக்கதகுலத்தைத் தம் வில்லால் வேரோடு அழித்து என்னைச் சிறையினின்றும் மீட்குங்காலத்தில் 'உனக்கு என் வீட்டிற்குள் நுழைய தகுதி இல்லை' என்று சொன்னானால், அப்பொழுது நான் கற்புடையவள் என்பதை அவருக்கு எவ்விதமாகக் காட்டுவேன்" என்று கலங்கினாள்.

* அற்புதன் அரக்கர் தம் வருக்கம் ஆசற
வில் பணி கொண்டு அரும் சிறையின் மீட்ட நாள்
இல் புகத்தக்கலை என்னின் யானுடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்.

— சுந்தர : உருக்காட்டு : 20.

"ஆதலால் என் உயிரைவிட்டு என் கற்பைக் காப்பாற்றுதல் தான் தர்மம்" என்று ஒரு குருக்கத்திப் புதரின் அருகே சென்றாள். அப்பொழுது 'அநுமாரும் சீதாபிராட்டி புதரினிடத்தில் சென்றதைப்பார்த்தார்; ஆனால், அவளுடைய மேனியைத் தீண்டப்பயந்து, "அடியேன் உலகநாதனை இராமபிரானுடைய தூதன்" என்று சொல்லிக் கொண்டு, கோவைப்பழம் போன்ற சிவந்தவாயை உடையவளும், மயில்போன்ற சாயலை உடையவளு

* (அ-ரை) வருக்கம் = குலம், எப்பரிசு = எவ்விதத்தில்.

மான சீதாதேவிக்கு எதிரில் தோன்றி அவளைத் தொழுதார்.

* கண்டனன் அனுமனும் கருத்தும் எண்ணினன்
கொண்டனன் துணுக்கம் மெய் தீண்டக் கூசுவான்
அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனத்
தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன்றினன்.

— சுந்தர : உருக்காட்டு : 22

மேலும் சொன்னார் : " அம்மா! இராமபிரான் உன்னைத் தேடுவதற்காக அனுப்பிய குரங்குகளுள் நான் ஒருவன். அவர் சொன்ன அடையாளங்கள் இருக்கின்றன. உன்னை இவ்விடத்தில் சிறை வைத்திருப்பது அவருக்குத் தெரியாது. நீ என் மேல் சந்தேகப்படாதே" என்று தாயைக்கண்ட மகவைப்போலப் பேச, சீதாதேவி இவ்விதமாக அநுமார் வணங்கி நிற்பதைப்பார்த்து, அன்பும் சினமும் மனத்தில் உண்டாக, தனக்குள் "என் எதிரில் நின்ற இவன் இராக்கதன் அல்லன்; நல்லவழியில் நடந்து ஐம்பொறிகளையும் அடக்கின யோகியாயிருக்கவேண்டும்; இல்லாவிடில், தேவனாகவேண்டும் ; அறிவுடன் பேசுகிறான்; பரிசுத்தமான மனத்தை உடையவனாகவும், குற்றமற்றவனாகவும் காணப்படுகின்றான்" என்று நினைத்தாள்.

---

* (அரை). துணுக்கம் = அச்சம், தொண்டை = கோவைப்பழம்.

* என்று அவன் இறைஞ்ச நோக்கி
இரக்கமும் முனிவும் எய்தி
நின்றவன் நிருதன் அல்லன் நெறி
நின்று பொறிகள் ஐந்தும்
வென்றவன் அல்லனாகில்
விண்ணவன் ஆக வேண்டும்
நன்று உணர்வு உரையன்
தூயன் நவையிலன் போலும் என்னா.

— சுந்தர : உருக்காட்டு : 26.

இவ்வாறு நினைத்து, அநுமாரைப்பார்த்து "ஓ வீர! நீ யார்" என்றாள். அதற்கு அநுமார், சீதாபிராட்டி இராமபிரானைப் பிரிந்தது முதல் அன்றுவரை நடந்தவையெல்லாம் எடுத்துக்கூற, சீதாதேவி மிகுந்த மகிழ்ச்சியை அடைந்து, "அநுமாரே! என் நாயகன் எப்படி இருப்பார்?" என்றாள். அதற்கு அநுமார் இராமருடைய அழகையெல்லாம் வர்ணித்து, அவர் சொன்ன சில அடையாள மொழிகளையும் கூறினார்.

"பெரியகிரீடத்தை அணிந்த தசரத சக்ரவர்த்தி ஆணையை மேற்கொண்டு அரசாளும் செல்வத்தை அடைந்து, பின்பு அதனை நீங்கி, நானும் சீதையும், இலக்குமணனும் காட்டுக்குப்போகப் புறப்பட்ட

---

அனா). இறைஞ்ச = வணங்க, பொறிகள் = இந்திரியங்கள், விண்ணவன் = தேவன், தூயன் = பரிசுத்தன், நவை = குற்றம்.

போது, அயோத்தியா நகரின் மதிலோடுகூடிய கோட்டை வாசலைக்கடப்பதற்கு முன்னமே, 'காடு எங்கே?' என்று சீதை கேட்டதையும் அவளிடத்தில் சொல்" என்றார்.

*நீண்ட முடிவேந்தன் அருள் ஏந்தி நிறை செல்வம்
பூண்ட தனை நீங்கி நெறி போதல் உறும் நாளில
ஆண்ட நகர் ஆரையொடு வாயில் அகலா முன்
யாண்டையது கான் என இசைத்ததும் இசைப்பாய்.

— சுந்தர : உருக்காட்டு : 61.

இவ்விதமாக இராமபிரான் கூறிய அடையாள மொழிகளைக்கூறி, இறுதியில் அவர் கொடுத்த கணையாழியைப் பயபக்தியுடன் சீதாபிராட்டிக்குக் கொடுத்தார்.

அப்பொழுது சீதாதேவி அடைந்த நிலைமையை யாராலும் வர்ணிக்கமுடியாது.

"அழகிய நெற்றியை உடைய சீதாபிராட்டியின் மகிழ்ச்சியை எவ்விதமாக எடுத்துச் சொல்லுவது! ஒரு நற்காரியமும் செய்யாதவன் இறந்த பிற்பாடு பரமபதத்தை அடைந்தான் என்பேனா? விலையுள்ள ஒரு பொருளை வைத்த இடம் இன்னது என்பதை மறந்தவனுக்குத் திடீரென்று அது நினைவில் வந்தது என்பேனா? உடலைவிட்டுச் சென்ற உயிர் மறுபடியும் உடலுக்குள் நுழைந்தது என்பேனா"

* (அரை). ஆரை = மதில், கான் = காடு, நுதலி = நெற்றி உடையவள்.

* இறந்தனர் பிறந்த பயன் எய்தினர் கொல் என்கோ
மறந்தனர் அறிந்து உணர்வு வந்தனர் கொல என்கோ
துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது கொல் என்கோ
திறம் தெரிவது என்னை கொல்இ நன் நுதலி செய்கை,

— சுந்தர : உருக்காட்டு : 64.

*இப்படி, கரையற்ற மகிழ்ச்சியை அடைந்த சீதாபிராட்டி, அநுமாரைப்பார்த்து :*

*"மூவுலகத்தைப் படைத்தவனையும் படைத்த முழுமுதல் கடவுளான இராமச்சந்திரனுடைய தூதா! என் உயிரை எனக்கு மகிழ்ச்சியுடன் கொடுத்த உனக்கு, பிரதியுபகாரமாக என்னால் என்ன செய்ய முடியும்? எனக்குத்தாயும் தந்தையுமான தலைவனே! அருளுக்கு இருப்பிடமானவனே! நீ எனக்கு இவ் வுலகில் புகழோடு வாழ்வும், மறுமையில் முக்தியை யும் கொடுத்தாய்" என்றாள்.*

மும்மையாம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர் தந்தாய்க்குச்செயல்
என்னால் எளியதுண்டே
அம்மையாய் அத்தன்ஆய அப்பனே
அருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானும்
நல்கினை இசையோடு என்றாள்.

— சுந்தர : உருக்காட்டு : 71.

ஆகையால், "வலிமைபொருந்திய பெரிய தோள்களையுடைய வீரனே! துணை ஒருத்தருமில்லாத என்னுடைய துன்பத்தைத் தீர்த்த வள்ளலே! நீ வாழ்வாயாக. யான் குற்றமில்லாத மனத்தை யுடையவளானல், பலயுகங்களை ஒரு தினமாகக்கொண்ட பலவருடங்களும், பதினன்கு உலகங்கள் அழிந்தாலும் நீ இன்று எப்படி இருக்கிறாயோ அப்படியே வாழக்கடவாய்!" என்று வாழ்த்தினள்.

* பாழிய பணைத்தோள் வீர, துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ளலே யான் மறுவிலா மனத்தேன் என்னில்
ஊழி ஓர் பகலாய் ஓதும யாண்டு எல்லாம் உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி என்றாள்.

— சுந்தர : உருக்காட்டு : 72.

பிறகு அநுமாரை நோக்கி "நடந்ததெல்லாம் விவரமாய்ச் சொல்லுவாய்" என்று வேண்டினள். அநுமாரும் நிகழ்ந்ததைக்கூறி "அம்மா! உன்னைப் பிரிந்த துயரத்தினல் இராமபிரான் உயிரை விட்டிருப்பார். ஆனல், அவருடைய உயிர் நீயேயாதலால், நீ இங்கே இருக்க, அவர் அங்கே எந்த உயிரை விடுவார்? இராமபிரான் கிட்கிந்தைக்கு வந்தபொழுது, நீ எங்களிடத்தில் போட்ட ஆபரணங்களைக் காட்டினேம். அவைகளைக்கண்டதனல்தான் நீ இன்னும் சுமங்கலியாய் இருக்

* (அரை) நல்கினை = கொடுத்தாய், பாழிய = வலிமையுடைய, பரிவு = துன்பம், வீவுற்ற = அழிந்த

கின்றாய். அவர்படும் துயரத்தைக்கண்டு எங்கள் அரசனான சுக்ரீவன் தனக்கு இராச்சியம் கிடைத்தால், வானர சேனையைக்கொண்டு உலகமெல்லாம் தேடி உன்னைக்கண்டு பிடிப்பதாக சத்தியம் செய்ததனால்தான் அடியேன் இங்கு வரலாயிற்று. இனி நான் போவதுதான் தாமதம், இராமபிரான் வானர சேனையோடு வந்து உன்னை மீட்பார்" என்று சீதாதேவியின் மனக்கவலை நீங்கும்படி கூறினார்.

இதையெல்லாம் விவரமாகத் தெரிந்துகொண்ட சீதாபிராட்டி ஒரு சந்தேகத்தை நீக்குவதற்காக, அநுமாரைப்பார்த்து, " அநுமானே! இந்தச் சிறிய உருவத்தோடு கடலை எப்படித்தாண்டினாய்" என்று வினவினாள். அதற்கு அநுமார், தம் பெருமையைத் தாமே சொல்லிக்கொள்வது தகாது; மேலும் எந்தக் காரியமும் இராமபிரானுடைய அருளில்லாமல் முடியாது; ஆதலால், இவ்வாறு பதில் அளித்தார்.

"சிறிய இடையை உடையவளே! உன்னுடைய கணவனான இராமபிரானுடைய பரிசுத்தமான அடிகளை எப்பொழுதும் தியானிக்கும் அறிவினையுடைய ஞானிகள், ஒழிப்பதற்கு அருமையான மாயையாகிய பெரிய கடலைத் தாண்டுவதுபோல, அடியேனும் என் கால்களினால் கருங்கடலைத் தாண்டினேன்" என்றார்.

* சுருங்கு இடை உன் ஒரு துணைவன் தூய தாள்
ஒருங்கு உடை உணர்வினர் ஓய்வு இல் மாயையின்

பெரும் கடல் கடந்தனர் பெயரும் பெற்றி போல்
கருங்கடல் கடந்தனென் காலினுல் என்ருன்.

—சுந்தர : உருக்காட்டு : 97.

அதற்குச் சீதாபிராட்டி, "அது உண்மையே யாயினும், இவ்வளவுசிறியஉடலோடு அகன்றபெரிய கடலைத்தாண்டினது தவத்தினுலோ? அல்லது சித்தியினுலோ? சொல்லுவாய்" என்ருள். அப்பொழுது அநுமார், "என் சிறிய உருவத்தைப்பார், அம்மா!" என்று கைகூப்பியவண்ணம் ஆகாயத்தை அளாவும்படி வளர்ந்தார். அதைக்கண்ட சீதாபிராட்டி பயந்து, "அப்பா! உன் உருவத்தைச் சுருக்கிக்கொள்" என்று கூறி, "அநுமானே! உன்னைப்போன்ற வீரன் துணையாய் இருக்க என் நாயகன் இராக்கதர்களை வெல்வார் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அதுவுமன்றி, வலிமையுடைய பருத்த தோள்களையுடைய வீர! சக்ராயுதத்தை ஏந்திய நீண்ட கைகளையுடைய ஆண்மக்களில் சிறந்தவனை என் கணவனுடைய அருளும், புகழும் அழிவில்லாமல் பல யுகங்கள் இவ்வுலகத்தில் நிலைநிறுத்துவதற்கு நீ ஒருத்தனே இருக்கின்ருய்! உன் பெருமைக்குத் தக்கபடி பகைவர் ஊரான இந்த இலங்கைஏழு சமுத்திரத்திற்கும் அப்பால் இல்லாதது ஒரு குறையே ஆகும்" என்று முகமன் கூறினள்.

---

* (அ-ரை.) ஒருங்கு = தியானித்தல், சேர்தல்.

ஆழி நெடும் கை ஆண் தகை தன்
அருளும் புகழும் அழிவு இன்றி
ஊழி பலவும் நிலை நிறுத்தற்கு
ஒருவன் நீயே உளையானாய்
பாழி நெடும் தோள் வீரா நின்
பெருமைக்கு ஏற்பப்பகை இலங்கை
ஏழு கடற்கும அப்புறத்தது
ஆகாது இருந்தது இழிவு அன்றோ

— சுந்தர : உருக்காட்டு : 110

இதைக் கேட்டு மகிழ்ந்த அநுமார், "அம்மா! என்னிலும் பலமுள்ள வீரர்கள் பலர் இராமபிரானுக்கு அடிமைத்தொழில் செய்யக் காத்துக்கொண்டு இருக்கிறார்கள். இச்சமயத்தில் எனக்கு ஒருயோசனை தோன்றுகின்றது. நீ கோபித்துக்கொள்ளாமல் கேட்பாயானால் சொல்லுகிறேன். அதாவது, உன்னைப் பார்த்த பிறகும், உன்னைத் தனியாய் இந்த இராக்கதர் ஊரில் விட்டுப்போவது என் அடிமைத் தொழிலுக்கு இழிவாகும். ஆதலால், என்மேல் அருள் கூர்ந்து என் புஜத்தின்மேல் உட்காருவாயானால், ஒரு வினாடியில் இராமபிரானுடைய பாதத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து விடுவேன்" என்று தன் உடல் பூமியில் படியும்படி வணங்கினார்.

இவ்வளவு அன்புடன் தன் நன்மைக்காகச் சொன்னதைக்கேட்ட சீதைபிராட்டி "அநுமானே! உன் பலத்துக்கும் வீரத்துக்கும் தகுந்த யோச

னையே சொன்னாய். ஆனால், இது சரியல்ல என்று என் பெண் புத்திக்குத் தோன்றுகின்றது. முதலாவது, கடலைத்தாண்டும்போது இராக்கதர்கள் வந்து தாக்கினால், என்னையும் காப்பாற்ற முடியாது. அவர்களுடன் போர்செய்யவும் முடியாது.

அன்றியும், உலகத்தார், 'இராமனுடைய மனைவியை ஓர் இராக்கதன் கொண்டுபோக, அவளை மீட்க அவனால் முடியாமல், ஒரு தூதன் மீட்டான்' என்று பேசுவார்கள். நல்லவர்களுக்கெல்லாம் துன்பத்தை விளைவிக்கும் இராக்கதர் ஊராகிய இலங்கை மட்டுமா? கணக்கில்லாத உலகங்களையெல்லாம் என்னுடைய சொல்லால் சுட்டிருப்பேன். ஆனால், புண்ணியமூர்த்தியான என் கணவனுடைய வில் வித்தைக்கு அது இழிவாகுமென்று சுடாது விட்டேன்"

அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினால் சுடுவேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்

— சுந்தர : சூடாமணி : 18

மேலும், நீ என்னை எடுத்துக்கொண்டு போகக் கூடாது என்பதற்கு வேறொரு காரணமும் உண்டு. சத்தியகுணமுடையவனே! அதையும் கேள். ஆண் "சிங்கத்துக்குச் சமானமான என் கணவனுடைய உடலையல்லாது வேறெந்த ஆண்மக்கள் உடலையும்

*நான் தீண்ட முடியுமோ? நீ ஐம்பொறிகளையும் வென்றவனானாலும், உன்னையும் உலகம் ஆண்மகன் என்று கூறும் அல்லவா?*

வேறுமுண்டு உரை கேள் அது மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனி அல்லால் இடை
ஆறும் ஐம்பொறி, நின்னையும் ஆண் எனக்
கூறும் இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ.

— சுந்தர : சூடாமணி :19.

*ஆதலால், நீ விரைவில் சென்று என் நாயகனை இங்கு அழைத்து வருதல் நலம்" என்றாள். இதைக் கேட்ட அநுமார் சீதாபிராட்டியின் அளவிலா அறிவை மெச்சிக்கொண்டு, "அப்படியே செய்கின்றேன். நான் இராமபிரானுக்குச் சொல்லும் அடையாள மொழிகளை அருள் செய்யவேண்டும்' என்று வேண்ட, "அநுமானே! இன்னும் இங்கே ஒரு மாதம் தான் பிழைத்திருப்பேன். அதற்குள் இங்கே வராமல் போனால் எனக்குச்செய்யவேண்டிய கடன்களைக் கங்கைக்கரையில் செய்யும்படிசொல்லுவாய்" என்று கூறி இன்னும் சொல்லுவாள்: "மிதிலைக்கு வந்து என்னை மணம் செய்துகொண்ட பொழுது இந்தப் பிறப்பிலே இன்னொரு பெண்ணை மனத்தினாலும் தொடமாட்டேன் என்று எனக்குக்கொடுத்த நல்லவரத்தை என் கணவனுக்குச்சொல்லி நினைவூட்டுவாய்.'*

வந்து எனைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்தஇப் பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.

— சுந்தர : சூடாமணி : 34.

*மேலும், " நான் இந்த இலங்கையிலேயே மீட்கப்படாமல் இருந்து உயிரைவிட்டாலும், மறுபடியும் இன்னொரு சன்மத்திலாவது அவரை நான் மணந்து பரிசுத்தமாகும் வரத்தை வணக்கத்துடன் கேட்டதாகச் சொல்லுவாய்"*

ஈண்டு நான் இருந்து இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்து தன் மேனியை
தீண்டல் ஆவதொர் தீவினை தீர் வரம்
வேண்டினுள் தொழுது என்று விளம்புவாய்.

— சுந்தர : சூடாமணி : 35.

*அன்றியும், " சிறப்புடன் என் கணவனுடன் சிங்காதனத்தில் உட்கார்ந்து அரசாளவும், நல்ல மணிகள்கட்டிய கயிற்றை அணிந்த பட்டத்து யானையின்மேல் ஏறி வீதிகளில் பவனி வரவும், அயோத்தியில் அடிக்கடி நடக்கும் கோலங்களைக் காணவும் எனக்கு நல்வினை இல்லாமல் போயிற்று. பலவார்த்தைகளைச்சொல்லி என்ன பயன் ; நான் முன்செய்த தீவினையை நினைத்து நினைத்து வருந்துகின்றேன்.*

---

* (அ-ரை) வைகல் = தினம்.

அரசு வீற்றிருந்து ஆளவும் ஆய்மணி
புரசை யானையின் வீதியில் போகவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரை செய்து என்னை என் ஊழ்வினை உன்னுவேன்.

சுந்தர : சூடாமணி : 36·

*கடைசியாக, அநுமானே! உன்னை எனக்காக ஒரு காரியம் செய்யும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். அதாவது, "என் தந்தை என் தாயார் முதலிய என்னுடைய சுற்றத்தார் எல்லோர்க்கும் எனது வணக்கத்தை சொல்லுவாய்; குரங்குகளுக்கு அரசனை சுக்ரீவனை நோக்கி, அழகிய தோள்களையுடைய என் கணவனை விடாது பின்தொடர்ந்து பாதுகாத்து, அயோத்திக்கு அழைத்துப்போய் அந்த அழியாத இராச்சியத்துக்குச் சக்ரவர்த்தி ஆக்கும்படி சொல்லுவாய்" என்றாள்.*

எந்தை யாய் முதலிய கிளைஞர் யார்க்கும் என்
வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச
சுந்தர தோளனை தொடர்ந்து காத்துப்போய்
அந்தமில் நெடுநகர்க்கு அரசன் ஆக்கு என்பாய்.

— சுந்தர : சூடாமணி : 38

*அப்பொழுது அநுமார், "இதென்ன! இன்னும் நீர் உம்முடைய அச்சத்தை விடவில்லையா? இராம பிரான் தம் உயிராகிய உம்மை இங்கே விட்டு*

(அ·ரை) *புரசை = யானைகட்டுங் கயிறு. யாய் = தாய், கவி = குரங்கு.*

அயோத்திக்குப் போவாரா? இன்னும் சில நாட்களுக்குள் இராமபிரானும் நாங்களும் இங்கே வந்து இராக்கதர்களை அடியோடு அழித்து உம்மை மீட்பதை நீரே பார்க்கப் போகிறீர். மேலும், சானகி என்னும் ஒரு நெருப்பு இலங்கையின் நடுவில் இருப்பதனாலும், குற்றமற்ற இராமபிரானுடைய அம்புகளாகிய காற்று வீசுதலாலும், தீச்செயலையுடைய இராக்கதர்களாகிய கரி வெந்து சாம்பலாவதையும், பொன் மயமான பெரிய இலங்கா நகரம் உருகிப் போவதையும் நீரே காணபபோகிறீர்" என்றார்.

வினை உடை அரக்கர் ஆம் இருந்தை வெந்து உகச்
சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கலால்
அனகன் கை அம்பு எனும் அளவில ஊதையால்
கனக நீடு இலங்கை நின்று உருகக் காண்டியால

— சுந்தர : சூடாமணி : 59.

இதையெல்லாம் கேட்டு மகிழ்ந்த சீதாதேவி "அநுமானே! முன் ஒருகால் இந்திரனுடைய மகன் காக்கை உருவம்கொண்டு என் மார்பைக் குத்திய போது என் கணவன் ஒரு துரும்பை எடுத்துவிட, அது ஒரு அம்பின் வடிவம்கொண்டு அவனைத் துரத்த, அவன் பரமசிவன், பிரமா முதலானவர்களைக் காப்பாற்றும்படி வேண்டியபொழுது, அவர்கள் அவனை என் நாயகனையே சரணமடையும்படி சொல்ல, அப்படியே அவன் சரணமடைய, சரணமடைந்தவன் என்ன குற்றம் செய்தாலும் அவனை

---

* (அ·ரை) இருந்தை = கரி, தழல் = தீ, அனகன் = குற்றமில்லாதவன், ஊதை = காற்று.

மன்னிப்பது என் கணவனுடைய கொள்கையாத லால், அவனை மன்னித்துவிட்டார். இதை அவருக்குச் சொல்" என்று கூறி, தன் சடையில் இருந்த சூடா மணியை அவர் கையில்கொடுத்து வாழ்த்தினாள். அவரும் அவளை மும்முறை சுற்றிவந்து வணங்கி விடைபெற்றுப் புறப்பட்டார்.

புறப்பட்டவர் அவ்வனத்தின் வழியே போகும் போது, "வெறுங்கையோடு இராமபிரானிடத்தில் போவது எனது அடிமைத்தொழிலுக்கு இழிவாகும். இவ்வனத்தை அழித்தால் இராக்கதர்கள் சண் டைக்கு வருவார்கள். அவர்களையெல்லாம் கொன் றால், முடிவில் இராவணனே வந்தாலும் வருவான். அவனைத் தோற்கடித்தால் சீதாபிராட்டியை விட்டு விடுவான்" என்று நினைத்த, சிறிது நேரத்தில் அத் தோட்டம முழுவதையும் பொடிசெய்து விட்டார். இதைக்கண்ட அரக்கிமார், "இந்தக் குரங்கு யார்" என்று சீதையைக்கேட்க, சீதை "கொடுமையை உடைய அரக்கர் கொடிய தொழில் செய்தலை அவர் களைப்போன்ற கொடியவர்களே தெரிந்துகொள்ள வேண்டுமேயல்லாது, உங்களுடைய மாயங்களையெல் லாம் என்னைப்போன்றவர்களால் அறியமுடியுமா? மாரீசனாகிய மாயமான் எங்களிடத்தில் வர, அது இராக்கத மாயை என்று இளையவர் சொல்லியும் நான் அது நல்ல மான் என்று மயங்கிவிட்டேன்" என்று பதில் அளித்தாள்.

தீயவர் தீய செய்தல் தீயவர் தெரியின் அல்லால்
தூயவர் துணிதல் உண்டே நும்முடைச் சூழல் எல்லாம்
ஆயமான் எய்த அம்மான் இளையவன் அரக்கர் செய்த
மாயம் என்று உரைக்கவேயும் மெய்யென மையல் கொண்டேன்

— சுந்தர : பொழில் இறுத்த : 48.

அந்த வனத்தைக் காத்துக்கொண்டிருந்த இராக்கதர் ஓடி இராவணனிடம் சொல்ல, அவன் கிங்கரர் என்னப்பட்ட பல அரக்கரை ஏவி, " உடனே அக்குரங்கைக் கொல்லாமல் பிடித்து வாருங்கள் " என்றான். அவர்கள் அநுமாரைச் சூழ்ந்துகொண்டார்கள். இதை எதிர்பார்த்திருந்த அநுமார், தம் பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு, ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி அவர்களையெல்லாம் அடித்துக் கொன்றுவிட்டார்.

தூதர்கள் ஓடி இராவணனுக்குச் சொல்ல, அவன் சம்புமாலி என்பவனை ஏவினான். அவன் பெருஞ் சேனையைக் கூட்டிக்கொண்டுவர அச் சேனையை அழித்து அவனையும் கொன்றார். அதைக் கேட்ட இராவணன், " நானேபோய் அக்குரங்கைப் பிடிப்பேன் " என்று எழுந்திருக்க, அப்பொழுது பஞ்சசேனாதிபதிகள் "ஐயா, நீர் சென்றால் தேவர்கள் சிரிப்பார்கள். ஆகையால், நாங்கள்போய் ஒரு நொடியில் பிடித்துக்கொண்டு வருவோம்" என்று புறப்பட்டார்கள். அவர்கள் எல்லோரையும் அநு

* (அ-ரை) சூழல்=மாயச்செயல், மையல்=மயக்கம்.

மார் மரங்களாலும், மலைகளாலும், இரும்புத் தூண்க ளாலும் கொன்று நாசமாக்கினர். அது எப்படி யிருந்ததென்றால், "வஞ்சனையையும், மோசத்தையும் விரும்பி, நீதியில்லாத தீயவழியில்சென்று, விஷத் திலும் கொடியவர்களாய், பிறர்க்கு கெடுதியே செய் யும் துர்க்குணத்தை யுடையவரும், கொடிய கோபத்தை உடையவருமான ஐந்து சேனாதிபதிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்புலன் களை ஒத்தார்கள்; அவர்களைவென்ற அநுமாரும் நல்ல அறிவை ஒத்தார்."

வஞ்சமும் களவும் வெஃகி வழியலா வழிமேல் ஓடி
நஞ்சினும் கொடியராகி நவை செயற்கு உரிய நீரார்
வெஞ்சின அரக்கர் ஐவர் ஒருவனே வெல்லப்பட்டார்
அஞ்செனும் புலன்கள் ஒத்தார். அவனும் நல் அறிவை
[ஒத்தான்.

—சுந்தர : பஞ்சசேனாதிபதிகள் : 64.

சம்புமாலி செத்தான் என்று கேட்ட இராவ ணன் கோபங்கொண்டு புறப்பட, அப்பொழுது அவனுடைய இளைய புதல்வனை அட்சயகுமாரன் தன்னை அனுப்பும்படி வேண்டினான். இராவணன் அதற்கு ஒப்புக்கொள்ள, கணக்கற்ற இராக்கத சேனையோடு அவன் புறப்பட்டுவந்து அநுமாரை எதிர்த்தான். அநுமார் இவன் இந்திரஜித்தோ என்று சந்தேகித்துப் பிறகு அவன் அல்ல என்று அறிந்து, "நான் எண்ணியபடியே முடியும் போல்

இருக்கின்றது" என்று நினைத்து, இராமநாமத்தைச் சொல்லிக்கொண்டு முன்னிலும் அதிகவேகத்தோடு போர்செய்து அச்சேனையை அழித்தார். அது கண்ட அட்சயன் தேரை வேகமாகச் செலுத்திக் கொண்டு அநுமான் மேல் எண்ணிறந்த அம்புகளை எய்ய, அவைகளை இலட்சியம் செய்யாமல், அவன் தேரின்மேல் குதித்து, குதிரைகளை அழித்து, சாரதியைக்கொன்று, அட்சயனைப் பிடித்து மார்பில்குத்தி பூமியில்தள்ளி தனது கைகளால், அவனுடைய உருவம் தெரியாதபடி தேய்த்துவிட்டார்.

இதைக்கேட்ட மண்டோதரி இராவணன் காலில் விழுந்து அலறினள். இந்திரசித்து கோபாவேசங் கொண்டு, இராவணன் சபைக்குச் சென்று, "இதை அற்பக் குரங்கு என்று நினைத்தல் தவறு, இதை நானே போய்ப் பிடித்து வருவேன்" என்று புறப் பட்டான். சேனையைத் திரட்டிக்கொண்டு, போர்க் களத்திற்குச் சென்று அட்சயன் உடலைக் கண் டான்; அளவிலாத் துன்பம் அடைந்தான்; கோபத் தால் விசனத்தை அடக்கிக்கொண்டு அநுமான் முன் சென்றுன். அநுமாரும் இவனைப் பார்த்து "இவன்தான் இந்திரசித்து, இதுவரையில் வந்த வீரர்களைப் போன்றவனல்லன். இவன் மிக்க புஜ பலத்தையுடையவன். இவனை வெல்வது மிகவும் அரிது. இவனை வென்றேனுல், இராவணன் சீதாதேவியை விட்டுவிடுவான்" என்று நினைத்து போருக்குச் சித்தமாய், ஒரு மராமரங்கொண்டு அச்

சேனையை அழிக்கத் துவங்கினர். ஒரு நொடி நேரத்தில் ஆயிரக்கணக்கான அரக்கரைக் கொன்று, கணக்கிலா யானைகளையும் தேர்களையும் பொடியாக்கவே, இந்திரசித்து தன் தேரை வேகமாகச் செலுத்திக்கொண்டு முன்வந்து, அநுமார் மேல் அம்புகளை எய்ய, அவைகளையெல்லாம் ஒடித்து நாசமாக்கி இந்திரசித்துவின் தேரையும் அழித்தார். அது கண்டு அவன் மிகவும் திகைத்து, 'இனி, பிரமாஸ்திரத்தைத் தொடுத்துப் பார்ப்போம்' என்று அதை எடுத்து மனத்தினுல் பூசை செய்து, அநுமார் தோள்களை இலக்காகவைத்து எய்தான். எய்யவே அந்தத் தெய்விகமான அம்பு பயங்கரமான ஆதிசேஷனுடைய உருவங்கொண்டு, உலகமெல்லாம் நடுங்கும்படி வேகத்துடன் சென்று அநுமாருடைய தோள்களைச் சுற்றி இறுகக் கட்டிவிட்டது. அவர் பலமெல்லாம் ஒடுங்கி அப்படியே பூமியில் சாய்ந்தார்.

இதைக் கண்ட அரக்கர் கரையில்லா மகிழ்ச்சி கொண்டு அநுமாரைச் சுற்றிக்கொண்டு அப்பாம்பின் தலையையும் வாலையும் பற்றி இழுத்துக்கொண்டு இந்திரசித்தின் பின்னே இராவணன் சபைக்குச் சென்றார்கள். இந்திரசித்து அநுமாரை இராவணனுக்குக் காட்டி, "அளவிலாத பலத்தையுடைய இவ் வீரன்தான் அநுமான்" என்றான்.

இராவணன் அநுமாரைப் பார்த்து, "குரங்கு வேடம் தரித்து இவ்வூருக்கு வந்த நீ யார்? தேவனு, பூதமா, யமனு? உன்னை யார் இங்கு அனுப்

பினார்கள்?" என்று கேட்டான். அதற்கு அநுமார் "என்னை அனுப்பியவர் தேவர்களில் ஒருவனுமல்ல; மற்ற அசுரர்களில் ஒருவனுமல்ல; திக்கஜங்களில் ஒன்றுமல்ல; எட்டுத் திக்குப் பாலகர்களில் ஒருத்தனும் அல்ல; கைலாயமலையில் வசிக்கும் பரமசிவனுமல்ல; மும்மூர்த்திகளில் ஒருவனும் அல்ல; முனிவனுமல்ல; பின் யாரென்று கேட்பாயானால், இவ்வுலகத்தையாண்ட தசரத சக்ரவர்த்தியின் புதல்வனான இராமபிரானேயாம்" என்றார்.

*தேவரும் பிறரும் அல்லன்
திசைக்களிறு அல்லன் திக்கின்
காவலர் அல்லன் ஈசன் கயிலை
அம் கிரியும் அல்லன்
மூவரும் அல்லன் மற்றை முனிவரும்
அல்லன் எல்லைப்
பூவலயத்தை ஆண்ட புரவலன்
புதல்வன் போலாம்.

— சுந்தர : பிணிவீட்டு : 77

இப்படி இராமபிரான் இன்னவன் என்று தெரிவித்து, பின் அவருடைய வீரத்தை சொல்லுவார். "நீங்கள் மிகுதியாகக் கொண்டுள்ள பலத்தையும், முன் காலத்தில் நீங்கள் செய்த தவத்தையும், புதிது புதிதாக நீங்கள் சேர்த்துக்கொண்ட ஆயுதங்

* (அ-ரை) பூவலயம் = பூமண்டலம், புரவலன் = அரசன்.

களையும், தேவர்கள் இதுவரையில் உங்களுக்குக் கொடுத்துள்ள நல்ல வரங்களையும், மற்றச் சிறப்புக் களையும், சிலைகள்மேல் எழுதிவைத்த உங்கள் பிரதா பத்தையும், அடைந்தவைகளைச் சீர்திருத்திக் கொண்ட மற்றச் செல்வங்களையும். நீண்ட ஒரு அம் பினாலே அடியோடு அழிக்க அவர் நிச்சயத்

*ஈட்டிய வலியும் மேல் நாள்
இயற்றிய தவமும் யாணர்க்
கூட்டிய படையும் தேவர் கொடுத்த
நல் வரமும் கொட்பும்
தீட்டிய பிறவும் எய்திருத்தில
* வாழ்வும் எல்லாம்
நீட்டிய பகழி ஒன்றால் முதலொடு
நீக்க நின்றான்.

— சுந்தர : பிணிவீட்டு : 76.

இப்படி இராமபிரானுடைய வீரத்தை எடுத்துக் கூறி பிறகு அவர் மும்மூர்த்திகளின் அவதாரமே, என்பதை அறிவிக்கலானார். "முதலும், நடுவும் இறுதியும் இல்லாதவன்; இறந்தகாலம், நிகழ்காலம் எதிர்காலம் என்ற மூன்று காலங்களுமில்லாதன்; இடம், குணம், செயல் முதலிய எல்லைகளையும் கடந் தவன்; சூலத்தையும், சங்கு சக்கரங்களையும், கமண் டலத்தையும் விட்டு, கையில் வில்லை ஏந்தி, ஆதி காலம் தொடங்கித் தனக்கு இருப்பிடமான ஆலிலை

* (அ-ரை) யாணர் = புதிது புதிதாக, பகழி = அம்பு.

*யும், தாமரை மலரும், கைலாசமும் விட்டு, அயோத்தியில் இராமனாக அவதரித்தான்!"*

*மூலமும் மடுவும் ஈறும் இல்லது
ஓர் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன்
கை வில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும்
துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்
விட்டு அயோத்தி வந்தான்.

— சுந்தர : பிணிவீட்டு : 80.

*இவ்வாறு இராமபிரான் முழுமுதல் கடவுளே என்பதை அறிவித்து, பிறகு அவர் இவ்வுலகில் அவதாரம் எடுத்ததற்குக் காரணம் கூறுகின்றார்: "தம்முடைய பொன்னிறமான பாதங்களைப் போற்றுவாருடைய பாவங்களை ஒழித்துப் பரமபதத்தைக் கொடுப்பவனை இரகுநாதர், தர்மத்தை எங்கும் நிலைநிறுத்தி, வேதங்கள் கருணையுடன் சொல்லிய நீதிகளை உலகத்தார் நன்றாய் உணர்ந்து, அவைகளை மேற்கொண்டு ஒழுகும்படி தாமே நடத்திக் காட்டி, கொடியவர்களை அழித்து, நல்லவர்களுடைய துன்பங்களை நீக்குவதற்காகவே இவ்வுலகில் அவதாரம் செய்தார்.*

---

* (அ-ரை) *திகிரி = சக்கரம், கரகம் = கமண்டலம், அலர் = தாமரை, பொருப்பு = மலை.*

*அறம் தலை நிறுத்தி வேதம் அருள்
சுரந்து அறைந்த நீதித்
திறம் தெரிந்து உலகம் பூணச்செந்நெறி
செலுத்தித் தீயோர்
இறந்து உக நூறித்தக்கோர் இடர்
துடைத்து ஏக ஈண்டு
பிறந்தனன் தன் பொன் பாதம்
ஏத்துவார் பிறப்பு அறுப்பான்.

— சுந்தர : பிணிவீட்டு : 81.

*இப்படி இராமபிரான் அவதாரம் எடுத்ததற்குக் காரணம் கூறி, பிறகு தாம் வந்ததற்குக் காரணம் கூறுவார் : "நான் சீதாபிராட்டியைத் தேடுவதற்காக இராமபிரானால் ஏவப்பட்ட வாலியின் மகனை அங்கதனுடன் வந்தேன்" என்று சுருக்கமாய், நடந்ததைச் சொன்னார். அப்பொழுது இராவணன், "வாலி மகனுடன் வந்தவனே! வாலி சுகமாயிருக்கிறானா?" என்று கேட்டான். அதற்கு அநுமார், "இராவணா! பயப்படாதே, வாலியும் போனான்; அவன் வாலும் போயிற்று!" என்றார். மேலும், "ஓ, அரக்கர்க்கு அரசே! இவ்வுலகில் தர்மம் வெல்லும்; பாவம் தோற்கும் என்பதைத் தெரிந்திருந்தும், இன்னொருத் தன் மனைவியைக் காதலித்ததேயல்லாமல், அவளைப் பலவந்தமாய் கொண்டுவந்து சிறையில் வைத்ததால், உன் வலிமை, செல்வம், தவம், ஆயுள் முதலிய எல்லாம் வேருடன் கெடும். ஆதலால், கற்பினுக்கு அரசியாகிய சீதாபிராட்டியை விட்டுவிடு" என்றார்.*

அதற்கு இராவணன் சிரித்து, " அது இருக்கட்டும், தூதுவந்த நீ இராக்கதர்களை ஏன் கொன்ருய் ?" என்று கேட்டான். "உனக்கு அறிவு புகட்ட வேண்டுமென்று உன்னைப் பார்க்க எண்ணினேன். அதற்குச் சுலபமான வழி சோலையை அழித்தலும், இராக்கதரைக் கொல்வதும்தான் என்று தீர்மானித்தேன்" என்ருர். அதைக் கேட்ட இராவணன் கோபம்கொண்டு, "இக்குரங்கை உடனே கொல்லுங்கள்" என்று கட்டளையிட்டான்.

அப்பொழுது விபீஷணன் எழுந்து, "அண்ணு, தூது வந்தவனைக் கொல்லுதல் தர்மம் அல்ல" என்ருர். "சரி, இக்குரங்கின் வாலைச் சுட்டு விடுங்கள்" என்று கட்டளையிட்டான்.

உடனே ஆயிரக்கணக்கான இராக்கதர்கள் எழுந்து அநுமாரை ஊருக்கு வெளியில் கொண்டு போய் அவருடைய வாலுக்குத் துணிகளைச்சுற்றி எண்ணெயில் தோய்த்து தீ மூட்டி விட்டார்கள்! இதைக் கேட்ட சீதாதேவி அக்னிதேவனை நோக்கி, "எல்லாவுயிர்க்கும் தாய்போன்ற அருளை உடைய இராமபிரானுடைய துணைவனை இந்த அநுமானை சிறிதும் நற்குணமில்லாத நாய்போன்ற இராக்கதர் வருத்த, நீ அவனிடத்தில் அருள்செய்ய மாட்டாயா ? உலகுக்கெல்லாம் ஒப்பற்ற சாக்ஷி நீயே ! ஆதலால் உனக்கு எல்லாம்தெரியும் ; நான் உன்னைத்தொழுது ஒரு வரம் கேட்கிறேன் ; நான் கற்பினல் பரிசுத்த

மான மனத்தை உடையவள் ஆனால், ஓ அக்னியே நீ அவனை ஒரு சிறிதும் சுடாதே '' என்றாள்.

தாயே அனைய கருணையான்
துணையை ஏதும் தகவு இல்லா
நாயே அனைய வல் அரக்கர்
நலியக் கண்டால் நல்காயோ
நீயே உலகுக்கு ஒரு சான்று
நிற்கே தெரியும் கற்பினால்
தூயேன என்னில் தொழுகின்றேன்
எரியே அவனைச் சுடல் என்றாள்.

—சுந்தர : பிணிவீட்டு : 126.

உடனே அநுமாருடைய வால் குளிர்ந்தது. அநுமார் ' இது சீதாபிராட்டியின் அருள் ' என்று தெரிந்துகொண்டு, அவளை மனத்தினால் தொழுது, சிறிது தூரம் சென்றதே, திடீரென்று ஆகாயத்தில் கிளம்பி அரக்கரை மிதித்துக் கொன்று, அவ்வூரின் மேல் வாலை நீட்டிக் கொளுத்தினார். சிறிது நேரத்தில் அப்பொன்மயமான இலங்காபட்டணம் வைக்கோற் போரில் தீப்பற்றியதுபோல் எரிய ஆரம்பித்தது. இராக்கதர்கள் திகைத்து ஆகாயத்தில் கிளம்ப அங்கே புகை வந்து அவர்களை சூழ்ந்து கொண்டது.

இராவணனும் தீப்பற்றியதற்குக் காரணம் அறியாமல் புட்பகவிமானத்தில் சுற்றத்தாரோடும் ஏறி

* (அ-ரை) தகவு — குணம், நலிய — வருத்த.

ஆகாயத்தில் சென்று மந்திரிகளை வினவினன். அநுமார் கொளுத்தினர் என்று தெரியவே, அநேகரை அனுப்பி அக்குரங்கை உடனே பிடியுங்கள் என்றான். வந்தவர்களையெல்லாம் அநுமார் கொன்று சீதாபிராட்டியிருந்த சோலை எரியாதது கண்டு மகிழ்ந்து, அவளை வணங்கி விடைபெற்று விரைவில் கடலைத்தாண்ட ஆரம்பித்தார். வழியில் மைந்நாக பர்வதத்தின்மேல் தங்கி இளைப்பாறி, பிறகு அங்கதன் முதலான வானரர்கள் இருக்கும் இடத்தில் குதித்தார். 'உங்களுக்கெல்லாம் சீதாபிராட்டி வந்தனம் சொன்னாள்' என்று கூறினர். "நான் சீதாபிராட்டியைவணங்கி, அவளுக்கு இராமபிரான் கொடுத்த கணையாழியைக் கொடுத்து, அவள் கொடுத்த சூடாமணியை வாங்கிக்கொண்டு திரும்பினேன்" என்றார். அளவிலா மகிழ்ச்சியை அடைந்த வானரவீரர்கள், "அநுமாரே! நீர் இலங்கையில் இராக்கதருடன் போர் செய்தது உம்முடைய உடலில் காணும் காயங்களே சொல்லுகின்றன; நீர் அவர்களை வென்றது நீர் திரும்பிவந்ததே காட்டுகின்றது; நீர் இலங்கையைக் கொளுத்தியது அந்த திக்கில் மேலே கிளம்பிய புகையே சொல்லுகின்றன; இராக்கதர்களுடைய பலத்தைச் சீதாதேவி இன்னும் விடுதலை அடையாததே தெரிவிக்கின்றது; இவ்விஷயங்களை யெல்லாம் நீர் சொல்லாமலே நாங்கள் கண்டுகொண்டோம்; இனிமேல் நாம் செய்யவேண்டிய காரியத்தைச் சொல்லும்" என்றார்கள்

பொருதமை புண்ணே சொலல
வென்றமை போந்த தன்மை
உரைசெய ஊர் தீ இட்டது
ஓங்கு இரும் புகையே ஓதக்
கருதலர் பெருமை தேவி
மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர உணர்ந்தேம் பின்னர்
என் இனிச் செய்தும் என்றார்.

—சுந்தர : திருவடிதொழுத படலம் : 10

"உடனே கிட்கிந்தைக்குப் போய் இராமபிரானுக்கு சந்தோஷச் செய்தியைச் சொல்லவேண்டும்" என்று கூறி, எல்லோருமாய் விரைவில் கிட்கிந்தைப் பக்கம் அடைந்து, மதுவனத்தில் தேன் உண்டு களித்த பிறகு, அநுமார் இராமபிரானிடம்சென்று, அவரைத் தொழுது, "தேவர்களுக்குத் தலைவரானவரே! தெளிந்த அலைகளையுடைய கடலுக்குத் தென்புறத்திலுள்ள இலங்கா நகரில், கற்புக்கே ஓர் ஆபரணம் போன்றவளான சீதாதேவியை நான் கண்ணாரக் கண்டேன். ஆதலால், இனி அவளுடைய கற்பைப்பற்றிய சந்தேகமும், அதனால் பலநாட்களாக உண்டான துயரத்தையும் விடுவீராக" என்று சொல்லி, பின்னும் சொல்லுவார் :

கண்டனென் கற்பினுக்கு அணியைக் கண்களால்
தெள் திரை அலைகடல் இலங்கைத் தென் நகர்
அண்டர் நாயக இனித் துறத்தி ஐயமும்
பண்டு உள துயரும் என்று அநுமன் பன்னுவான்.

—சுந்தர : திருவடி தொழுத : 58

*(அ-ரை) கோருதல்=போர் செய்தல், கருதலர்=பகைவர், துறத்தி=விட்டுவிடு, பன்னுவான்=சொல்லுவான்.

"ஐயா! எனது சிறந்த தெய்வமான சீதா பிராட்டி, உம்முடைய புகழ்பெற்ற மனைவி என்னும் பெருமைக்கும், உம் தந்தையான தசரத சக்ரவர்த்தியின் மருமகள் என்கிற பெருமைக்கும், மிதிலையின் அரசனான சனகனுடைய மகள் என்ற பெயருக்கும் தக்கதான சிறப்பைத் தன்கற்பினால் தெரிவித்தாள். இன்னமும் அவளுடைய நற்குணங்களைக் கேட்பீராக."

உன் பெரும் தேவி என்னும்
உரிமைக்கும் உன்னைப் பெற்ற
மன் பெரு மருகி என்னும்
வாய்மைக்கும் மிதிலை மன்னன்
தன் பெரும் தனயை என்னும்
தகைமைக்கும் தலைமை சான்றாள்
என் பெரும் தெய்வம் ஐயா
இன்னமும் கேட்டி என்பான்.

—சுந்தர : திருவடி தொழுத : 59

"வில்லை ஏந்திய பெரிய தோள்களையுடைய வீர! கடல் சூழ்ந்த மலையின்மேல் இருக்கும் இலங்கா நகரத்தில் சிறந்த கற்பு என்னும் தவத்தைச் செய்யும் பெண்ணரசியான சீதாதேவியை நான் பார்க்கவில்லை! பின்னை யாரைப் பார்த்தேனென்றால், நல்ல குடியில் பிறத்தலால் உண்டாகும் குணமும், மிகுந்த பொறுமை என்னும் ஒரு குணமும், இற்

* (அ-ரை) மருகி = மருமகள்.

பிறப்பு எனப்பட்டதோர் குணமும் மகிழ்ச்சியுடன் கூத்தாடுவதைக் கண்டேன்."

வில் பெரும் தடந்தோள் வீர
வீங்கு நீர் இலங்கை வெற்பில்
நல் பெரும் தவத்தள் ஆய
நங்கையைக் கண்டேன் அல்லேன்
இல் பிறப்பு என்பது ஒன்றும்
இரும் பொறை என்பது ஒன்றும்
கற்பு எனும் பெயரது ஒன்றும்
களி நடம் புரியக் கண்டேன்.

—சுந்தர : திருவடி தொழுத : 62

இவ்வாறு சீதாபிராட்டியைப் புகழ்ந்து, அவள் சொன்ன அடையாள மொழிகளையும் கூறி, சூடா மணியையும் கொடுத்தார். அதைக்கண்ட இராம பிரான் போனஉயிர் திரும்பி வந்ததுபோல் மகிழ்ந்து அநுமாரை வாழ்த்தினர்.

அப்பொழுது சுக்ரீவன் வானர சேனை உடனே புறப்பட வேண்டுமென்று கட்டளையிட, அப்படியே எல்லோரும் புறப்பட்டு, அநுமான் வழிகாட்ட, அவ் வழியாய்ச்சென்று தென் திசைக் கடலோரம் சேர்ந் தனர்.

*வெற்பு = மலை, பொறை = பொறுமை.

# உயுத்த காண்டம்

இராமபிரான், சுக்ரீவன் முதலான வானரத் தலைவர்களோடு கடற்கரையைச் சேர்ந்து அக் கடலின் பரப்பைக்கண்டு வியந்தார்.

இது நிற்க, எரியுண்ட இலங்கா நகரத்தை இராவணன் வேண்டுகோளால் தெய்வத் தச்சனை விசுவகர்மா முன்னிலும் அதிக அழகாக அமைக்க, இராவணன் கோபம் நீங்கி, சபையில் உட்கார்ந்து தன்னுடைய மந்திரிகள் முதலானவரை அழைத்து, "இனி என்ன செய்வது" என்று அவர்களுடைய கருத்தைக் கேட்டான். மகோதரன் முதலியவர் உடனே போருக்கு எழவேண்டும் என்றனர்; தம்பியான கும்பகர்ணன், "சீதையை சிறை வைத்தது குற்றமேயானாலும், இப்பொழுது அவளை விட்டுவிட்டால் சிரிப்புக்கு இடமாகுமாதலால் நாம் எல்லோரும் சேர்ந்து இராமலக்ஷமணரோடு போர் செய்து வெல்லவேண்டும்" என்றான். இந்திரசித்து, தன்னை அனுப்பிவைத்தால் தான் எல்லோரையும் கொன்று வருவதாகச் சொன்னான்.

அப்பொழுது மற்றொரு தம்பியான விபீஷணன் "பிறன் மனைவியைப் பலவந்தமாய்த் தூக்கிவந்து சிறை வைத்தல் தர்மத்துக்கு விரோதமாதலால், அப்பாவத்தால் இராக்கத குலமே அழிந்துபோம். அதற்குச் சாக்ஷி இலங்கை எரியுண்டதே. இலங்கா நகரம் முழுவதுமேயல்லாமல், உனது வெற்றியினால்

*நீ அடைந்த செல்வம் எல்லாம், உலகத்துக்கெல்லாம் தாயான சீதையின் கற்பினால் வெந்து அழிந்ததே யல்லது, ஒரு குரங்கு சுட்டு அழித்தது என்று நினைப்பது அறிவின்மையே யாகும" என்றான்.*

கோநகர் முழுவதும் நினது கொற்றமும்
சானகி எனும் பெயர் உலகின் தம்மனை
ஆனவள் கற்பினால் வெந்தது அல்லது ஓர்
வானரம் சுட்டது என்று உணர்தல் மாட்சியோ!

—யுத்த காண்டம் : இராவணன் மந்திர : 75

*அன்றியும், "இராமன் சாதாரண மனிதன் அல்லன். உலகத்தில் உள்ள நல்லவர்கள் செய்த நல்வினையால் கடவுளே நம்மைக் கொல்ல மனிதனாக உருவம் எடுத்து வந்திருக்கிறார். ஆதலால், உடனே சீதையை விட்டு விடுவதுதான் நலம்'' என்று விபீஷணன் கூறினான். இது தன் நன்மைக்காகக் கூறியது என்று அறியாத இராவணன் "நீ பகைவர் பக்கம் பேசியதனால் நீயும் பகைவன்தான். ஆதலால், இங்கேயிருந்தாயானால் உன்னைக் கொன்று விடுவேன்" என்று சொல்ல, விபீஷணன் தன் நண்பர்கள் நால்வரோடு கிளம்பி, கடலைத் தாண்டி, இராமபிரான் இருந்த இடத்துக்கு வந்து, "இராமா! உன்னை நான் சரணம் அடைகின்றேன்'' என்று கூவினான். இதைக்கேட்ட இராமபிரான் வந்தவன் விபீஷணன் என்று அறிந்து, சுக்ரீவன் முதலானோர் தடுத்தும், அநுமாரால் விபீஷணனுடைய நற்குணங்களையறிந்து, "சரணமடைந்தவர்கள் யாரா*

யிருந்தாலும் சரி, அவர்களைக் காப்பாற்றுவதே எனது கொள்கை.

அலைகளை வீசுகின்ற பாற்கடலைக் கடைந்த காலத்து ஆலகால விஷம் அதினின்று கிளம்ப, அப்பொழுது அதைக் கடைந்த தேவர்களும், அசுரர்களும் தங்களைக் காப்பாற்றும்படி பரமசிவனை வேண்ட, அவர் அந்த விஷத்தை உண்டு அவர்களைக் காப்பாற்றின வரலாற்றை கேட்டதில்லையா? வலி ஒடுங்கினவரை ஒருவன் பாதுகாவானாயின், யாசிப்பவர்களுக்குத் தன்னிடத்து உள்ளதொன்றைக் கொடுக்கானாயின், தன்னைச் சரணமடைந்தவருக்கு அருள் செய்யானாயின், அவனுக்குத் தர்மம் என்ன பயன் படும்? வீரம்தான் என்ன பயன்படும்?" என்றார்.

*இடைந்தவர்க்கு அபயம் யாம் என்று
இறந்தவர்க்கு எறிநீர் வேலை
கடைந்தவர்க்கு ஆகி ஆலம்
உண்டவற் கண்டிலீரோ
உடைந்தவர்க்கு உதவானாயின்
உள்ளதொன்று ஈயான் ஆயின்
அடைந்தவர்க்கு அருளான் ஆயின்
அறம் என்னும் ஆண்மை என்னும்.

— உயுத்த : விபீஷணனடைக்கலம் : 111.

---

(அ-ரை) வேலை = கடல், ஆலம் = ஆலகாலவிடம்.

ஆதலால், விபீஷணனை அழைத்துவரும்படி சொல்ல அவனும் வந்து வணங்கினான். "மின்மினிப் பூச்சியின் ஒளியைப் போலத் தோன்றி மறையும் சன்மத்தை அடியோடு நீக்குவதற்காக, இரத்தினங்கள் இழைத்த பொன் கிரீடத்தை வேண்டாம் என்று விலக்கிப் பாதுகையை அணிந்த பரதாழ்வானுடைய தமையனும், தாமரை மலரில் இருக்கும் பிரமதேவனுடைய தகப்பனுமான இராமபிரானுடைய பாதங்களை நான் சரணமடையும்படியாக என் தமையனை இராவணன் எனக்கு எவ்வளவு உதவி செய்தான்!" என்று அளவற்ற மகிழ்ச்சியை விபீஷணன் அடைந்தான்.

*மின்மினி ஒளியின் மாயும் பிறவியை
வேரின் வாங்கப்
பொன்மணி மகுடம்நீக்கி திருவடி
புனைந்த செல்வன்
தன்முனார் கமலத்து அண்ணல்
தாதையார் சரணம் தாழ
என்முனார் எனக்குச்செய்த உதவி
என்று ஏம்பலுற்றான்.

— உயுத்தகாண்டம் : விபீஷணன் அடைக்கலம் : 138.

இவ்வாறு விபீஷணன் இராமபிரானைப் புகழ்ந்து அவரைச் சரணமடைந்தார். சரணமடையவே "சக்ராயுதத்தை ஏந்திய திருமாலின் அவதாரமான இராமபிரான் விபீஷணனை அருளுடன்

* (அ-ரை) தன்முனார் = அண்ணன், ஏம்பல் = மகிழ்ச்சி, உவகை = மகிழ்ச்சி, எயிறு = பல்.

பார்த்து, "விபீஷணா! பதினான்கு உலகங்களும் என் பெயரும் எத்தனை நாள்வரை நிலை நிற்குமோ, அது வரையில் வாள்போன்ற கூரிய பற்களையுடைய அரக்கர் வாழும் கடல் சூழ்ந்த இலங்கையை ஆளும் செல்வம் எல்லாம் உன்னதே! நான் உனக்குத் தந்தேன்" என்று மகிழ்ச்சியுடன் சொன்னார்.

*ஆழியான் அவனை நோக்கி அருள்
சுரந்து உவகை தூண்ட
ஏழினோடு ஏழாய் நின்ற உலகும்
என் பெயரும் எந்நாள்
வாழும் நாள் அன்றுகாறும் வாள்
எயிற்று அரக்கர் வைகும்
தாழ் கடல இலங்கை செல்வம்
நின்னதே தந்தேன் என்றான்.

— உயுத்த : ர் : 142.

மேலும், "என் தகப்பனாருக்கு நான்கு பிள்ளைகளாகிய நாங்கள் கங்காநதிக் கரையில் குகன்வந்து சேர்ந்ததனால் ஐந்துபேர் ஆனோம்; பிறகு சூரிய குமாரனான சுக்ரீவனோடு ஆறுபேர் ஆனோம்; இப்பொழுது எங்களிடத்தில் அன்போடுவந்து சேர்ந்த தூய மனத்தையுடைய உன்னோடு ஏழுபேர் ஆனோம். என்னுடைய தந்தையான தசரதர் என் ஒருத்தனைக்

கடுமையான காட்டுக்கு அனுப்பி, பின்னர் மூன்று பிள்ளைகளைப் பெற்றார்''

*குகனொடும் ஐவா ஆனேம் முன்பு;
பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்;
எம்முழை அன்பின் வந்த
அகன் அமர் காதல் ஐய நின்னொடும
எழுவர் ஆனேம்;
புகல் அரும் கானம் தந்து புதல்வரால்
பொலிந்தான் உந்தை.

— உயுத்த: விபீஷணன்: 146.

என்று கூறி, இராமச்சந்திரர் விபீஷணனை அன்போடு தழுவினர். இதைக் கண்டு எல்லோரும் மகிழ்ந்தனர்.

பிறகு இராமபிரான் விபீஷணனிடம் இலங்கையின் அரண், இராவணனுடைய சேனை, முதலிய எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டு; கடலைத் தாண்டுவது எப்படி? என்று வினவ, "சமுத்திர அரசனை வருணனை வேண்டினல், அவனுடைய அனுமதிபெற்று வாராவதி கட்டலாம்' என அப்படியே இராமபிரான் தர்ப்பசயனத்தில் அமர்ந்து, ஏழுநாள் தவம் செய்தும், வருணன் வராதது கண்டு, கோபங்கொண்டு, கோதண்டத்தையெடுத்து அம்புகளைத் தொடுத்து, கடலின்மேல் எய்தார். அதனல்

* (அ-ரை) குன்று சூழ்வான் = மேருமலையை சுற்றிவரும் சூரியன்.

எல்லா அண்டங்களுக்கும் அப்பாலுள்ள சமுத்திரமும் கொதித்தது என்றால், தெள்ளிய அலைகளையுடைய ஏழுசமுத்திரத்தின் செய்கையை என்னென்று சொல்லுவது ; பரமசிவனுடைய சடையில் முன்னாள் தொட்டு இருந்த கங்கா நதியும் தாங்க முடியாமல் பதைத்தாள் ; பிரமதேவனுடைய கமண்டலத்திலிருந்த நீரும் குளுகுளு என்று கொதித்தது.

*அண்ட மூலத்துக்கு அப்பால் ஆழியும்
கொதித்தது ஏழு
தெள் திரை கடலின் செய்கை
செப்பி என்! தேவன் சென்னிப்
பண்டை நாள் இருந்த நங்கை கங்கையும்
பதைத்தாள் பார்ப்பான்
குண்டிகை இருந்த நீரும் குளுகுளு
கொதித்தது அன்றே.

— உயுத்த : வருணனை வழிவேண்டு : 61.

அதுகண்ட வருணன் நடு நடுங்கி ஓடிவந்து இராமபிரான் பாதத்தில் சரணமடைந்து, அவர் இச்சைப்படி தன்மேல் பாலம் கட்டும்படி வேண்டிக் கொண்டு தன் இருப்பிடம் சென்றான்.

அதன்படியே இராமபிரான் கட்டளையிட, நளன் மேற்பார்வையில், குரங்குச்சேனை கற்களையும் மலைகளையும் கொண்டுவந்து சேதுவைக் கட்டத் தொடங்கின. அப்பொழுது “குமுதனென்பவன்

* (அ்-ரை) சென்னி = தலை, குண்டிகை = கமண்டலம்.

தூக்கி எறிந்த பெரியமலை கடலில் விழுந்து கூத்தாடி யைப்போல் திரிய, அதனால் நீர்த்துளிகள் தேவ லோகத்தில் போய் விழவே, தேவர்கள், 'மறுபடியும் கடலைக் கடைகிறார்கள்; நமக்கு அமிர்தம் அகப்படும', என்ற ஆசையால் துள்ளினார்கள்."

*குமுதன் இட்ட குலவரை கூததரில்
திமிதமிட்டுத் திரியும திரைக்கடல்
துமிதம் ஊர் புக வானவர் துள்ளினர்
அமுதம் இன்னம் எழும் ஆசையால.

— உயுத்த : சேதுபந்தன : 42.

இவ்வாறு விரைவில் கட்டி முடித்தனர். இராம பிரான் அதைக்கண்டு மகிழ்ந்து குரங்குச் சேனையு டன் கடலைக் கடந்து இலங்கையைச் சேர்ந்தார்.

அச்சமயத்தில் இராவணன் தன் மந்திரிகள் முத லானோரைக்கூட்டி ஆலோசித்து வானர சேனையைக் காணக் கோபுரத்தின்மேல் ஏறினான். அதே சமயத் தில் இராமபிரானும் சுக்ரீவன் முதலானோரும் இலங்கையைக்காண ஒருமலையின்மேல் ஏறினர்.

இராவணனைக்கண்ட சுக்ரீவனுக்கு மனம் கொதித்தது. திடீரென்று அவன்மேல் பாய்ந்தான். இருவரும் மல்யுத்தம் செய்தார்கள். இறுதியில், சுக் ரீவன் இராவணனுடைய கிரீடங்களைப் பறித்துக் கொண்டு இராமபிரானிடம் வந்து குதித்தான். சுக்ரீ வனுக்கு என்ன அபாயம் நேரிடுமோ என்று பயந்த

(அ-ரை.) வரை = மலை, திரை = அலை, துமி = துளி, அமுதம் = அமிர்தம்.

இராமபிரான் மிகவும் மகிழ்ந்து கொண்டாடி, "எலும்புவரையிலும் கிழிந்த புண்ணினின்று வழி யும் மிகுந்த இரத்தமும், அறிவில்லா இராவணனு டைய உடலைத் தொட்ட குற்றமும், ஆகிய இரண்டும் நீங்குமாறு, தம்முடைய நண்பனை சுக்ரீவனை இறு கத் தழுவி, தம்முடைய பெரிய கண்களாகிய தாம ரையிலிருந்து சொரிந்த நீரால் குளிப்பாட்டினர்."

*என்பு உறக்கிழிந்த புண்ணின்
இழி பெரும் குருதியோடும்
புன் புலத்து அரக்கன் மேனி
தீண்டிய புன்மை போக
அன்பனை அமரப்புல்லி மஞ்சனம்
ஆட்டி விட்டான்
தன் பெரும் நயனம் என்னும்
தாமரை சொரியும் நீரால்.

— உயுத்த: மகுடபங்க : 34.

பிறகு இராவணன் படைத் தலைவரோடு ஆலோ சித்து, தன் சேனையை அணிவகுத்து, இன்னார் இன் னார் இவ்விடத்திலிருந்து இலங்கையைக் காக்க வேண்டுமென்று கட்டளையிட்டான். வானரசேனை யும் இலங்கையைச் சூழ்ந்து கொண்டது.

இச்சமயத்தில் இராமபிரான் கடைசியாக ஒரு தூதனை அனுப்பலாம் என்று நினைத்து அங்கதனை அழைத்து, இராவணனிடத்தில் போய், "உடனே

* (அ-ரை) குருதி = இரத்தம், புல்லி = தழுவி.

சீதையை விடுகிறனா, அல்லது போருக்கு வருகிறனா? கேட்டுவா" என்றார்.

அப்படியே அங்கதன் ஆகாயத்தில் கிளம்பி, இராவணன் தன் படைகளை அணிவகுத்துக் கொண்டிருக்கும் வேளையில் திடீரென்று அவன் எதிரில் குதித்தான். இராவணன் திடுக்கிட்டு, 'முன்னொரு குரங்குவந்து ஊரைச் சுட்டது; பின்னொரு குரங்கு வந்து என்கிரீடங்களை எடுத்துக்கொண்டு போயிற்று; இந்தக் குரங்கு ஏன் வந்ததோ!' என்று திகைத்து "நீ யார்?" என்று அதட்டினன். அங்கதன் "நான் உலகநாதனன இராமபிரானுடைய தூதன்" என்றான். இதைக்கேட்ட இராவணன், "சடையில் கங்காநதியையும், சந்திரனையும் தரித்தவனும் நெற்றிக் கண்ணையுடையவனுமான பரமசிவனும், கையிலே சங்கமும் சக்ராயுதமும் ஏந்திய திருமாலும், இவ்வூருக்கு வரப் பயப்படுவார்கள். அப்படியிருக்க, ஒரு சாதாரண மனிதனுக்காக இங்கேவந்து, இவ்வார்த்தைகளைச் சொன்ன தூத! நீ யார்?" என்று கேட்டான்.

*கங்கையும் பிறையும் சூடும் கண்
நுதல் கரத்து நேமி
சங்கமும தரித்த மால் மற்று
இந்நகர் தன்னைச்சாரார்

அங்கு அவர் தம்மை அன்றி
மனிசனுக்காக அஞ்சாது
இங்கு வந்து இதனைச்சொன்ன தூத
நீ யாவன் என்றான்.

— உயுத்த : அங்கதன் தூது : 23.

*அதற்கு அங்கதன் பதில் உரைப்பான் : " இந்திரனுடைய புதல்வனும், முன்னொரு காலத்தில் இராவணன் என்று சொல்லப்பட்டவனை அவனுடைய அழகிய தோள்கள் தன்னுடைய வாலினிடத்தில் தொங்கும்படி சுற்றிக்கொண்டு சிவந்த மலைகளையெல்லாம் தாண்டினவனும், தேவர்கள் வேண்டிக் கொள்ள மந்தர மலையால் பாற்கடலைக் கடைந்தவனுமான வாலியென்று பெயர் பெற்றவனுடைய மகன் நான் " என்றான்.*

*இந்திரன் செம்மல் பண்டு ஓர் இராவணன்
என்பான் தன்னைச்
சுந்தர தோள்களோடும் வாலிடை
தூங்கசசுற்றி
சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தவன்
தேவர் வேண்ட
மந்தர கிரியால் வேலை கலக்கினன்
மைந்தன் என்றான்.

— உயுத்த : அங்கதன் தூது : 24.

---

* (அ·ரை.) *பிறை = சந்திரன், நுதல் = நெற்றி, நேமி = சக்கரம் மால் = மகாவிஷ்ணு.*

அப்பொழுது இராவணன் திடுக்கிட்டு, இவன் வாலியின் மகனுனல், இவனுக்கு வாலிக்கிருந்த பலத்தில் பாதியாவது இருக்கும். ஆதலால், இவனைப் பக்குவமாய் நம்முடைய பக்கம் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று கருதி, அங்கதனை மிகவும் அன்புடன் பார்த்து, "என் மகனுன அங்கதா! உன் தந்தையான வாலி என்னுடைய நண்பன் ஆயிற்றே! அதற்குத் தர்மமே சாக்ஷி! ஒரு சாதாரண மனிதனுக்காக நீ தூதனாக வருதல் உனக்கு மிகவும் இழிவு அல்லவா? இதோ கிட்கிந்தா இராச்சியத்தை நான் உனக்குத் தந்தேன். நீ தாமதிக்காமல் என்னிடத்தில் வந்தது மிகவும் நல்லதாயிற்று" என்றான்.

*உந்தை என் துணைவன் அன்றே
 ஓங்கு அறம் சான்றும் உண்டால்
நிந்தனை இதன்மேல் உண்டே நீ
 அவன் தூதன் ஆதல்
தந்தனன் நினக்கு யானே
 வானரத்தலைமை தாழா
வந்தனை நன்று செய்தாய் என்னுடை
 மைந்த என்றான்.

— உயுத்த: அங்கதன் தூது: 25.

"மேலும், நீ நான் சொல்லியபடி கேட்பாயானல், 'தகப்பனைக் கொன்றவனுக்குப் பின்னே அடிமையைப்போலத் திரிந்துகொண்டு அவனை

வணங்கி, 'அறிவில்லாதவனைப்போல் வாழ்கின்றான்' என்ற பழியை ஒழித்துவிடுவாய். சீதையை என் மனைவியாகப் பெற்றேன்; உன்னை என் மகனாகப் பெற்றேன்; எனக்கு அரியதான காரியம் என்ன இருக்கின்றது!'' என்று சீக்கிரத்தில் அழியப் போகிற இராவணன் சொன்னான்.

தாதையைக் கொன்றான் பின்னே
தலை சுமந்து இரு கை நாற்றிப்
பேதையன் என்ன வாழ்ந்தான்
என்பதோர் பிழையும் தீர்ந்தாய்
சீதையைப் பெற்றேன் உன்னைச்
சிறுவனுமாகப் பெற்றேன்
ஏது எனக்கு அரியது என்றான்
இறுதியின் எல்லை கண்டான்

—உயுத்த : அங்கதன் தூது : 26

அங்கதனுடைய மனத்தை மாற்றுவதற்காகப் பின்னும் சொல்லுவான் : ''அந்த இராமலக்குமணர்களாகிய மானிடர் இன்றைக்கோ நாளைக்கோ அழிந்துபோவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை; உன்னுடைய தகப்பன் ஆண்ட இராச்சியம் உனக்கே வந்திருக்க வேண்டியது. அதை இப்பொழுது உனக்குத் தருகின்றேன்; எண்ணிலா ஆண்டுகள் நீ ஆளக்கடவாய்! பொன்னால் செய்யப்பட்ட சிங்காதனத்தில் உன்னை உட்காரவைத்து, தேவர்

*கள் உன்னை வணங்கி வாழ்த்த நானே உனக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கிறேன்.*

அந் நாார் இன்று நாளை அழிவதற்கு ஐயமில்லை
உன் அரசு உனக்குத் தந்தேன் ஆளுதி ஊழிக்காலம்
பொன் அரி சுமந்து பீடத்து இமையவர் போற்றி செய்ய
மன்னவன்ஆக நானே சூட்டுவன் மகுடம் என்றான்
—உயுத்த : அங்கதன் தூது : 27.

*இதை எல்லாம் கேட்ட அங்கதன், உடலெல்லாம் குலுங்க நகைத்து, " ஓ இராவணா! தூது வந்தவனுக்கு இராச்சியம் அகப்பட்டால் மிகவும் நன்றாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், ஒரு சிங்கக்குட்டி, காட்டு இராச்சியத்தை ஒரு சிங்கத்தினிடத்தில் கொள்ளுமேயல்லது, ஒரு நாயினிடத்தில் கொள்ளுமா? அது இருக்கட்டும், நான் இப்பொழுது வந்த காரியம் சொல்லுகிறேன் கேள்: " உன்னிடத்தில் இன்னும் அருளைவிடாத இராமபிரான், இன்று என்னை அழைத்து 'நீ போய் தன் குலம் முழுவதும் அழியும் வழியைத் தேடிக்கொண்ட பாவியும், போர் செய்யப் பயந்து தன் கோட்டைக்குள் நுழைந்து பதுங்கி இருப்பவனுமான இராவணனிடத்தில்போய், 'சீதாபிராட்டியை விட்டு விடு; இல்லாவிடில் போரில் உன் உயிரை விடு' என்று சொல்லச் சொன்னார்'' என்றான்.*

* கூவி இன்று என்னை நீபோய்த்
தன் குலம் முழுதும் கொல்லும்
பாவியை அமருக்கு அஞ்சி
அரண் புக்குப் பதுங்கி னானைத்

தேவியை விடுக அன்றேல்
செருக்களத்து எதிர்ந்து தன்னின்
ஆவியை விடுக என்றான்
அருள் இனம் விடுகிலாதான்

—உயுத்த : அங்கதன் தூது : 31

*இவ்வாறு இராமபிரான் கூறியதைச் சொல்லி, பின்பு அங்கதன் இராவணனை ஏளனம் செய்கின்றான். "இராமபிரான் அனுப்பிய தூதனாகிய அநுமான் சீதாபிராட்டியைப் பார்த்துவிட்டு, தன்னை எதிர்த்தவரை யெல்லாம் அழித்துவிட்டு, இராவணனுடைய புதல்வனான அட்சயகுமாரனைத் தரையில் சாந்துபோல் அரைத்து, அவன் ஆளும் இலங்கையைத் தீக்கு இரையாக்கி, அவன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே கடலைத் தாண்டிப் போகும்போது அவனோடு போர் செய்ய உடனே வராதவன் இனி என்ன சண்டை செய்யப்போகிறான் என்று சொல்லச் சொன்னார்" என்றான்.*

†ஏந்திழை தன்னைக் கண்ணுற்று
எதிர்ந்தவர் தம்மை எற்றிச்
சாந்து என புதல்வன் தன்னைத்
தரை யிடைத் தேய்த்துத் தன் ஊர்
காந்து எரி மடுத்துத் தானும்
காணவே கடலைத் தாவி
போந்த பின் வந்திலாதான்
இனிப் பொரும் போரும் உண்டோ

—உயுத்த : அங்கதன் தூது : 34

---

*(அ-ரை.) *அமர்=சண்டை, செருக்களம்=போர்க்களம்.*

† (அ-ரை) *ஏந்திழை=ஆபரணம் அணிந்தவள், எற்றி=கொன்று.*

இவ்வாறு பரிகாசம் செய்ய, இராவணன் அடக்கமுடியாக் கோபங்கொண்டு, நால்வரை ஏவி அங்கதனைப் பிடிக்கும்படி சொல்ல, அங்கதன் அவர்களைக் கொன்று இராமபிரானிடத்தில் திரும்பி, அவரைப் பார்த்து, "நான் தூதுபோன விஷயத்தைப் பற்றி முழுவதும் விவரமாக சொல்லி என்ன பயன்? பிடித்த பிடி விடாதவனை இராவணனுடைய தலைகள் அறுபட்டாலல்லது அவனுக்குச் சீதாபிராட்டியின்மேல் இருக்கும் ஆசை அறுபடாது" என்றான்.

முற்ற ஓதி என் மூர்க்கன் முடித்தலை
அற்றபோ தன்றி ஆசை அருது என்றான்.

—உயுத்த : அங்கதன் தூது : 43

இப்படி அங்கதன் சொல்லவே, இராமபிரான் போருக்கு எழும்படி வானர சேனைக்குக் கட்டளையிட, உடனே குரங்குகள் மரங்கள் முதலியவை கொண்டு அகழியைத் தூர்த்து, மதில் சுவரின்மேல் ஏறின. அதைக்கண்ட அரக்கர் சண்டைக்குச் சித்தமாய் வானர சேனையுடன் கை கலந்தனர். சுக்ரீவனும் ஒரு மராமரம் கொண்டு அநேக அரக்கரைக் கொன்றான். அதுகண்ட பிரகஸ்தன் என்ற அரக்கர் சேனாபதி எதிர்க்க அவனும் கொல்லப்பட்டான். அங்கதன் சுபாரிசனைக் கொன்றான். அநுமார் துன்முகனை அழித்தார். இதையெல்லாம் கேட்ட இராவணன் தானே யுத்த சன்னத்தனாய் போர்க்களம் சென்றான்.

இதைக்கேட்ட இராமபிரானும் இலக்குமண ருடன் சேர்ந்து போர்க்களம் போகப் புறப்பட்டார். இதற்குள் சுக்ரீவன் இராவணனுடன் போர்செய்து தோற்றுப்போனதைப் பார்த்த அநுமார் இராவ ணனை எதிர்த்து அவனுடைய பாகனைக் கொன்றார். இராவணன் கோபங்கொண்டு அநுமாரைத் தோற் கடித்தான். அப்பொழுது இலக்குமணர் அவனை எதிர்த்தார். கடும் போர் நிகழ்ந்தது. இலக்குமணர் தோற்பதைக்கண்ட அநுமார் இராவணனோடு மல் யுத்தம் செய்தார். வானரசேனை நிலைகுலைந்தது. மறுபடியும் இலக்குமணர் எதிர்த்து மூர்ச்சை யடைந்தபோது இராவணன் அவரைத் தூக்கக் கண்ட அநுமார் அவனுக்கு முன் இலக்குமணரைத் தானே எடுத்துக்கொண்டு இராமபிரானிடம் சென் றார். பின், இராமபிரான் அநுமார் தோளின்மேல் ஏறி இராவணனை எதிர்த்தார். சிறிது நேரத்தில் அரக்கர் சேனை முழுவதையுமே அழித்துவிட்டார். இராவணன் தனியாய் நின்றான். இருவரும் போர் செய்தபோது இராமபிரான் அவனுடைய தேரை அழித்தார். அவன் பூமியில் குதித்து அம்புகளை எய் தான். அப்பொழுது அவ்வம்புகளை யெல்லாம் பொடி செய்து, அவனுடைய கிரீடங்களைக் கீழே தள்ளினார். பிறகு ஓர் அம்பால் அவனுடைய வில்லை ஒடித்தார். ஒடிக்கவே, இராவணன் நாணம் கொண்டு தலை சாய்ந்து நின்றான். அப்பொழுது இராமபிரான் அவனைப்பார்த்து, "இராவணா! தர்

மம் வெல்லும், பாவம் தோற்கும். இப்பொழுது நீ நிராயுதனாய் நிற்பதனால் நான் உன்னைக் கொல்ல மாட்டேன். இன்னும் கேள்: "சிறையில் வைத்திருக்கும் சீதையை விட்டு, தேவர்களை அவர்களுக்குச் சொந்தமான மேலான பதவியில் வைத்து, உன் தம்பியான விபீஷணனை இராக்கதர்களுக்கெல்லாம் முதல்வனாய் அரசனாக்கி, அவனுக்கு நீ ஏவல் செய்து கொண்டிருப்பாயானால், உன் தலைகளை என் அம்புகளால் அறுத்துத் தரையில் தள்ளமாட்டேன்."

சிறையில் வைத்தவள் தன்னை
விட்டு உலகினில் தேவர்
முறையில் வைத்து நின் தம்பியை
இராக்கதர் முதல் பேர்
இறையில் வைத்து அவற்கு ஏவல்
செய்து இருத்தியேல் இன்னும்
தறையில் வைக்கிலேன் நின்
தலை வாளியில் தடிந்து.

—உயுத்த : முதல் போர் ; 254

"இலங்கையை ஆளும் அரசனே! உனக்குத் துணையாய்வந்த சேனைகளெல்லாம் புயல் காற்றால் மோதப்பட்ட பூளைபோல் அழிந்ததை நீயே கண்டாய். ஆதலால், இன்று உன் ஊருக்குப்போய் நாளைக்கு உன் சேனையைக் கூட்டிக்கொண்டு போருக்கு வா" என்று இளங்கமுக மரத்தின் மேல் வாளை மீன்கள் தாவும் நீர்வளமுடைய கோசலநாட்டு

* (அ-ரை) சிறையில் வைத்தவள் = சீதை, தடிந்து = அறுத்து.

வள்ளலான இராமபிரான் இராவணனுக்குச் சொன்னார்."

ஆளையா உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு
நாளை வா என நல்கினன் நாகு இளம் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடு உடை வள்ளல்

—உயுத்த : முதல் போர் : 256.

இப்படி, முதல் நாள் போரில் தோற்றுப்போன இராவணன், "திக்கஜங்களோடு போர்செய்த மார்பும், பரமசிவனுடைய கைலாசத்தை எடுத்த தோளும், கைலாயத்தின் கீழ் அகப்பட்டுக்கொண்ட பொழுது நாரதமுனிவர் சொல்லியபடி பரமசிவனைப் போற்றிசெய்த நாவும், மாலைகளை அணிந்த பத்துத் தலைகளும், சிவபிரான் கொடுத்த வாளும், தன் வீரமும் முதலிய எல்லாவற்றையும் போர்க்களத்திலே போட்டுவிட்டு, ஓர் ஆயுதமுமில்லாமல் வெறுங் கைகளோடு இலங்கையில் நுழைந்தான்."

வாரணம் பொருதமார்பும் வரையினை எடுத்த தோளும்
நாரத முனிவற்கு ஏற்ப நயம்பட உரைத்த நாவும்
தார் அணி மௌலி பத்தும் சங்கரன் கொடுத்த வாளும்
வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான்.

—உயுத்த : கும்பகர்ணன் வதை : 1

* (அ-ரை) மாருதம் = காற்று, பூளை = பூளைப்பூ, நாகு = இளம், வாரணம் = யானை, வரை = மலை, தார் = மாலை, மௌலி = தலை.

"போரில் வல்லவர்களிடத்துக்கூட தோற்காத வானவர்களையெல்லாம் தோற்கடித்து, மூவுலகையும் ஆண்ட இராவணேசுவரன், தன்னுடன் செல்வார் வேறு யாரும் இல்லாமல், பழி ஒன்றே தொடர்ந்து செல்ல, ஆயுதங்களைத் தூக்கும் கைகளை இப்பொழுது ஆயுதமில்லாமையால் வெறுங் கைகளாகத் தூக்கிக்கொண்டு, தேர் இல்லாமையால் தன் கால்களாலேயே நடந்து இலங்கா நகரத்தை அடைந்தான். அப்பொழுது சூரியனும் மறைந்தான்."

* கிடந்த போர் வலியார் மாட்டே
கெடாத வானவரை எல்லாம்
கடந்து போய் உலகம் மூன்றும்
காக்கின்ற காவலாளன்
தொடர்ந்து போம் பழியினோடும்
தூக்கிய கரங்களோடும்
நடந்து போய் நகரம் புக்கான்
அருக்கனும் நாகம் சேர்ந்தான்

— உயுத்தகாண்டம் : கும்பகர்ணன் : 2

"அப்படி நடந்து வந்த இராவணன் திக்குகள் ஒன்றையும் பார்க்கவில்லை; செழிப்பான தன் நகரமான இலங்கையைப் பார்க்கவில்லை; தன் புதல்வர் ஒருவரையும் பார்க்கவில்லை; கடல் போன்ற பெரிய சேனையையும் பார்க்கவில்லை; பூக்களை அணிந்த கூந்தலையுடைய தன் மனைவிமார்கள் ஒவ்வொருத்தராய் வந்து தன்னைப் பார்க்க, அவர்கள்

* (அ-ரை.) காவலாளன் = அரசன், அருக்கன் = சூரியன், மாதிரம்.

*யாரையும் பார்க்கவில்லை; பின்னை யாரைப் பார்த்தானே என்றால், பூமியாகிய பெண் ஒருத்தியையே பார்த்துக் கொண்டு போனான்.''*

* மாதிரம் எவையும் நோக்கான்
வளநகர் நோக்கான் வந்த
காதலர் தம்மை நோக்கான்
கடல் பெரும் சேனை நோக்கான்
தாது அவிழ் கூந்தல மாதர் தனித்தனி
நோக்கத் தானோர்
பூதலம் என்னும் நங்கை தன்னையே
நோக்கிப் போந்தான்

— உயுத்த : கும்பகர்ணன் : 3

*“வயிரம் போல உறுதியுள்ள பெரிய தோள்களை யுடைய இராவணன் தான் போரில் தோற்றுப் போனதைக் கண்டு, ‘தேவர்களெல்லாம் சிரிப்பார்கள்; இவ்வுலகத்து உள்ளார் எல்லோரும் சிரிப்பார்கள்; எனக்கு இதுவரையில் தோற்றுப்போன பகைவர்கள் எல்லாம் சிரிப்பார்கள் என்று இதற்கெல்லாம் வெட்கப் படவில்லை. ஆனால், வேல் போன்ற பரந்த கண்களும் சிவந்த வாயுமுடைய பெண்மணியான மிதிலையில் அவதரித்த சீதை சிரிப்பாளே என்றுதான் வெட்கப்பட்டு வாடினான்.''*

---

* (அ-ரை.) மாத்திரம் = திக்கு, பூதலம்=பூமி.

* வான் நகும் மண்ணும் எல்லாம்
நகும் நெடு வயிரத்தோளான்
நான் நகும் பகைஞர் எல்லாம்
நகுவர் என்று அதற்கு நாணன்
வேல் நகும் நெடும் கண் செவ்வாய்
மெல்லியல் மிதிலை வந்த
சானகி நகுவள் என்றே நாணத்தால்
சாம்புகின்றான்

—உயுத்த : கும்பகர்ணன் : 11.

*இராவணன் அரண்மனையைச் சேர்ந்து தனக்கு நேர்ந்த அவமானத்தை நினைத்து நினைத்து வருந்திக் கொண்டிருக்கும் பொழுது, அவனுடைய பாட்டனை மாலியவான் அங்கே வந்து, "ஐயா, நான் சொல்லிய வண்ணம் சீதையை விட்டிருந்தால், இந்த துன்பம் நேர்ந்திருக்காது அல்லவா? இப்பொழுதாவது விட்டு விடு' என்றான். இராவணனுடைய மனத்தைப் பயம் ஒரு பக்கமும், ஆசை ஒரு பக்கமும் இழுக்க, இன்னது செய்வது என்று தெரியாமல் திகைக்கும்போது, அவனைக் கெடுக்கப் பிறந்த மகோதரன் என்னும் முதல் மந்திரி அவ்வேளையில் அங்குவந்து "இது என்ன அறியாமை! அற்ப மனிதருக்கு அஞ்சுவதா? கும்பகர்ணனை எழுப்பி அனுப்பி வைத்தால் அவன் எல்லோரையும்*

---

* (அ-ரை.) வான் = தேவலோகம், மெல்லியல் = பெண், சாம்புகின்றான் = வாடினான்.

அழித்து விடுவான்," என்று சொல்ல, அதைக் கேட்ட இராவணன் "அப்படியே செய்வோம்" என்று, ஒரு தேவ சாதியரான அடிமைகளை அனுப்பிக் கும்பகர்ணனை எழுப்பும்படி கட்டளையிட்டான். அவர்கள் போய் இவ்வாறு அவனை எழுப்பினார்கள்: "தூங்குகின்ற கும்பகர்ணனே! உங்களுடைய மாய வாழ்வு எல்லாம் இன்றே அழிந்து போவதை நீ காணப் போகிறாய்; எழுந்திரு; சீக்கிரம் எழுந்திரு! காற்றாடியைப்போல் வேகமாகத் திரிந்து போர் செய்பவரும், உனக்கு யமதூதர் போன்றவருமான வில் வீரர்களாகிய இராமஇலக்குமணர் உன்னைக் கொல்ல, நீ போர்க்களத்தில் விழுந்து என்றைக்கும் தூங்கப் போகிறாய்" என்றார்கள்.

* உறங்குகின்ற கும்பகர்ண உங்கள்
மாய வாழ்வு எலாம்
இறங்குகின்றது இன்று காண்
எழுந்திராய் எழுந்திராய்
கறங்குபோல வில் பிடித்த
காலதூதர் கையிலே
உறங்குவாய் உறங்குவாய்
இனிக் கிடந்து உறங்குவாய்

— உயுத்த : கும்பகர்ண :45.

இப்படி எழுப்பியும் அவன் எழுந்திராதது கண்டு போய் இராவணனிடத்தில் சொல்ல, அவன்

* (அ - ரை) கறங்கு = காற்றாடி, காலன் = யமன்.

இன்னும் அநேகரை அனுப்பி எப்படியாவது எழுப்பவேண்டுமென்று சொல்ல, அவர்கள் யானைகள், குதிரைகள், மாடுகள் முதலியவற்றை அவனுடைய உடலின் மேல் ஓட்டி எழுப்பி உட்காரவைத்தார்கள். அண்ணன் அழைத்தான் என்று தெரிந்து அவனிடத்தில் போய் "ஏன் எழுப்பினாய்" என்றான். "இராமஇலக்குமணர்கள் கடலில் அணைகட்டி, இலங்கையை அடைந்து, இப்பொழுது இந்த ஊரை முற்றுகை போட்டுக் கொண்டு போர் செய்கிறார்கள். ஆதலால், நீ சென்று அவர்களைக் கொன்றுவிட்டு வரவேண்டும்" என்றான். இதைக் கேட்கவே, கும்பகர்ணன் மனம் கலங்கி, "ஐயோ! இராமனுடன் போர் துவங்கி விட்டதா? அளவில்லாத கற்புடைய சானகியின் துயரம் இன்னும் நீங்கவில்லையா? மேலுலகிலும், பூவுலகத்தில் எவ்விடத்திலும் பரவிய உன்னுடைய புகழ் அழிந்து விட்டதா? இராக்கத குலம் அடியோடு அழிந்து போகும் காலம் கிட்டி விட்டதா" என்று தன் மனத்தில் கிளம்பின துயரத்தை வெளியிட்டான்.

* ஆனதோ வெஞ்சமம் அலகில் கற்புடைச்
சானகி துயர் இனம் தவிர்ந்தது இல்லையோ
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ்
போனதோ புகுந்ததோ பொன்றும் காலமே.

— உயுத்த : கும்பகர்ணன் : 79

* (அ-ரை.) சமம்=போர், அலகில்=அளவில்லா, பொன்றும்=சாகும்.

இவ்வாறு தன் துயரத்தைத் தெரிவித்து, பின்னும் சொல்லுவான் : விதியின் வலியால் நீ சீதையை விடவில்லை போலும். ஆனால், நான் வணக்கத்துடன் ஒன்று சொல்லுகிறேன். இந்த உலகத்தைப் பெயர்த்து எடுக்கலாம் என்று நினைப்பதும், அதற்கு ஒரு வேலி கட்டி வைக்கலாம் என்று நினைப்பதும் முடியலாம். ஆனால், "இராமனைப் போரில் வெல்லலாம் என்று நினைப்பதும், சீதையை மணந்து கொள்ளலாம் என்று ஆசைப்படுவதும் முடியாதவை."

* கல்லலாம் உலகினை வரம்பு கட்டவும்
சொல்லலாம் பெரு வலி இராமன் தோள்களை
வெல்லலாம் என்பதும் சீதை மேனியைப்
புல்லலாம் என்பதும் போலுமால் ஐய.

— உயுத்த : கும்பகர்ண : 81.

இதைக்கேட்ட இராவணன் கோபங்கொண்டு, "உனக்குப்போர் செய்ய முடியாவிட்டால், நீ போய்ப் படுத்துக்கொண்டு தூங்கு. நானே மறுபடியும் போருக்குப் போகிறேன்" என்று எழுந்தான். உடனே கும்பகர்ணன், " இல்லை அண்ணா, நான் இப்பொழுதே போகிறேன். நான் இறந்த பிற்

* (அ-ரை). கல்லல் = பேர்த்தல், வரம்பு = வேலி, புல்லல் = தழுவுதல்.

பாடாவது நீ சீதையை விட்டு வாழ்வாயாக" என்று சொல்லி சண்டைக்குச் சென்றான்.

போர்செய்ய வந்த கும்பகர்ணனைக் கண்ட விபீஷணன் அவனிடம் சென்று அவனையும் இராமபிரானைச் சரணமடையும்படி வேண்டினான். "அறிவில்லாதவனான எனக்கும் அருள்புரிந்த வீரனான இராமபிரான், நீ வந்து சரணமடைந்தாயானால், உனக்கும் அருள்புரிவார்; அது மட்டுமா? உனக்கு அபயமுமளிப்பார்; மேலும், அறிவின்மையாகிய மயக்கத்தினால் உண்டாகும் இந்தப்பிறவியாகிய நோய்க்கு அவரே மருந்தாய் இருந்து அந்த நோயைத்தீர்ப்பார். அதுவுமன்றி, நன்மையும் தீமையும் மாறி மாறி வரும் இப்பிறப்பை ஒழித்துப் பரமபதத்தையும் கொடுப்பார்" என்று சொன்னான்.

* இருள் உறு சிந்தையேற்கும்
 இன் அருள் சுரந்த வீரன்
அருள் உறும் சேரின் ஒன்றோ
 அவயமும் அளிக்கும் அன்றி
மருள் உறு பிறவி நோய்க்கு
 மருந்தும் ஆம் மாறிச் செல்லும்
உருள் உறு சகட வாழ்க்கை
 ஒழித்து வீடு அளிக்கும் அன்றே.

— உயுத்த : கும்பகர்ணன் : 139.

* (அ-ரை). அவயமும் = அபயமும், மருள் = மயக்கம், சகட = வண்டி (சக்கரம்).

இவ்வளவு சொல்லியும் கும்பகர்ணன் அதற்கு உடன்படவில்லை. "என் அண்ணன் என்னை இது வரையில் காப்பாற்றியதனால், அவனுக்காக உயிரை விடுவேன். நீ திரும்பி போய் இராமனிடம் சேர்" என்றான்.

பிறகு போர் துவங்கியது. அவனோடு நீலன், அங்கதன், அநுமார் முதலானவர்கள் போர்செய்து தோற்றார்கள். அப்பொழுது இலக்குமணர் அவனோடு போர்செய்ய, அவன் தோற்றுப்போய்ச் சுக்ரீவனைத்தாக்கினான். சுக்ரீவன் மூர்ச்சித்தான். கும்பகர்ணன் அவனைத்தூக்கிக் கொண்டு இலங்கையை நோக்கிச்செல்ல, அப்பொழுது இராமபிரான் அவனைத்தடுத்துப் போர்செய்து அவனுடைய கைகளையும் கால்களையும் அறுத்தார். அப்பொழுது கும்பகர்ணன் இராமபிரானைப்பார்த்து இரண்டு வரங்களை வேண்டினான். அதாவது ஒன்று, விபீஷணனைக் காப்பாற்றவேண்டும். இரண்டாவது, தன் தலையை அறுத்துச் சமுத்திரத்தில் தள்ள வேண்டும் என்பதாம். அவ்வண்ணமே, இராமபிரான் ஓர் அம்பால் அவன்தலையை அறுத்துக் கடலில் தள்ளினார்.

இது இப்படி இருக்க, இராவணன் மகோதரனை நோக்கி, "நான் சீதையை அடையும் வழி சொல்லு" என்று கேட்க, மகோதரன் ஓர் அரக்கனைச் சனக மகாராஜாவைப்போல் வேடம் போட்டு, அவனைக் கொண்டு சீதையை உன்னை மணக்குமாறு சொல்லு

வித்தால், அவள் ஒப்புக்கொள்வாள்" என்றான். "இது நல்ல யோசனை, அப்படியே செய்" என்று சொல்லி, இராவணன் சீதாபிராட்டியினிடம் சென்று தன் அளவிலாக்காதலை இவ்வாறு தெரிவித்தான். "நானே எனக்குப்பகைவன்! ஏனெனில், விஷத்தில் தோய்த்து எடுத்த அமிர்தம் பெண் உருவம் கொண்டது போன்ற உம்மை உண்ண விரும்பினேன். நாள்தோறும் தேய்ந்து வருகின்ற என் நெஞ்சு இப்பொழுது நேர்மையை அடைந்திருக்கிறது; உம்மை நினைப்பதைவிட்டு உயிரை விடலாமென்றால் அது எனக்கு அச்சத்தைத் தருகின்றது. அமிர்தத்துடன் பிறந்த இலக்குமி போன்றவளே! நான் உம்மை அடைக்கலம் அடைகின்றேன்"

* வஞ்சனேன் எனக்கு நானே
 மாதரார் வடிவு கொண்ட
நஞ்சு தோய் அமுதம் உண்பான்
 நச்சினேன் நாளும் தேய்ந்த
நெஞ்சு நேரானது உம்மை
 நினைப்பு விட்டு ஆவி நீக்க
அஞ்சினேன் அடியனேன் உம்
 அடைக்கலம் அமுதின் வந்தீர்.

— உயுத்த : மாயசனக : 10

* (அ-ரை). மாதரார் = பெண், நச்சினேன் = விரும்பினேன்.

*பின்னும் தன் காதலைக் கூறுகின்றான்: " நான் விரும்பும் பெண்கள் எல்லாரிலும் நீரே மேலானவர் என்று நான் எண்ணும்படி என் மனத்தை மாற்றி, எல்லோருடைய பெயரைக்காட்டிலும் நும்முடைய பெயரே அமுதம்போல் இனிமையென்று என்னை நினைக்கச்செய்து, என் கண்கள் பார்க்கத் தகுந்த பொருள் நீர் ஒருவரேயாக ஒரு மாயத்தை உண்டாக்கி, மன்மதன் என்மேல் ஐந்து புஷ்ப பாணங்கள் எய்யும்படி அவனைத்தூண்டி, அப் பாணங்களால் என் உடலெல்லாம் அரியப்பட்டுப் புண்கள் உண்டாகும்படியும் செய்து, எனக்கு என்றும் இல்லாத பெருந்துயரத்தை விளைவித்து விட்டீர்."*

* பெண் எலாம் நீரே ஆக்கி
" பேரெலாம் அமுதே ஆககி "
கண் எலாம் நும் கண் ஆக்கி
காமவேள் என்னும் நாமத்து
அண்ணல் எய்வானும் ஆக்கி
ஐங்கணை அரியத்தக்க
புண் எலாம் எனக்கே ஆக்கி
விபரீதம் புணர்த்தி விட்டீர்.

— உயுத்த : மாயாசனக : 12.

---

* (அரு. ர.) *காமவேள் = மன்மதன், ஐங்கணை = ஐந்து அம்புகள். " பேரெலாம் நுமதே யாக்கி " என்று பாடம். யார் பெயரைச் சொல்ல எண்ணினாலும் சீதை என்றே வருகின்றது என்பது கருத்து.*

*" பேரெலாமுமதே " என்பது எழுத்துப் பிறழ்ந்து " பேரெலா மமுதே என்றாகியுள்ளது.*

பின், காதலால் தனக்கு உண்டான துயரத்தை அறிவிக்கிறான்: "யாருக்கும் தோல்வியடையாத என்னை நீர் தோல்வியடையச் செய்தீர்; சந்திரனைக் கொண்டு என் உடலைச்சுடுவித்தீர்; தென்றல் நீர்த்திவலையோடு என்மீது வீச என் உடம்பெல்லாம் வியர்க்கும்படி செய்தீர்; வயிரம்போன்ற என் தோள்களினுடைய வலிமையைக் குறையும்படிச் செய்துவிட்டீர்; மன்மதனுக்குச் சந்தோஷத்தை உண்டாக்கினீர்; என் மனதுக்குத் துன்பத்தை விளைவித்தீர்; தேவர்களுடைய பயம் தெளியும்படி செய்தீர்; இன்னும் என்னென்ன செய்து எனக்கு என்னென்ன துயரத்தை விளைவிக்க உமக்கு எண்ணமோ, எனக்குத் தெரியவில்லை." என்றான்.

*தேற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர்
தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத்தோளை மெலிவித்தீர்
வேனில் வேளை
ஆர்ப்பித்தீர் என்னை இன்னல் அறிவித்தீர்
அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர் இன்னம் என்என்
செய்வித்துத்தீர்திர் அம்மா.

— உயுத்த: மாயா சனக: 11.

(அ-ரை.) வேனில் வேள் = மன்மதன், இன்னல் = துன்பம்.

இவ்விதமாகத் தன் காதலைக் கூறி இராவணன் தரையில் விழுந்து சீதையை வணங்கினான். கொதிக்கின்ற மனதுடன் இவ்வளவும் கேட்டுக்கொண்டிருந்த சீதாபிராட்டி, துயரத்தால் உடலெல்லாம் நடுங்க, ஒரு துரும்பைப் பார்த்து இவ்வாறு சொல்லலுற்றாள். "நீ, பழி பாவத்துக்கு அஞ்சாமல் அடாத காரியம் செய்கின்றாய். நானும் உன் கொடிய மொழிகளைக் கேட்டுக்கொண்டு இத்தனை நாள் உயிர் வாழ்ந்து இருந்திருக்கக்கூடாது. என் உயிரை விட்டுப் புகழைப் பெறாமல், உனக்கு முன்னே இத்தனை நாள் வெட்கமில்லாமல் நான், உணவால் ஆகிய இந்த உடலின் மேல் இருக்கும் ஆசையால் பிழைத்திருக்கவில்லை; பின்னை ஏன் இருந்தேன் என்றால், குற்றமற்ற நற்குணங்களையே அணிகலமாய் அணிந்த புண்ணிய மூர்த்தியான என் கணவனை இன்னும் பார்ப்பேன் என்ற ஆசையால்தான் பிழைத்திருந்தேன்". என்றாள்.

* ஊணிலா யாக்கை பேணி உயர் புகழ்
சூடாது உன் முன்
நாண் இலாது இருந்தேன் அல்லேன்
நவையறு குணங்கள் என்னும்
பூண் எலாம் பொறுத்த மேனிப்
புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னம் என்னும் காதலால்
இருந்தேன் கண்டாய்.

— உயுத்த: மாயாசனக: 22.

* (அ-ரை.) நவை அறு = குற்றமில்லாத, பூண் = ஆபரணம்,

மேலும், தன் கற்பின் உறுதியை அவனுடைய மனதில் படும்படி பின்னும் கூறுவாள்: "நீதி முறைக்குக் கட்டுப்படாதவனே! அருளே தன் உயிராகவும், தாமரையே தன் கண்ணுகவும் பெற்ற, கருத்த பெருத்த ஒரு மேகம், ஒரு வில்லைத் தாங்கி, எல்லோருடைய மனத்துக்கும் இன்பத்தையே உண்டாக்குவதுபோன்ற என் கணவனைத் தவிர வேறே உயிர் எனக்கு இல்லை என்பதை நீ அறிந்துகொள்வாய்" என்றாள்.

*எனக்கு உயிர் பிறிதும் ஒன்று உண்டென்று
இரேல் இரக்கம் அல்லால்
தனக்கு உயிர் வேறு இன்ருகித்
தாமரை கண்ணது ஆக்கிக்
கனக்கரு மேகம ஒன்று கார்முகம்
தாங்கி யார்க்கும்
மனக்கு இனிது ஆகி நிற்கும் அஃது
அன்றி வரம்பு இலாதாய்!

— உயுத்த: மாயாசனக: 24.

இதையெல்லாம் கேட்ட இராவணன் சிரித்து, தான் இராமனை விரைவில் வெல்வதேயல்லாமல், அயோத்திக்கு வீரரை அனுப்பிப் பரதன் முதலியவரைக் கொல்வதாகவும், மிதிலைக்கும் அனுப்பிச் சனக மகாராஜாவை பிடித்துவர கட்டளையிட்டதாகவும் சொன்னான். அச்சமயத்தில் மகோதரன் மாயாசனகனை அங்கே அழைத்து வந்தான்

* (அ-ரை) கார் முகம் = வில், மனக்கு = மனதுக்கு.

வந்த மாயாசனகன் சீதையைப் பார்த்து, "சீதா! நீ இராவணனை மணக்காவிட்டால் நாங்கள் எல்லோரும் அழிந்து போவோம்" என்றான். இந்தத் தர்ம சங்கடத்தில் சீதாதேவி மனந்தளராமல் "நீ என் தந்தைதானே? யாரானாலும் சரி, நீயும் உன் சுற்றத்தாரும் மற்றும் இப்பூமி முழுவதும் என் கண் எதிரிலே அழிந்தாலும் என் கற்பை விட்டு வாழ்வேனோ? வலிமை பொருந்திய தோள்களும் ஆயிர நாமமும் உடைய எம்பெருமானுக்கு ஏவல் செய்யும் மனைவியாய் இருந்தவள், உயிருக்காக ஆசைப்பட்டு என் நாணத்தைவிட்டு இராவணனைப் போன்ற நாயைக் கண்களாலும் பார்ப்பேனோ?" என்றாள்.

*நீயும் நின் கிளையும் மற்று இந் நெடுநில
வரைப்பும் நேரே
மாயினும் முறைமை குன்ற வாழ்வெனோ
வயிரத்தின் தோள்
ஆயிரம் நாமத்து ஆழி அரியினுக்கு
அடிமை செய்வேன்
நாயினை நோக்குவேனோ நாண்
துறந்து ஆவி நச்சி.

— உயுத்த: மாயசனக: 67.

இவ்விதமாய் கற்பின் வலிமையால் மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டு தன் கொள்கையைக் கூறவே, இராவணன் கோபத்துடன் எழுந்து மாயா

* (அ-ரை.) கிளை = சுற்றத்தார், நச்சி = விரும்பி.

சனகனைக் கொல்லப்போனான். திடீரென்று குரங்குச்சேனை செய்த ஆரவாரம் கேட்டது. இது என்னவென்று அவன் திகைத்து நின்றபோது தூதர் ஓடி வந்து கும்பகர்ணன் செத்தான் என்றனர். இராவணன் துன்பத்தில் ஆழ்ந்து அரண்மனை சேர்ந்தான்.

சேர்ந்த இராவணன் மந்திரிகளோடு ஆலோசிக்க, அப்பொழுது தானமாலைக்குப் பிறந்த அவனுடைய பிள்ளையான அதிகாயன் எழுந்து, தான்போய் இலக்குமணரைக் கொல்வதாக வீரவாதம் செய்ய, அப்படியே செய்யும்படி உத்தரவு அளிக்க, அவன் ஒரு பெரிய சேனையைக் கூட்டிக்கொண்டு புறப்பட்டான். இதைக் கண்ட விபீஷணர் அவனுடைய வீரத்தை இராமபிரானுக்கு எடுத்துரைக்க, அவர் இலக்குமணரை அவனோடு போர் செய்ய அனுப்பினார். அவரும் அங்கதனுடைய தோளின்மேல் ஏறிப் போர் செய்யும்போது, அநுமாரும் சுக்ரீவன் முதலானோரும் பல இராக்கதர்களைக் கொன்றார்கள். இலக்குமணர் அரக்கர் சேனையை அழித்து இறுதியில் பிரமாஸ்திரத்தால் அதிகாயன் தலையைத்

ரர்.

கேட்ட தானமாலை க

வந்து இராவணன் காலில் விழுந்து அழுதாள். "பலமுள்ள வீரர்களாகிய இராமஇலக்குமணர்களைத் தோற்கடிக்க உன்னால் முடியாதோ? உன்னுடைய வீரம் ஒடுங்கிப்போயிற்றோ? உன்னுடைய தோள்

வலி குறைந்து விட்டதா? அதிகாயன் இறந்தான் என்று கேட்டும் அதை உணராதவன்போல் இருக்கிருய்! நான் சொல்லுவதும் உனக்குக் கேட்கவில்லையா? இராவணேஸ்வரா! என் கண்மணியான அதிகாயன் எங்கிருக்கிருன்! அவனைக் காட்டு, காட்டு" என்று கதறினள்.

*மாட்டாயோ இக்காலம் வல்லோர் வலிதீர்க்க
மீட்டாயோ வீரம் மெலிந்தாயோ தோள் ஆற்றல்
கேட்டாய் உணர்ந்திலேயோ என் உரையும் கேளாயோ
காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ.

— உயுத்த : அதிகாயன் வதை : 269.

இராவணனும் இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்தான்.

அச்சமயத்தில் தம்பி இறந்ததைக் கேட்ட இந்திரசித்து இராவணனிடம் சென்று தன்னை அனுப்பும்படி வேண்ட, இராவணன் அனுமதிக்க, அளவற்ற சேனையுடன் புறப்பட்டான். அப்பொழுது விபீஷணர் 'இவனை வெல்வது மிகவும் கடினம்' என்று இராமபிரானிடம் கூறி, இவனோடு யார் போருக்குப் போனலும் அவருடன் பல வீரர்கள் துணையாய் நின்று சண்டை செய்ய வேண்டும் என்று கூற, இராமபிரான் இலக்குமணரைப் போருக்கு

* இச்செய்யுளை நீலாம்பரி இராகத்தில் பாடினல் மிகவும் உருக்கமாய் இருக்கும்.

அனுப்பி அவருடன் சுக்ரீவன் முதலாயினோரையும் செல்லும்படி கட்டளையிட்டார்.

குரங்குச் சேனையும் அரக்கர் சேனையும் கை கலந்தபோது இருதிறத்தாரும் ஆயிரக்கணக்காய் மடிந்தனர். அநுமார், அங்கதன், சுக்ரீவன் முதலாயினோர் இந்திரசித்தைத் தாக்கினர். ஆனால், அம்மகாவீரன் ஒரு சிறிதும் தளராமல் எலலோரையும் தோற்கடித்தான். அச்சமயத்தில் இலக்குமணர் அநுமார் தோளின்மேல் ஏறிப், போர்செய்து அவனுடைய சேனையை அழித்து, அவன் தேரையும் சிதைத்தார். அப்பொழுது சூரியன் மறையும் சமயம். விபீஷணர் இலக்குமணரை நோக்கி "இந்திரசித்தைச் சூரியன் மறைவதன் முன்னம் கொல்ல வேண்டும். இல்லாவிடில் இருட்டில் மாயம் செய்வான்" என்றார். ஆனால் அவனைக் கொல்வதற்கு முன்னமே இருள் சூழ்ந்து கொண்டது. அவன் திடீரென்று ஆகாயத்தில் மறைந்தான்.

'இனி, போர் முடிந்தது' என்று எண்ணி இலக்குமணர் முதலானோர் போர்க்கோலத்தை நீக்கி இளைப்பாறினர். ஆகாயத்தில் சென்ற இந்திரசித்து 'இதுதான் நல்ல சமயம்' என்று எண்ணி, நாகபாசத்தை எய்தான். எய்யவே, கணக்கில்லாப் பாம்புகள் வந்து போர்க்களத்திலிருந்த எல்லோரையும் கட்டி விட்டன. இலக்குமணர் முதலான எல்லோரும் பலம் ஒடுங்கிச் சாய்ந்தனர்.

இதையறிந்த இராமபிரான் மிகவும் மனம் கலங்கி, இலக்குமணரைச் சேர்ந்து, அவர் மூர்ச்சித்துக் கிடப்பதைக் கண்டு, அடக்கமுடியாக் கோபங் கொண்டார். இதைப் பார்த்த தேவர்கள் 'இதனால் உலகத்துக்கு என்ன தீங்கு விளையுமோ!' என்று நடுங்கி இருக்க, அவர்களில் ஒருவரான கருடபகவான் உடனே இராமபிரானிடம் வர, அப்பொழுது பாம்புகளெல்லாம் கட்டவிழ்த்து மறைந்து போயின. இலக்குமணர் எழுந்தார். எல்லா வானரங்களும் எழுந்து ஆரவாரம் செய்தன. சிறந்த ஆண்மகனை இராமபிரான் அந்தக் கருடன் செயலை எண்ணி, "இறந்தவர்களுக் கெல்லாம் அவர்களுடைய அருமையான உயிரைக் கொடுத்தவன் அதற்குக் கைம்மாறாக (பிரதி உபகாரமாக) ஒன்றையும் எதிர் பாராமல் போய்விட்டான். அருளுடையவர்களுடைய தன்மை இதுவேயாகும். பெருந்தன்மை உடையவர்கள் ஒருத்தருக்கு ஒரு நன்மை செய்தால் அதனால் தமக்கு ஒரு பயன் உண்டாகுமென்று எதிர்பார்க்க மாட்டார்கள். பூமி தங்களுக்கு ஒரு பயனையும் தராவிட்டாலும் மேகங்கள் தவராமல் மழை பெய்து பூமிக்கு நன்மை செய்கின்றன.'

* ஆரியன் அவனை நோக்கி
 ஆர் உயிர் உதவி யாதும்
காரியம் இல்லான் போனான்
 கருணையோர் கடமை ஈதால்

பேர் இயலாளர் செய்கை
ஊதியம் பிடித்தும் என்னுர்
மாரியை நோக்கிக் கைம்மாறு
இயற்றுமோ வையம் என்ருன்

— உயுத்த : நாகபாசபடலம் :271.

பின், குரங்குகள் இட்ட கூச்சலைக் கேட்ட இராவணன் இந்திரசித்திடம் சென்று, "நீ தோற்கடித்தேன் என்று சொன்ன இலக்குமணன் எழுந்துவிட்டான் போல் இருக்கிறது. ஆதலால் நீ உடனே போருக்கு எழுந்திரு" என்று சொல்ல, இந்திரசித்து "நான் இலக்குமணன் அம்புகளால் மிகவும் இளைத்தேன். நாளைக்குப் போகிறேன்" என்ருன்.

குரங்குகள் செய்த ஆரவாரத்தைக் கேட்ட சில இராக்கத வீரர்கள் இராவணன் அனுமதி பெற்று, சேனைகளைக் கூட்டிக் கொண்டு போர் செய்ய, அவர்களை யெல்லாம் இளையபெருமாளும் அநுமாரும் சுக்ரீவனும் அழித்தார்கள்.

அப்பால் கரனுடைய புதல்வனுன மகராட்சன் சேனையைத் திரட்டிக்கொண்டு இராமபிரான் எதிரில் வந்து, "நீ என் தந்தையைக் கொன்ருய் ஆதலால் நான் உன்னுடன் போர் செய்வேன்" என, "அப்

*(அ-ரை) ஊதியம்=லாபம், மாரி=மேகம், கைம்மாறு=பிரதி உபகாரம், வையம்=பூமி

படியே ஆகுக" என்று இராமபிரான் கூறிச் சண்டையைத் தொடங்கி, அவனுடைய மாயைகளை எல்லாம் தம் அம்பால் போக்கி, அவனையும் கொன்றார்.

இதைக் கேட்ட இராவணன் இந்திரசித்தை மறுபடியும் போர் செய்யும்படி கட்டளையிட அப்படியே அவனும் சேனையுடன் புறப்பட்டான். அதைக்கண்ட இராமபிரானும் இளையபெருமாளும் சித்தமானார்கள். இந்திரசித்து இருவரில் ஒருவரைச் சண்டை செய்யச் சொல்ல, அப்படியே இலக்குமணர் தனியாய் அவனுடைய சேனையை அழித்து அவனுடைய தேரையும் சிதைத்தார். அவன் ஆகாயத்தில் மறைந்தான். அப்பொழுது இலக்குமணர் பிரமாஸ்திரம் தொடுப்பதாக எண்ணினார். அதை இராமபிரான் தடுத்தார். சூரியன் மறையவே, இராமர் அஸ்திர பூசை செய்யப் போனார். இந்திரசித்து இராவணனிடம் சென்று தான் மறைந்திருந்து பிரமாஸ்திரம் எய்வதாகச் சொன்னான். இராவணன் அனுமதிகொடுத்து மகோதரனை முதலில் சண்டைக்குப் போகும்படி சொன்னான். அவன் அநேக வெள்ளம் சேனையோடுவரவே, வானரசேனை கலக்கமுற்றது. வானர வீரர்களெல்லாம் போர் செய்யும்படி ஆயிற்று. இதைப் பார்த்த இளையபெருமாள் தான் முன்வந்து போர் செய்ய, அப்போது இராக்கதர் செய்த மாயையால் எல்லோரும் மயங்கினர். அதினின்றும் தப்பிய அநுமார் இளையபெருமாளைக் கிட்டி, 'நீர்தாம் இம்மாயையை நீக்க முடியும்'

என்று சொல்லி, அப்பொழுது இலக்குமணர் பரம சிவனுடைய பாசுபதாஸ்திரத்தை எடுத்து, இராம நாமத்தைச் சொல்லி எய்தார். உடனே இருளும் மயக்கமும் நீங்கின.

இராக்கத சேனை அழிந்ததையறிந்த இந்திர சித்து உடனே ஒரு வேள்வி செய்து, பிரமாஸ்தி ரத்தை மந்திரித்து விட்டான். விடவே, அது இலக் குமணரையும் எல்லா வானர வீரர்களையும் நொடிப் பொழுதில் மாய்த்தது. இந்திரசித்து இராவணனி டம் சென்று தான் வென்றதைத் தெரிவித்தான். இராவணன் மகிழ்ந்தான்.

பூசை செய்து திரும்பிய இராமபிரான், இலக்கு மணர் முதலானோர் விழுந்து கிடப்பதைக் கண்டு அளவிலாத் துக்கத்தில் ஆழ்ந்து மூர்ச்சித்து கீழே விழுந்தார். அதைக் கண்ட தேவர்கள் திகைத்து இவ்வாறு இராமபிரானை துதித்தார்கள். "நீ எப்ப டிப்பட்டவன் என்பதை எங்களால் உண்மையாக அறிந்துகொள்ள முடியவில்லை; ப்ரகிருதியாகிய இந்த உலகத்துக்கும் உனக்கும், எங்களுக்கும் என்ன சம்பந்தமோ அதையும் அறியச் சக்தியற்ற வர்களாயிருக்கிறோம்; எங்களுக்கு இறந்த காலத்தில் என்னவாயிற்றோ அது தெரியாது; எதிர்காலத்தில் என்ன ஆகப்போகிறதோ அதுவும் தெரியாது; இப் பொழுது என்ன ஆகின்றதோ அதுவும் தெளிவா

இன்பமும் துன்பமும்

இல்லாத முழுமுதல் கடவுளே! அடியவர்கள் உன்னைத் தொழுது, நீ வகுத்த நெறியில் நடப்பதல்லாமல் வேறு என்ன செய்ய முடியும்?"

*உன்னை உள்ளபடி அறியோம் உலகம்
உள்ள திறம் உள்ளேம்
பின் அறியேம் முன் அறியேம்
இடையும் அறியோம் பிறழாமல்
நின்னை வணங்கி நீ வகுத்த நெறியில்
நிற்கும் அது அல்லால்
என்னை அடியேம் செயற்பாலம் இன்பம்
துன்பம் இல்லோனே.

— உயுத்த: பிரமாத்திர படலம்: 223.

இச்சமயத்தில் இராவணனுடைய கட்டளையால் அரக்கிமார்கள் சீதாபிராட்டியைப் புஷ்பக விமானத்தின்மேல் ஏற்றி இரணகளத்தில் இராமஇலக்குமணர்களும், வானர வீரரும் விழுந்து கிடப்பதைக் காட்ட, சீதாபிராட்டி அவர்கள் எல்லோரும் இறந்தார்கள் என்று கருதி, கதறிப் புலம்பினள். "சீதாபிராட்டி புலம்பினள்; அதைக்கண்டு மேல் உலகத்து மயில்போன்ற தேவமாதர்கள் அழுதார்கள்; நந்தியை வாகனமாகக்கொண்ட பரமசிவனுடைய இடது பாகத்திலிருக்கும் குயில்போன்ற குரலையுடைய பார்வதிதேவி அழுதாள்; தாமரையிலிருக்கும் இலக்குமி அழுதாள்; பிரமனுடைய நாவில் இருக்கும் சரஸ்வதி அழுதாள்; தாமரை மலர்போன்ற

*பெரிய கண்களையுடைய விஷ்ணுவுக்குத் தங்கையான துர்க்கை அழுதாள்; என்றும் இரக்கமில்லாத இராக்கத மாதர்களும் மனம் தளர்ந்து அழுதார்கள்."*

*மங்கை அழலும் வான் நாட்டு மயில்கள்
அழுதார் மழவிடையோன்
பங்கில் உறையும் குயில் அழுதாள் பதும
மலர்மேல் மாது அழுதாள்
கங்கை அழுதாள் நாமடந்தை அழுதாள்
கமலத்தடம் கண்ணன்
தங்கை அழுதாள் இரங்காத அரக்கிமாரும்
தளர்ந்து அழுதார்.

— **உயுத்த: சீதை களங்காண் படலம்: 5.**

*இவ்வாறு புலம்பி இனி பிழைத்து இருக்கக் கூடாது என்று துணிந்து, இராமபிரான் மேல் விழுந்து இறப்பதற்கு எழுந்திருக்க, அப்பொழுது திரிசடை தடுத்து, " அம்மா! இன்னமும் இராக்கதர் மாயையை நீ அறியவில்லையா? இராமனைக் கொல்ல யாரால் முடியும்? அதுவுமன்றி, கைம்பெண்களையும் பிணங்களையும் இந்த விமானம் தாங்காது ", என்று தேற்ற, தேறி அசோகவனம் சேர்ந்தாள்.*

*இப்பால், திரும்பிவந்த விபீஷணர் எல்லோரும் பிரமாஸ்திரத்தால் கட்டுண்டு விழுந்துகிடப்பதைக்*

---

* (அ-ரை.) *மழவிடை = நந்தி, நாமடந்தை = சரஸ்வதி.*

கண்டு, சாகாவரம்பெற்ற அநுமாரையும் சாம்பவானையும் எழுப்பி, "இப்பொழுது என்ன செய்வது" என்று கேட்க, சாம்பவான், "சஞ்சீவியைப் பொழுது விடிவதற்குமுன் கொணர்ந்தால் எல்லோரும் எழுந்திருப்பார்கள்" என்று சொல்ல, அநுமார் உடன்பட்டு, தம் பெரிய உருவம்கொண்டு, ஏழுகடலையும் தாண்டி மருந்துமலையை அடைந்து, 'இங்கே இருந்துகொண்டு நமக்கு வேண்டிய மருந்து இன்னது என்று ஆராயத்தொடங்கினுல் காலம் வீணுகக்கழிந்து போம்' என்று அறிந்த அநுமார், அந்தச்சஞ்சீவி பர்வதத்தை வேரோடும் எடுத்துத் தம் கையில் தாங்கிக்கொண்டு ஓங்கிய ஆகாயத்தில் வேகமாகப் புறப்பட்டார்."

இங்கு நின்று இன்னன மருந்து என்று எண்ணிஞல்
சிங்கு மால் காலம் என்று உணர்ந்த சிந்தையான்
அங்கு அது வேரொடும் அங்கை தாங்கிஞன்
பொங்கிய விசும்பிடைக் கடிது போகுவான்.

— உயுத்த : மருத்துமலை : 63.

விரைவில் அநுமார் திரும்பிவந்து சேர்ந்தார். அம்மலையின் காற்றுப்படவே எல்லோரும் எழுந்து உட்கார்ந்தார்கள். இலக்குமணரும் எழுந்து வந்தார். அப்பொழுது பிரமாஸ்திரம் இராமபிரானைத் தொழுது ஆகாயத்தில் மறைந்தது. இராமர் அநுமாரைத் தழுவி "இறந்தவர்களாகிய நாங்கள்

உன்னால் பிழைத்து எழுந்தோம்" என்று முகமன் கூறினர். மிகவும் மகிழ்ந்த அநுமார் மறுபடியும் மலையைத் தூக்கிக் கொண்டுபோய் அது இருந்த இடத்திலேயே வைத்துவிட்டுத் திரும்பினர்.

இளையபெருமாள் இறந்தார் என்று கேட்ட இராவணன் மிக்க மகிழ்ச்சியை அடைந்து அரக்கி மாருடன் கள்ளையுண்டு களிப்புடன் இருக்கும் பொழுது, சஞ்சீவியால் எல்லோரும் எழுந்தவுடன் வானரசேனை சந்தோஷத்தால் இட்டபெருங் கூச்சலைக் கேட்டு திடுக்கிட்டு, நடந்ததைத் தூதர் களால் அறிந்து கொண்டான்.

அப்பொழுது மாலியவான், 'இராவணனுக்கு அறிவு புகட்ட இது நல்ல சமயம்' என்று நினைத்து, அவனைப் பார்த்து, "பரமசிவனைக் கைலாயத்தோடும் எடுத்து, வெற்றியை அடைந்த தோள்களையுடைய வனே! வாலியைப் போன்ற வலிமையில் சிறந்தானை யும் ஒரே அம்பால் மேல் உலகத்துக்கு அனுப்பி, கடலுக்கும் அணையைக் கட்டி, எவராலும் வெல்லப் படாத கும்பகர்ணனையும் எளிதில் கொன்ற இராம னென்னும் மகாவீரனை, நீரில் தோன்றும் குமிழி யைப்போன்ற இராக்கதரா வெல்லப் போகிறார்கள்!" என்றான்.

*வாலியை வாளி ஒன்றால் வானிடை
வைத்து வாரி
வேலையை வென்று கும்பகருணனை
வீட்டினானை
ஆலியின் மொக்குள் அன்ன அரக்கரோ
அமரின் வெல்வார்
சூலியைப் பொருப்பினோடும் தூக்கிய
விசயத் தோளாய்.

— உயுத்த: மாயா சீதை: 7.

இதைக் கேட்ட இராவணன் கோபங்கொண்டு, மாலியவானைப் பழித்து, "என்ன நிகழ்ந்தாலும் சரி, சீதையை விடுவதில்லை" என்று தன் முடிவைக்கூறி, இந்திரசித்தை வரவழைத்தான். வந்த மகனைப் பார்த்து, "கேட்டாயோ கூக்குரலை" என்றான். "ஆம், அநுமான் கொண்டுவந்த சஞ்சீவியால் எல்லோரும் எழுந்தனராம். எனக்கு ஒரு விஷயம் நன்றாய்ப் புலப்படுகின்றது. "தேன் பொருந்திய மாலையை அணிந்த அரசனே! யான் விடுத்த பிரமாஸ்திரம் அவனைத்தொடாது போயிற்று. ஆதலால், இந்த இராமன் மனிதன் அல்லன் என்பதும், தேவர்களில் ஒருவனுமல்லன் என்பதும், முனிவர்களில் ஒருவன் அல்லன் என்பதும், முன்பு விபீஷணன் உண்மையாகச் சொன்ன "யான்," "எனது" என்ற இரு பற்றுக்களையும் முற்றத் துறந்த முனிவர்கள்

* (அ-ரை.) வாளி = அம்பு, ஆலி = மழைத் துளி, மொக்குள் = குமிழி, சூலி = பரமசிவன்.

தொழும் முழுமுதல் கடவுளே ஆவன் என்பதும் சந்தேகமில்லாமல் தெரிகின்றன" என்றான்.

*மானிடன் அல்லன் தொல்லை வானவன்
அல்லன் மற்றும்
மேல் நிவர் முனிவன் அல்லன் வீடணன்
மெய்யில் சொன்ன
யான் எனது எண்ணல் தீர்ந்தார் எண்
உறும் ஒருவன் என்றே
தேன் நகு தெரியல் மன்ன
சேகுஅறத்தெரிந்தது அன்றே.

— உயுத்த : மாயா சீதை : 13.

"ஆயினும் நான் ஒரு யுக்தி செய்கின்றேன்" என்று விடைபெற்று, ஒரு அரக்கியைச் சீதைபோல் வேடம் போட்டுத் தன் தேரின் மேல் ஏற்றி, அநுமார் இருக்கும் இடத்தில் வந்து, "அநுமானே, இதோ பார், எவளால் எங்களுக்கு எல்லாக் கேடும் விளைந்ததோ அவளை இப்பொழுதே கொல்லப் போகிறேன்" என்று சொல்ல, அநுமார் அரக்கியைச் சீதையே என்று மயங்கி, உண்மையாகவே கொல்லுவான் என்று நினைத்து, நடுநடுங்கி, "இந்திரசித்தே! நான் உன்னை வணக்கமாய் வேண்டிக் கொள்ளுகிறேன், என் தாயைக் கொல்லாதே" என்று கெஞ்சிக் கேட்டும், அவன் கேளாமல் வாளை

* (அ-ரை.) நிவர் = உயரும், தெரியல் = மாலை.

உருவி, மாயா சீதையை வெட்டித் தள்ளி, "பார், இப்பொழுது அயோத்திக்குப்போய், பரதனை வென்று அயோத்தியை அழிக்கப்போகிறேன்" என்று சொல்லி ஆகாயத்தில் மறைந்தான். அநுமார் மூர்ச்சித்துக் கீழே விழுந்தார். பிறகு தெளிந்து, இராமபிரானிடத்தில் இன்னது சொல்வது என்று தெரியாமல் மயங்கி, பின் எப்படியாவது சொல்லித்தான் ஆகவேண்டும். என்று நினைத்து, நடந்ததைச் சொன்னார். இராமபிரான் அளவிலாத் துன்பத்தில் ஆழ்ந்தார். அப்பொழுது இலக்குமணர் தேறுதல் கூறி, இனி இராக்கதர் எல்லோரையுமே அழித்துவிட வேண்டும்" என்றார்.

அச்சமயம் விபீஷணர், "நான் போய், சீதையைக் கொன்றது உண்மைதானா என்பதைப் பார்த்து வருகிறேன்" என்று சொல்லி, ஒரு சிறு வண்டு வடிவம்கொண்டு அசோகவனம் சென்று அங்குச் சீதாபிராட்டி இருப்பதைக்கண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் திரும்பி வரும்போது, ஒரு பக்கம் புகை எழும்புதலையும், அரக்கர் சேனை அப்பக்கம் போவதையும் கண்டார். இதனால் இந்திரசித்து என்ன செய்கிறான் என்பதை அறிந்துகொண்டு, இராமபிரானிடம் விரைவில் வந்து, சீதாதேவி சிறையிடத்தே இருக்கின்றார். இந்திரசித்து நிகும்பலை யாகம் செய்கிறான். அவன் அதைச் செய்து முடித்தானானால் அப்புறம் அவனை வெல்லவே முடியாது. அதனை விரைவில் அழிக்கவேண்டும்" என்றார்.

உடனே இளைய பெருமாளும், அநுமாரும், மற்ற வானர வீரரும் விபீஷணனுடன் கிளம்பி, நிகும்பலை சென்று, அரக்கர் சேனையை அழித்து யாகத்தையும் கெடுத்தார்கள்.

தன் யாகம் கெடவே, 'இனி எல்லாம் கெட்டது' என்று உணர்ந்து, வெட்கத்துடனும் கொதிக்கின்ற உள்ளத்தோடும் நின்றவனை அநுமார் பார்த்து, 'நான் சீதாபிராட்டியைக் கொல்லாதே என்று வேண்டிய பொழுது என்னை இகழ்ந்தாய். இதுதானா உன் வீரம்? பரதனை வென்றாயா? அயோத்தியை அழித்தாயா?' என்று ஏளனம் செய்தார்.

அதற்கு இந்திரசித்து, " இப்பொழுது நான் செய்யும் போரை உலகமெல்லாம் பார்க்கப்போகிறது" என்று கூறி, போருக்கு சித்தமாய் அநுமாரைத் தோற்கடித்து, இளைய பெருமாளைத் தாக்கினான். அவர், அவன் மனம் சலியும்படி அம்புகளை எய்ய, அவன் பிரமாஸ்திரத்தை விடுத்தான், அதை இலக்குமணரும் பிரமாஸ்திரத்தால் தடுத்தார். இந்திரசித்து திருமாலின் சக்ராயுதத்தை எடுத்து இலக்குமணர் மேல் எய்தான். அப்பொழுது இளைய பெருமாள் தானே முழுமுதற் கடவுள் என்பதை மனத்தில் எண்ணிக்கொண்டு அச்சக்கரத்தின் முன் நடந்தார். அப்பொழுது சக்ராயுதம் அவரை வலம் வந்து ஆகாயத்தில் மறைந்தது. இதைக்கண்ட இந்திரசித்து, 'இவன் தானே கடவுள்!' என்று சந்தேகித்து, 'யாராயிருந்தாலும் சரி; நான் செய்யும்

போர் செய்தே தீர்வேன்' என்று எண்ணிப் பரம சிவனுடைய பாசுபதாஸ்திரத்தைத் தொடுத்தான். அதையும் தம் பாசுபதாஸ்திரத்தால் இலக்குமணர் தடுத்தார். இதைக்கண்டு திகைத்த இந்திரசித்து விபீஷணரைப் பழித்தான். "குலத்தைக் கெடுத்தது கோடரிக்காம்பு" என்பது போல எங்களையெல்லாம் அழிக்கப் பிறந்தாய் போலும். 'குளிர்ந்த தாமரை மலரின் மேல் இருக்கும் பிரமதேவனுடைய பார்ப்பன குலத்துக்கெல்லாம் ஒப்பற்ற தலைவனை உன்னை வந்து தேவர்கள் வணங்குவார்கள்; நீயோ மனிதர்களுக்கு அடிமையாய் இராவணனுடைய செல்வத்தை ஆள்வாய்; இனிமேல் உனக்கு மானம் ஏது? நாங்கள் அழியவே, அதுவும் எங்களோடு அழிந்துபோம்" என்று ஏசினான்.

* பனி மலர்த் தவிசின் மேலோன்
பார்ப்பன குலத்துக்கு எல்லாம்
தனி முதல் தலைவனை
உன்னை வந்து அமரர் தாழ்வார்.
மனிதருக்கு அடிமையாய் நீ
இராவணன் செல்வம் ஆள்வாய்
இனி உனக்கு என்னோ மானம்
எங்களோடு அடங்கிற்று அன்றே.

—உயுத்த : நிகும்பலை : 168.

---

* (அ-ரை) தவிசு=ஆசனம்

அதற்கு விபீஷணாழ்வார் " மூன்று உலகங்களும் போற்றி செய்யும் முதல் கடவுளும், பெருமையுடைய எல்லாத் தேவர்களுக்கும் மேம்பட்ட தேவனுமான இராமபிரானுடைய தேவியானவளும், கற்பில் சிறந்தவளுமான சீதாதேவியைத் துன்புறுத்துதல் நமக்குக் கெடுதி செய்யும் என்று நான் உன் தகப்பனை இராவணனுக்குப் புத்திகூற, அவன் என்மேல் கோபங்கொண்டு என்னை இலங்கையினின்றும் துரத்திவிட நான் வந்தேனே அல்லது வேறல்ல; உங்களுடன் கூடியிருந்து நரகத்துக்குப் போவேனே" என்றார்.

மூவகை உலகும் ஏத்தும்
முதலவன் எவர்க்கும் மூத்த
தேவர் தம் தேவன் தேவி
கற்பினில் சிறந்து ளாளை
நோவன செய்தல் தீது என்று
உரைப்ப நுன் தாதை சீறிப்
போ என உரைக்கப் போந்தேன்
நரகதில் பொருந்து வேனே.

—உயுத்த : நிகும்பலை : 175.

இந்திரசித்து கோபங்கொண்டு விபீஷணர்மீதும் இலக்குமணர் மீதும் அம்புகளை எய்து திடீரென்று ஆகாயத்தில் மறைந்தான்.

மறைந்தவன் நேராக இராவணனுடைய அரண்மனை புகுந்து அவன்முன் நின்றான். அவனைக்

கண்ட இராவணன், 'என்ன விசேஷம்? மிகவும் பயந்தவன்போல் காண்கிறாயே' என்றான். "நான் செய்த மாயப் போரை உன் தம்பி கெடுத்தான். எல்லா ஆயுதங்களையும் எய்தேன். எல்லாவற்றையும் இலக்குமணன் அழித்தான். இறுதியில் திருமாலின் சக்ராயுதத்தைப் பிரயோகித்தேன். இவ்வுலகத்தையும் படைத்து மேல் உலகத்தையும் படைத்த திருமாலின் சக்ராயுதம் இலக்குமணனைப் பிரதக்ஷணம் செய்து போயிற்று" என்றான். இனி நம்மால் செய்யக் கூடியது என்ன இருக்கின்றது? அரக்கர் குலம் செய்த பாவத்தாலே நமக்கு ஒரு பெரிய பழி உண்டாகி விட்டது; இலக்குமணன் கோபித்தானானால் அவன் ஒருவனே மூவுலகத்தையும் அழிக்கும் வலிமையை உடையவன் என்றான்."

* நிலம் செய்து விசும்பும செய்து
  நெடியவன் படை நின்றானே
வலம் செய்து போயிற்று என்றால்
  மற்று இனி வலிய துண்டே
குலம் செய்த பாவத்தாலே
  கொடும் பகை தேடிக் கொண்டோம்
சலம் செயின் உலகம் மூன்றும்
  இலக்குவன் முடிப்பன் தானே,

—உயுத்த : நிகும்பலை : 4.

---

* (அ ரை) விசும்பு—ஆகாயம், சலம்=கோபம்.

இராவணன் பரிகாசமாகச் சிரித்து, "இந்திர சித்தே! நீ அறிவில்லாதவன்போல் பேசுகின்றாய்; எனக்குப் பலமுள்ள இருபது தோள்கள் இருக்க, போர்க்களத்தில் என்றும் அழியாத புகழோடு தேவர்கள் காணும்படி நீரில் குமிழி போன்ற இந்த உடலை விடுவதல்லாமல், சீதையை விட்டுவிடுவேனோ"

பேதைமை உரைத்தாய் மைந்தா
உலகு எலாம் பெயரப் பேராக்
காதை என் புகழிேனாடு
நிலைபெற அமரர் காண
மீது எழும் மொக்குள் அன்ன
யாக்கையை விடுவது அல்லால்
சீதையை விடுவது உண்டோ
இருபது திண் தோள் உண்டாய்.

— உயுத்த : இந்திரசித்து வதை : 9.

இன்னும் சொல்லுகின்றேன் கேள்: "ஒருக்கால் நான் போரில் தோற்றாலும், வேதம் உள்ள ளவும் இராமன் பேர் நிற்கும்; அதோடு என் பெயரும் நிற்கும். பிறந்தவர்களெல்லாம் இறந்தேயாக வேண்டும்; இன்று இருப்பவர்கள் நாளைக்கு மாள் வர்; ஆனால் புகழ் என்றைக்கும் அழியாது!

வென்றிலேன் என்ற போதும்
வேதம் உள்ளளவும் யானும்

* (அ-ரை) மொக்குள்=குமிழி, யாக்கை=உடல், பொன்றுதல்= சாகுதல்.

நின்றுளன் அன்றே மற்று
இராமன் பேர் நிற்குமாகில்

பொன்றுதல் ஒரு காலத்தும்
தவிருமோ பொதுமைத்து அன்றே

இன்று உளார் நாளை மாள்வர்
புகழுக்கும் இறுதி உண்டோ.

—உயுத்த : இந்திரசித்துவதை : 10.

*"மேலும், நான் செத்தாலும் சுலபமாகச் சாக மாட்டேன். நீயோ, போரில் இளைத்து சண்டை செய்ய விருப்பம் இல்லாதவன்போல் காண்கிறாய். ஆதலால், உன் காயங்களுக்குச் சிகிச்சை செய்துக் கொண்டு இளைப்பாறுவாய். நானே போருக்குப் போகிறேன்" என்று தன்தேரைக் கொண்டுவரச் சொல்லி எழுந்தான்.*

*இபபடி எழுந்த இராவணனைப் பார்த்து இந்திர சித்து, அவனுடைய பாதங்களை வணங்கி, "என் தந்தையே! என்மேல் கோபித்துக்கொள்ளாதே. நான் உன் நன்மைக்காகச் சொன்ன மொழிகளை மன்னித்துவிடு. நான் இறந்தபிற்பாடாவது உன்னுடைய நன்மை எதுவோ அதையறிந்து அப்படியே நடப்பாயாக" என்று சொல்லி, இலக்குமணர் கையால் சாகப் போகிறவன் ஒரு தெய்விகமான தேரின் மேல் ஏறிச் சென்றான்.*

*எழுந்தவன் தன்னை நோக்கி இணை
அடி இறைஞ்சி எந்தாய்
ஒழிந்து அருள் சீற்றம் சொன்ன
உறுதியைப்பொறுத்தி யானே
கழிந்தனன் என்ற பின்னர் நல்லவா
காண்டி என்று
மொழிந்தனன் தெய்வத்தேர் மேல்
ஏறினன் முடியலுற்றான்.

— உயுத்த : இந்திரசித்து வதை : 13

இந்திரசித்து இவ்வாறு பரமசிவன் கொடுத்த தேரின்மேல் ஏறி அப்பெருமான் ஈந்த சிலையைக் கையில் ஏந்தி இளைய பெருமாளை எதிர்த்தான். விபீஷணர் "இந்தத் தேரும் சிலையும் இருக்கும்வரை இவனைக் கொல்ல முடியாது" என்று சொல்ல, இலக்குமணர் ஒரு அம்பால் அவன் தேரை அச்சுவேறு ஆணிவேறு ஆக்க, அவன் ஆகாயத்தில் கிளம்பி அம்புகள் எய்ய, இலக்குமணர் ஒரு அம்பால் சிலையைப் பிடித்து, அவனுடைய கையை அறுத்துக் கீழே தள்ளினார். அப்பொழுதும் அவன் சலியாமல் போர்செய்ய, இலக்குமணர் "இந்திரசித்து செத்தானால் அவனோடு ஆண்மக்களுடைய வீரமும் அழிந்து போம்" என்றார்.

ஐயனும் அவனோடு எஞ்சும்
ஆண் தொழில் ஆற்றல் என்றான்.

---

* (அ-ரை.) இறைஞ்சி = வணங்கி, எஞ்சும் = அழியும்.

இவ்விதமாக பகைவனுடைய வீரத்தை மெச்சிக் கொண்ட இலக்குமணர் இனி இவனை விரைவில் கொல்லவேண்டும் என்று கருதி, " வேதங்களே அறியக்கூடியவனும், ரிஷிகளால் வணங்கப்பட்டவனும், அறக் கடவுளும் ஆன பரம்பொருள் இராமனே யானல், சந்திரப் பிறைபோன்ற கோரப் பற்களையுடைய இந்திரசித்தை நீ கொல்வாயாக" என்று கூறி, ஓர் அர்த்த சந்திர பாணத்தைத் தம் முழுப் பலத்துடன் அவன்மேல் விட்டார்.

*மறைகளே தேறத்தக்க வேதியர்
வணங்கற் பால
இறைவனே இராமன் என்னும் நல்
அற மூர்த்தி என்னின்
பிறை எயிற்று இவனைக் கோறி
என்று ஒரு பிறைவாய் வாளி
நிறை உற வாங்கி விட்டான் உலகு
எலாம் நிறுத்தி நின்றான்.

— உயுத்த : இந்திரசித்து வதை : 51.

அந்த அம்பு அவனுடைய கழுத்தை அறுத்துக் கீழே தள்ளிற்று. இதைப் பார்த்த இராக்கதசேனை பயந்து ஓடி இலங்கையில் ஒளிந்தது. " வில் வித்தையில் தேர்ந்தவர்க்கெல்லாம் மேலானவனை இந்திர

* (அ-ரை.) மறைகள் = வேதங்கள், இறையவன் = கடவுள், கோறி = கொல்வாய், வாளி = அம்பு.

சித்து இறக்கவே, தேவர்கள், "இனி இராவண னுக்கு இராச்சியம் செய்ய முடியாது" என்று அள வற்ற மகிழ்ச்சியை அடைந்து, அந்தப் பரவசத்தால் தங்களுடைய ஆடைகளை எறிந்து கூத்தாடிக் கூக் குரலிட்டபோது, சமண மதத்தார் கும்பிடும் அம் மணமான விக்கிரகங்களைப் போல தோன்றினார்கள்.

*வில்லாளர் ஆனார்க்கு எல்லாம்
மேலவன் விளிதலோடும்
செல்லாது அ இலங்கை வேந்தற்கு
அரசு எனக் களித்ததேவர்
எல்லாரும் தூசு நீக்கி ஏறிட
ஆர்த்தபோது
கொல்லாத விரதத்தார்தம் கடவுளர்
கூட்டம் ஒத்தார்.

— உயுத்த: இந்திரசித்து வதை: 56.

அச்சமயத்தில் அங்கதன் இந்திரசித்தின் தலையை எடுத்துக்கொண்டு இராமபிரானிடம் வந்தான். இதைக் கண்ட இராமர் கரையில்லாக் களிப்புக்கொண்டு அங்கதனைப் புகழ்ந்தார். அப் பொழுது இலக்குமணர் வந்து இராமர் பாதத்தை வணங்கினார். வணங்கவே அவரை அன்புடன் தழுவி "இலக்குமணா! நீ இந்திரசித்தைக் கொன்றதனால், கட்டுத் தறியில் கட்டப்படுகின்ற மதத்தைக்கொண்ட யானைகள் முதலிய சேனைகளால் காக்கப்பட்ட சனக

* (அ-ரை.) விளிதல் = இறத்தல், தூசு = ஆடை,

மகாராசனுக்கு மகளாய் வளர்ந்த பூங்கொம்பு போன்ற சானகியும் என்னிடத்தில் வந்ததுபோல் மனமகிழ்ச்சியை அடைந்தேன். வாசனை பொருந்திய தாமரை மலரை இருப்பிடமாக உடைய பிரமதேவன் படைத்த இந்தப் பூமியில் 'தம்பி உடையான் பகைவர்க்கு அஞ்சான்' என்ற பழமொழியை நிலை நிறுத்தினய்' என்றார்.

*கம்ப மதத்துக்களி யானை காவல்
சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனி வந்து குறுகினள்
என்று அகம் குளிர்ந்தேன்
வம்பு செறிந்த மலர்க்கோயில் மறையோன்
படைத்த மாநிலத்தில்
தம்பி உடையான் பகை அஞ்சான்
என்னும் மாற்றம் தந்தனையால்.

— உயுத்த : இந்திரசித்து வதை : 69.

மகன் இறந்ததைக்கேட்ட இராவணன் மிக்க துன்பத்தில் ஆழ்ந்து பத்து வாய்களாலும் அரற்றினன். போர்க்களத்தில் போய் இந்திரசித்தின் தலையில்லா உடலை எடுத்து வந்தான். "நினைத்ததெல்லாம் முடித்த நான் ஒரு பெண்மேல் உண்டான ஆசையாலே நீ எனக்குச் செய்யவேண்டிய கடன்களை நான் உனக்குச்செய்ய நேர்ந்தது' என்று

* (அ-ரை) வம்பு = வாசனை, மறையோன்=பிரமன், மாற்றம் = சொல்.

அழுதான். மண்டோதரி வந்து பார்த்து மலையின் மேல் மயில் வீழ்ந்ததுபோல் வீழ்ந்தாள். "சிறு வயதில் நீ இந்திரனை வென்றதைப் பார்த்தேன். இப்பொழுது உன் தலையில்லா உடலைப் பார்க்கிறேன்!" என்று புலம்பினள். எல்லாத் தீமைகளும் சீதையினால் உண்டாயிற்று என்று எண்ணி இராவணன் அவளை வெட்ட எழுந்திருக்க, மகோதரன் 'அது பழிக்கு இடமாகும்' என்று தடுத்தான்.

பிறகு இராவணன் தூதர்களைக் கூப்பிட்டு உலகத்தில் எங்கெங்கே பலமுள்ள இராக்கதர்கள் இருக்கிறார்களோ அவர்களையெல்லாம் அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அப்படியே அவர்களும் பல தேசங்களிலிருந்தும், பல தீவுகளிலிருந்தும் பயங்கரமான ரூபத்தையுடைய கணக்கற்ற இராக்கத வீரர்களை அழைத்து வந்தார்கள். அவர்களுக்குத் தலைவனான வன்னி என்பவன் "மனிதரையும் குரங்குகளையும் வெல்லவா எங்களை அழைத்தாய்" என்று அலட்சியமாய்ப் பேசினன். அப்பொழுது மாலியவான், "ஒரு குரங்கு வந்து அட்சய குமாரனைக் கொன்று இலங்கையை அழித்தது. இரண்டு மனிதர்கள் வந்து கும்பகர்ணனையும் இந்திரசித்தையும் கொன்றார்கள். ஆதலால், அவர்களைச் சுலபமாய் வெல்லலாம் என்று நினைப்பது தவறு. யார் வென்றாலும் சரி, எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன்" என்றான். அப்பொழுது வன்னி, "இப்பொழுது

சமாதானத்திற்கு இடமில்லை. உடனேபோய் நாங்கள் அவர்களைக்கொன்று வருவோம்" என்று புறப்பட்டான். இவர்களைக் கண்டு தேவர்களும் நடுங்கினார்கள். வானரசேனை பயந்து ஓடிப்போயிற்று; அங்கதன் தைரியம் கூறத் திரும்பி வந்தது.

இராமபிரான், "நீ இந்த வானர சேனையைக் காத்துக்கொண்டிரு" என்று இலக்குமணருக்குச் சொல்லி தாம் வில்லை ஏந்தி மூலபலத்தோடு போர் செய்யப் புறப்பட்டார். அப்பொழுது தேவர்களெல்லாம் 'கண்ணனே! எளியவர்களாகிய எங்களை ஓர் கவசம் போல் பாதுகாப்பவனே! கடல் வண்ணனே! தர்மம் வாழும் இருப்பிடமாயுள்ளவனே! வேதங்களை ஓதும் முனிவர்களுக்கு எல்லா வல்லமையும் அருள் செய்பவனே! இந்தப் படைக்குப் பின் வாங்காமல் போர் செய்வதற்கு உன்னையல்லாது வேறே எவர்க்கும் முடியுமோ? எங்களுடைய எண்ணத்தை நிறைவேற்றுவாய்" என்று வணங்கி வேண்டிக் கொண்டார்கள்.

*கண்ணனே எளியேம் இட்ட
கவசமே கடலே அன்ன
வண்ணனே அறத்தின் வாழ்வே
மறையவர் வலியே மாறுது
ஒண்ணுமே நீயலாது ஓர்
ஒருவர்க்கு இப்படை மேல் ஊன்ற
எண்ணமே முடித்தி என்று
ஏத்தினர் இமையோர் எல்லாம்.

—உயுத்த: மூலபலவதை: 72.

* (அ-ரை) மறையவர் = வேதத்தை ஓதுபவர், ஏத்தினர்—போற்றி செய்தனர்.

இராமபிரான் ஒருவராய் நின்று அவ்வரக்கர் கூட்டத்தோடு போர் செய்ய அம்புகளை தொடுத்த போது ஆயிரக்கணக்கானவர்களுடைய காலும், கைகளும், தோளும், தலைகளும் அற்று விழுந்தன. இதைக்கண்ட அரக்கர் திகைத்து நின்றார்கள். பின் னின்றவர்கள் முன் வந்து இராமனைச் சூழ்ந்து கொண்டார்கள். அப்பொழுது இராமர் வேகமாகச் சாரி திரிந்து போர் செய்ததால் அரக்கர் கண்க ளுக்கு அவர் எங்கும் இருப்பது போல் தோன்றிற்று. அநேக அரக்கர் ஓட ஆரம்பித்தனர். வன்னி அவரை நிறுத்தி இன்னும் பலரைக் கூட்டிக்கொண்டு முன்னிலும் மும்முரமாகத் தாக்கினன். அவர்களை யெல்லாம் இராமர் தம் அம்புகளால் வளைத்து அவர்களுடைய தலைகள் பூமியில் புரளும்படி செய்தார். அதற்கும் அஞ்சாமல் வன்னி பின்னும் ஆயிரக்கணக்கானவரைக் கூட்டிக்கொண்டான். அப்பொழுது இராமர் முன்னிலும் பன்மடங்கு வேக மாய்ச் சாரி திரியவே அரக்கர் மயங்கி ஒருத்தரை ஒருத்தர் கொன்று மாய்ந்தார்கள்.

அவர் செய்த போரால் கணக்கற்ற அரக்கர், குதிரைகள், யானைகள், தேர்கள் அழிய எண்ணிலாக் கவந்தங்கள் எழுந்து கூத்தாடின. அநேக பதாதி கள் செத்தால் ஒரு குதிரை சாகும். பல குதிரைகள் செத்தால் ஒரு யானை சாகும். பல யானைகள் செத் தால் ஒரு தேர் அழியும். பல தேர்கள் அழிந்தால் ஒரு கவந்தம் எழுந்து கூத்தாடும். பல கவந்தங்கள்

கூத்தாடினல் இராமருடைய கோதண்டத்திலிருக்கும் மணி ஒருதரம் அடிக்கும். இந்த மூலபலச் சண்டையிலோ, அந்த மணி ஓயாது ஒரு யாமம்வரை அடித்தது அடித்தபடியே இருந்தது. கணக்கற்ற மதங்கொண்ட யானைகளும் குதிரைகளும் இறந்தன; பல மலைபோன்ற பெரிய இரதங்கள் அழிந்தன; அப்பொழுது உண்டான இரைச்சலால் திசைகள் பிளந்தன போல் தோன்றின, பரந்த கடல் சேருகி மேலே எழுந்தது; இவ்வாறு எண்ணில்லாத அரக்கர் கொல்லப்படுவது கண்டு அரக்கிமார்களுடைய கண்களினின்று கண்ணீர் ஆறுபோல் பெருகிற்று; அச்சமயத்தில் இராமபிரானுடைய கோதண்டத்தில் கட்டியிருந்த மணி ஓயாமல் ஒரு முகூர்த்த நேரம் கண கண என்று அடித்தபடியே இருந்தது.

படு மத கரி பரி சிந்தின
பனிவரை இரதம் அவிந்தன
விடு திசை செவிடு பிளந்தன
விரி கடல் அளறது எழுந்தன
அடுபுலி அவுணர்தம் மங்கையர்
அலர்விழி அருவிகள் சிந்தின
கடுமணி நெடிய எனும் சிலை
கண கண கண கனெனுந்தொறும்.

—உயுத்த : மூலபல வதை : 216.

(பாட்டைப் படிக்கும்போது மணி ஓசையைக் கேட்கலாம்.)

சிறிது நேரத்திற்கெல்லாம் இராமபிரான் வந்த அரக்கர் எல்லோரையும் நீறாக்கினார். இதுகண்ட எவ்வுலகத்துள்ளோரும் இராமரை வாழ்த்தினார்கள். தேவர்கள் பூமாரி பெய்தனர்.

மூலபலத்தைப் போருக்கு அனுப்பிய இராவணன் வானர சேனைகளும் லக்ஷ்மணர் முதலியோரும் இருந்த இடத்துக்குப்போய்ப் போர் செய்கையில், விபீஷணனைக் கொல்வேன் என்று தெய்வத் தச்சனான மயன் தனக்குக்கொடுத்த வேலாயுதத்தை அவன் மேல் எறிந்தான். அதைக்கண்ட விபீஷணன் 'இந்த வேல் என்னை எப்படியும் கொல்லும்' என்றான். அதையுணர்ந்த அங்கதன், அநுமான் முதலானோர் அவன் முன் நின்று அவனைக் காப்பாற்ற முயன்றார்கள். இலக்குமணர் விபீஷணனைத் தாமே காப்பாற்ற எண்ணி எல்லோருக்கும் முன் போய் நின்றார். அந்த வேல் அவர் மார்பில் நுழையவே அவர் இறந்தவர்போல் கீழே விழுந்தார். அப்பொழுது சாம்பவான் அநுமாரை நோக்கி விரைவில் சஞ்சீவி இலையைக் கொண்டுவரச் சொல்ல அவரும் அப்படியேபோய்க் கொண்டுவந்தார். அதனால் இலக்குமணர் பிழைத்து எழுந்தார்.

இது நிற்க, இலக்குமணரைக் கொன்றதாக எண்ணிய இராவணன் தன் அரண்மனைக்குச் சென்று அரக்க வீரரோடு தன் ஜயத்தை கொண்டாடிக் கொண்டிருக்க, தூதர்கள் வந்து மூலபலம்

முழுவதையும் இராமபிரான் அழித்ததைச் சொன்னார்கள். அதைக்கேட்ட இராவணன் சினந்து, "இனி சீதையாவது அழவேண்டும். அல்லது மண்டோதரியாவது அழவேண்டும்" என்று சபதம்கூறி, போர்க் கோலங்கொண்டு, சிவபிரானைத் தொழுது தேர் ஏறினான்.

அப்பொழுது தேவேந்திரன் இனி இராமபிரானுக்கு வெற்றியாகும் என்று எண்ணி, தன் சாரதியான மாதலியை அழைத்து. தன்னுடைய தேரை இராமபிரானிடத்திற்குக் கொண்டுபோகும்படி கட்டளையிட்டான். அப்படியே அவன் கொண்டுவர, இராமபிரானும் அதன் மேல் ஏறிப் போருக்குச் சித்தமானார்.

இராமரைக்கண்ட இராவணன் அவரிடத்துத் தன் தேரை செலுத்தும்படி கூற, அப்பொழுது மகோதரன், 'நான் என்னசெய்வது' என்று கேட்க, இராவணன் 'நீ போய் இலக்குமணனை வென்று வா, நான் இராமனைக் கொல்வேன்' என, 'அப்படியே செய்வேன்' என்று புறப்பட்ட மகோதரன், இராமபிரானைக் காணவே அவர் மேல் தேரை செலுத்தும்படி சாரதிக்குச் சொல்ல, அவன், 'ஆயிரம் இராவணர் வந்தாலும் வெல்ல முடியாத இராமனோடு நீ போர் செய்யாதே' என்று சொல்ல, மகோதரன் கோபங்கொண்டு, "நான் சொல்வதைப் போல் செய்" என, சாரதி தேரை இராமபிரான் எதிரில் கொண்டு வந்தான். அவர் சில அம்புகளால் அவ

னுடைய சேனையை அழித்து பிறகு, " அவனுடைய வில்லை ஒரு அம்பாலும், கவசத்தை ஓர் அம்பாலும், பலமுள்ள கைகளை ஒவ்வோர் அம்பாலும், கல் போன்ற உறுதியான தோளை ஓர் அம்பாலும், கழுத்தை ஒரு அம்பாலும் விரைவில் அறுத்துத் தள்ளினர். அப்போது மகோதரன் தான் வீர வாதம் செய்து சொல்லிக்கொண்டு வந்தது ஒன்ருக வும், முடிந்தது வேருென்ருகவும், துண்டு துண்டாக அறுபட்டுச் செத்தான்.

வில் ஒன்ருல் கவசம் ஒன்ருல்
விறல உடைக் கரம் ஓர் ஒன்ருல்
கல் ஒன்று தோளும் ஒன்ருல்
கழுத்து ஒன்ருல் கடிதின் வாங்கி
செல் ஒன்று கணையால் ஐயன்
சிந்தினன் செப்பி வந்த
சொல் ஒன்ருய், செய்கை ஒன்ருய்,
துணிந்தனன் அரக்கன் துஞ்சி.

**உயுத்த : இராவணன் வதை : 15.**

அப்பொழுது இராவணன் இராமபிரானுக்கு நேரில் வந்து போர் செய்யலானன். வானர சேனை நிலைகுலைந்து ஓடிற்று. அரக்கர் கணக்கற்றவர் மடிந்தனர். இராவணன் தேரை ஆகாயத்தில் செலுத்தி வானரர்களை அழித்தான். மாதலியும் தன் தேரை ஆகாயத்தில் கிளப்பினன். இராவணன் இராமரின் தேர்க் கொடியை அறுத்துத் தள்ளி,

* (அ-ரை) விறல் = பலம், கணை = அம்பு, துஞ்சி = இறந்து.

மாதலி மார்பில் தைக்கும்படி அம்புகளை எய்தான். சிறிது நேரம் இராமர், இராவணனுடைய அம்பு களால் மறைபட்டார். தேவர்கள் நடுங்கினார்கள். உடனே இராமபிரான் அவைகளை ஒழித்து, இராவணனுடைய கவசத்தைத் துளைத்து அவ னுடைய வீணைக் கொடியை வீழ்த்தினர். இராவணன் கொதித்து மாயாஸ்திரத்தை விட்டான். விடவே இறந்த இராக்கதரெல்லாம் எழுந்து ஆரவாரித்தது போல் தோன்றிற்று. பூதங்களும் பேய்களும் புறப் பட்டன. அதுகண்ட பெருமாள் "இது என்ன விப ரீதம்!" என்று கேட்க, மாதலி, "எல்லா மாயைக் கும் முதல்வன் நீ. அப்படியிருக்க, அந்த அறிவில் லாத இராவணன் உன்னிடத்தில் மாயை செய்ய முயல்கின்றான்" என்றான். இராமபிரான் ஞானஸ் திரத்தால் அம்மாயையைப் போக்கினர்.

அதைக்கண்ட இராவணன் பலத்தில் மிக்க தாகிய சூலாயுதத்தை இராமர் மேல் எறிந்தான். அதை அழிக்க இராமபிரான் அநேக அம்புகளை எய்தும் பயன்படாமல் போயிற்று. அது தனக்கு நேரே வருவது கண்டு இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்தார். தேவர்கள் என்ன ஆகுமோ என்று பயந்தார்கள். அது அருகில் நெருங்கித் தாக்க வரும்போது இராமர் ஊங்காரம் செய்தார். அது பொடியாயிற்று.

அதுகண்ட இராவணன், நான் பெற்ற சிறந்த வரங்களையெல்லாம் அழிக்கின்ற இந்த இராமன்,

சிவனுயிருக்கலாமோ என்றால், அவன் அல்லன்; நான்கு முகனுன பிரமனும் அல்லன்; திருமாலும் அல்லன்; அளவிலாத தவம் செய்த முனிவனே என்றால் இச்சிறுவயதில் அவ்வளவு தவம் செய்ய முடியாது; ஆதலால், இவன் ஒருகால் வேதத்தில் சொல்லப்பட்ட முழுமுதல் கடவுள் தானே" என்று சந்தேகித்தான்.

சிவனே அல்லன் நான்முகன் அல்லன் திருமாலாம்
அவனே அல்லன் மெய்வரம் எல்லாம் அடுகின்றான்
தவனே என்னில் செய்து முடிக்கும் தரன் அல்லன்
இவனே தான் அவ்வேதம் முதல் காரணன் என்றான்.

— உயுத்த : இராவணன் வதை : 135.

இவ்விதமாக இராவணன் உண்மையை அறிந்தும், தனக்கு இயற்கையான அறியாமையால் தான் பிடித்த பிடிவிடாமல், "யாரானலும் சரி; போர் செய்தே தீர்வேன்" என்று துணிந்து கிருதி படையை விட்டான். அதை இராமர் கருடாஸ்திரத்தால் கண்டித்தார். பிறகு, ஓர் அம்பால் அவனுடைய தலையை அறுத்தார். உடனே அவ்விடத்தில் இன்னொரு தலை முளைத்தது. அவனுடைய கைகளை அறுத்தார். கைகளும் அவ்வாறே முளைத்தன. இப்படி அறுக்குந்தோறும் தலைகளும் கைகளும்

* (அ-ரை) அடுகின்றான் = அழிக்கின்றான்.

முழைக்கவே, "இவனை வெல்வது எப்படி" என்று இராமபிரான் ஆலோசித்தார். பிறகு இவனை எப்படியாவது கொல்வது என்று தீர்மானித்து, எண்ணற்ற அம்புகளை எய்தார். இராவணன் மூர்ச்சித்துத் தேரில் விழுந்தான். அப்பொழுது மாதலி "இதுதான் நல்ல சமயம், உடனே கொல்லுங்கள்" என்றான். இராமர் "அது தர்மம் அல்ல. படைக்கலத்தைக் கைவிட்டு அறிவு சோர்ந்து இருக்கும் ஒரு பகைவனைக் கொல்வது தகாது" என்றார். சிறிது நேரத்தில் இராவணன் உணர்வு தெளிந்து எழுந்து முன்னிலும் பன்மடங்கு வேகமாகப் போர் செய்தான். இராமபிரான் ஓர் அம்பால் அவனுடைய வில்லை ஒடித்தார். அவன் மற்ற ஆயுதங்களுடன் தாக்கினான். இராமபிரான் பிரமாஸ்திரத்தை எடுத்து, இராவணனுடைய மார்பை இலக்காக வைத்து, தோள்வரை வாங்கி, நான்முகனுக்குரிய பீஜாக்ஷரத்தை அபிமந்திரித்து வேகமாக விட்டார். "இராமபிரான் எய்த அந்தப் பரிசுத்தமான அம்பு இராவணனுடைய முக்கோடி ஆயுளையும், மிக வருத்தப்பட்டு செய்த தவத்தையும், பிரம்ம தேவன் முன் காலத்தில் முப்பத்துமுக்கோடி தேவர்களாலும் நீ வெல்லப் படாய்" என்று கொடுத்த வரத்தையும், மற்றும் திக்குகளையும் உலகங்களையும் போரில் வென்ற தோள் வலியையும் அழித்து, மார்பில் புகுந்து, உடலெல்லாம் நுழைந்து, உயிரைக் கவ்விக்கொண்டு வெளியில் போயிற்று.

முக்கோடி வாழ் நாளும் முயன்றுடைய
பெரும் தவமும் முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப் படாய்
எனக்கொடுத்த வரமும் ஏனைத்
திக்கோடும் உலகு அனைத்தும் செருக்கடந்த
புய வலியும் தின்று மார்பில்
புக்கு ஓடி உயிர் பருகிப் புறம் போயிற்று
இரர்கவன் தன் புனித வாளி.

—உயுத்த : இராவணன் வதை : 198.

இராவணன் உயிரை இழந்ததனால் தலைகீழாக பூமியில் விழுந்தான். அப்பொழுது தேவர்களும், முனிவர்களும், மற்றும் இவ்வுலகில் உள்ள நல்லோர் யாவரும் 'இனி, பாவம் ஒழிந்தது' என்று அளவற்ற மகிழ்ச்சியை அடைந்து இராமபிரானைத் தொழுது ஏத்தினர்கள்.

இப்பால், விபீஷணர் அண்ணன் செய்த கொடுமையை மறந்து, அவன் செத்துக்கிடந்ததைக் கண்டு புலம்பினர். விசயலட்சுமியையும், சரசுவதியையும், புகழாகியமகளையும் தழுவிய உன் கைகள் பொருமை அடையும்படி சிறப்புப் பொருந்திய மகாலட்சுமியைப் போன்றவளும், தேவர்களும் அறியமுடியாத சிறந்த கற்புடையவளுமான புகழ்பெற்ற சீதாதேவியைத் தழுவ முயன்று, உயிரை இழந்து, பழியை

* (அ-ரை) முதல்வன்=பிரமன், செரு=போர், புனித=பரிசுத்தமான, தூய.

அடைந்த பைத்தியக்காரா! இப்பொழுது யானைகளுடைய தந்தங்களை ஒடித்த பெரிய மார்பால் பூமிதேவியைத் தழுவினாயோ" என்றார்.

* போர் மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
    தழுவிய கை பொறுமை கூர,
சீர் மகளைத் திருமகளைத் தேவர்க்கும்
    தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர் மகளைத் தழுவுவான் உயிர் கொடுத்துப்
    பழி கொண்ட பித்தா, பின்னைப்
பார் மகளைத் தழுவினையோ திசை யானை
    பணை இறுத்த பணைத்த மார்பால்.

— உயுத்த: இராவணன் வதை : 226.

அரண்மனையிலிருந்த எழு பதிவிரதைகளில் ஒருவளான மண்டோதரி தன் கணவன் இறந்தான் என்று கேட்டதே அலறிக் கொண்டு ஓடிவந்து, அவன் உடலின் மேல் விழுந்து, இவ்வாறு புலம்பினாள்: "இராமபிரானுடைய அம்பு வெண்ணிறமுள்ள எருக்கமலரை அணிந்த சடையை உடைய சிவபிரான் வசிக்கும் கைலாய மலையை எடுத்த இராவணனுடைய திருமேனியில் ஓர் எள்ளளவு இடம் கூட விடாமல் துளைத்து விட்டதே! இதற்குக் காரணம் என்னே! இந்த இராவணன் தவத்தில் சிறந்தவனாதலால் இவனுடைய உடலில் ஒரு சிறிது பாகத்தையும்

*(அ. ரை) திசையானை—திக்கஜங்கள், பணை—கொம்பு, பணைத்த—பருத்த.

துளைக்காது விட்டால், அவனுடைய உயிர் அதை இருப்பிடமாகக் கொண்டு, அந்தக் காரணத்தால் அவன் மறுபடியும் உயிர் பெற்று எழுந்திருப்பானே என்று எண்ணி இப்படித் துளைத்தாரோ? அல்லது, தன் தம்பிகளில் ஒருத்தன் தன்னைவிட்டுப் பிரிந்தும், இன்னொருத்தன் இறந்தும், மூன்று பிள்ளைகளும் போரில் செத்தும், இராவணன் தான் இறப்பதும் நிச்சயம் என்பது தெரிந்தும், தன் பாட்டன் முதலானோர் சீதையை விட்டுவிடும்படி சொல்லியும் கேளாமல், ஒரே பிடிவாதமாய் அவளைச் சிறைவைத்ததனால், அவள்மேல் அவனுக்கு இருந்த காதல் மற்ற ஆண் மக்களுக்குள்ள பெண்ணாசை போல் மனத்தில் மாத்திரம் இல்லாமல் உடலெல்லாம் பரந்து இருக்கவேண்டுமென்று எண்ணி, அம்புகளால் உடலெல்லாம் துளைத்தாரோ?'' என்று புலம்பினாள்.

*வெள் எருக்கம் செம் சடையான்
 வெற்பு எடுத்த திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடம் இன்றி உயிர் இருக்கும்
 இடம் நாடி இழைத்த வாறோ
கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
 மனச் சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும் எனக்கருதி உடல் புகுந்து
 தடவியதோ ஒருவன் வாளி

— உயுத்த: இராவணன் வதை: 139.

(அ-ரை.) வெற்பு=மலை, நாடி=தேடி, கள்=தேன், கரந்த=ஒளித்த.

"தேவர்களுக்கும் திக்கு யானைகளுக்கும், பரம சிவனுக்கும் பிரமதேவனுக்கும் திருமாலுக்கும் மற்ற எல்லோருக்கும் மேலான வலிமையுடைய உனக்கு என்றைக்கும் அழிவில்லை என்று நினைத்து ஏமாந் தேன்; நீ ஆவலுடன் செய்த அருமையான தவ மாகிய பெரிய கடலையும், அதன் பயனைப் நீ பெற்ற வரங்களாகிய காப்பையும் அழிக்கவல்ல வீரமுடைய ஒரு மனிதன் இவ்வுலகில் இருக்கிறான் என்று நான் நினைத்தேனோ?"

*தேவர்கரும் திசைக்கரிக்கும் சிவனார்க்கும்
அயனார்க்கும் செங்கண் மாற்கும்
ஏவர்க்கும் வலியானுக்கு என்று உண்டாம்
இறுதி என ஏமாப்பு உற்றேன்
ஆவல்கண் நீ உழன்ற அரும் தவத்தின்
பெரும் கடற்கும் வரம என்று ஆன்ற
காவற்கும் வலியான் ஓர் மானுடவன் உளன்
என்னக் கருதினேனோ!

— உயுத்த: இராவணன் வதை: 242.

என்று இவ்வாறு புலம்பி தன் உயிரை விட்டாள்.

பிறகு விபீஷணன் இராவணனுக்கும் மற்றோர்க்கும் ஈமக் கடன்களை யெல்லாம் செய்து இராம பிரானுக்குத் தெரிவித்தான்.

---

*(அரை) உழன்ற=முயன்ற.

இப்பொழுது இராகவன் இலக்குமணனை நோக்கி "நீ விபீஷணனை அழைத்துச் சென்று பட்டாபிஷேகம் செய்விப்பாய்" என்று கூற அவரும் தேவர்கள் கொண்டுவந்த புண்ணிய தீர்த்தம் கொண்டு அபிஷேகஞ் செய்து முடிசூட்டி வைத்தார்.

அதற்குள் இராமசந்திரன் அநுமானைச் சீதையினிடம் சென்று தான் வென்ற செய்தியைக் கூறும்படி ஏவ, இவரும் மிக்க மகிழ்ச்சியுடன் அசோகவனம் சென்று பாடிக்கொண்டு ஆடலானார். சீதை மிக்க களிப்புற்றாள். அச்சமயத்தில் அநுமார் "இப்பொழுது எனக்கு ஒரு வரம் கொடுக்க வேண்டும்" என்றார். "அது என்ன? என்று அவள் கேட்க," "உன்னை இத்தனை நாள் வருத்திய இக் கொடிய அரக்கிமாரைக் கொல்ல அநுமதி தா" என்றார். அதற்குச் சீதாபிராட்டி "அவர்களுடைய குற்றம் ஒன்றுமில்லை; இதுவரையில் தங்கள் தலைவனை இராவணன் கட்டளைப்படி நடந்து கொண்டார்கள்; இனி நம்முடைய கட்டளைப்படி செய்வார்கள். அடிமைகளைக் கொல்வது தகாது" என்றனள். அதைக் கேட்ட அநுமார் சீதாபிராட்டியின் மேன்மைக் குணத்தை மெச்சினார்.

இது இப்படி இருக்க, இராமபிரான் விபீஷணனை நோக்கி, "சீதையை அலங்கரித்து அழைத்து வா" என்றார். விபீஷணர் சீதையை

வணங்கி இராகவன் ஆணையைச் சொல்ல, " ஐயா! நான் இத்தனை நாள் இங்கிருந்த கோலத்தை என் கணவன் பார்க்கவேண்டும்" என்று சொல்ல, அம்மா! இராமபிரான் உன்னை அலங்கரித்தே அழைத்து வரும்படி கட்டளையிட்டார்" என்று கூற, அதற்கு இசைந்து சீதாபிராட்டி நன்ருக ஆபரணங் களைப் பூண்டு, புட்பக விமானத்தில் ஏறி இராம பிரான் இருக்கும் இடத்தில் விமானத்தினின்றும் இறங்கி அவரைத் தொழுதாள். அப்பொழுது, "எல்லாவுயிர்களிடத்தும் அன்புடைய இராமபிரான், கர்புடைய மாதர்களுக்கெல்லாம் மேலானவளும், பெண்களுக்கெல்லாம் பாதுகாவலாயுள்ளவளும், அழுகுக்கே ஓர் அழகானவளும், புகழுக்கே இருப்பிட மாயுள்ளவளும், தன்னைப் பிரிந்திருந்தும் தன்மேல் காதல் ஒரு சிறிதும் குறையாதவளும், அறக்கடவுள் போன்றவளுமான சீதாதேவியை நன்ருகப் பார்த் தான்."

கற்பினுக்கு அரசினைப் பெண்மைக் காப்பினை
பொற்பினுக்கு அழகினைப் புகழின் வாழ்க்கையை
தன் பிரிந்து அருள் புரி தருமம் போலியை
அன்பின் அத் தலைவனும் அமைய நோக்கினான்.

— உயுத்த : மீட்சிப் படலம் : 60.

ஆனல் அவளை ஆவலோடு வரவேற்காது, அவளுடைய கற்பை உலகத்தோருக்கு தெரிவிப்ப தற்காக, கடினமான குரலில் " ஒரு கொடிய இராக்க தனல் கொண்டுபோகப்பட்டு, இத்தனை நாள்

பகைவர் ஊரில் இருந்தவள், நீ கற்புடைய பெண்ணுய் இருந்தால், இதுவரையில் உன் உயிரை விட்டிருப் பாய்" என்ருர். அப்பொழுது துயரத்தில் ஆழ்ந்த சீதாதேவி, "மாருதி உமது செய்தியை எனக்குச் சொன்னவன், என் செய்தியை உமக்குச் சொல்லவில்லை போலும்; அவன் உமக்குத்தான் தூதனு? எனக்கும் தூதன் அல்லவா? என் கற்பு உமக்கு புலப்படாததனுல், நான் இத்தனை நாள் செய்த தவம் வீணுயிற்று. ஆண் மக்களுக்கு மாதருடைய மனத்தை அறியமுடியாது. ஆதலால் என் உயிரை விட்டுத்தான் என் கற்பை நிலை நிறுத்து வேன்" என்று கூறி, இளைய பெருமாளைத் தான் விழுவதற்காக, ஒரு தீக்குழியை அமைக்கும்படி வேண்டினுள். அவரும் இராமர் அனுமதி பெற்று ஒரு குழியை அமைத்தார். அப்பொழுது சீதை இராமபிரானை வணங்கி, குழியை நெருங்கி "என் மனத்தினுலாவது வாயினுலாவது கற்புடைய பெண் செய்யத்தகாததை எப்பொழுதாவது செய்திருந்தே னேமானுல், தீக்கடவுளே என்னைச்சுட்டு எரித்து விடு"

*மனத்தினுல் வாக்கினுல் மறு உற்றேன் எனில்
சினத்தினுல் சுடுதியால் தீச்செல்வா என்ருள்.

— மீட்சி : 84.

என்று சொல்லித் தீயில் குதித்தாள். குதித்த தனுலே சீதாபிராட்டிக்கு ஒரு தீங்கும் நேரிடாமல்,

* (அ-ரை.) மறு = குற்றம்.

தீக்கடவுளே கொதிக்கலுற்றான். அப்பொழுது அக் கடவுள் சீதாபிராட்டியைத் தன் இருகையாலும் ஏந்தி இராமபிரான் காலடியில் வைத்து, "ஐயா! என்னை ஏன் சுட்டாய்? சீதாபிராட்டியின் கற்புக்கு ஒரு சாக்ஷியும் வேண்டுமோ?" என்றான். இராம பிரான், "நீ இவள் கற்புடையவள் என்று சொல்லு வதனால் நான் இவளை அங்கீகரிக்கின்றேன்" என்றார். எல்லோரும் மகிழ்ந்தனர்.

இச்சமயத்தில் பிரமன், பரமசிவன் முதலான தேவர்கள் மனங்களிப்புற்றுத் தசரதனை பூவுலகத் துக்கு அனுப்ப, அவரை இராமர் முதலானோர் வணங்க, அவர் மகிழ்ந்து, "இராமா! உனக்கு வேண்டிய வரம் கேள்" என்றார். அதற்கு இராம பிரான் "கைகேயியை மனைவியாகவும், பரதனைப் பிள்ளையாகவும் அங்கீகரிக்க வேண்டும்" என்று கேட்டார். அந்த வரம் தந்து, எல்லோரையும் வாழ்த்தி, அவர் பிரம்மலோகம் சேர்ந்தார்.

இராமபிரான் இறந்த வானரங்களெல்லாம் உயிர் பெற்று எழுந்திருக்க வேண்டும் என்று தேவர்களை வரம் வேண்ட, அவர்கள் வரங்கொடுக் கவே, கோடிக்கணக்கான வானரங்கள் எழுந்தன.

பிறகு விபீஷணர் புட்பக விமானத்தைக் கொண்டுவர, அதில் எல்லோரும் ஏறினர். இராம பிரான் குரங்குகளை யெல்லாம் மனிதவடிவம் கொள்ளும்படி செய்தார். விமானம் அயோத்தி

நோக்கி வடக்கே செல்லும்போது பெருமாள் சீதா பிராட்டிக்குக் கீழே தோன்றும் இடங்களை யெல்லாம் காட்டி வந்தார். கிட்கிந்தை யடைந்தபோது இராமனை நோக்கி சீதை, "இத்தனை ஆண் மக்களுடன் ஒரே பெண்ணாக நான் அயோத்திக்குச் சென்றால், என் பெண்மைக்கு இழிவாகும். ஆதலால் இங்கிருக்கும் பெண் குரங்குகளை யெல்லாம் அழைத்துச் சென்றால் நன்றாயிருக்கும்" என்றாள். அப்படியே இராமபிரான் ஆணையால் ஆயிரக்கணக்கான பெண் குரங்குகள், மனித வடிவம் பெற்று விமானத்தில் ஏறின. அவற்றுடன் மறுபடியும் ஆகாயத்தில் கிளம்பி இராமபிரான் வரவை எதிர்பார்த்திருக்கும் பரத்துவாச முனிவர் ஆசிரமத்தில் இறங்கிற்று. அம் முனிவர் எல்லோரையும் வரவேற்று, ஆசிகூறி, இராமனைப் புகழ்ந்தார். 'இராமா! விராதனையும், கரனையும், மாயமானான மாரீசனையும், வலிமை மிக்க கவந்தனையும், ஏழு மராமரங்களையும், வாலியின் மார்பையும், சுறா மீன்களையுடைய கடலையும், இராவண கும்பகர்ணருடைய பலத்தையும் ஒரே அம்பால் அழித்து உலகத்தைக் காப்பாற்றினாய்" என்று முகமன் கூறினார்.

*விராதனும் கரனும் மானும் விறல்கெழு கவந்தன் தானும்
மராமரம் ஏழும் வாலி மார்பமும் மகர நீரும்
இராவணன் உரமும் கும்பகர்ணனது ஏற்றம் தானும்
அராவரும் பகழி ஒன்றால் அழித்த உலகு அளித்தாய் ஐயா.

— உயுத்த : மீட்சி : 191.

அ-ரை) விறல் = வலி; வீரம், மகரம = ஒருமீன், உரம் = மார்பு; வலி.

இவ்வாறு முகமன் கூறி "இராமா! உனக்கு வேண்டியவரம் கேள்" என, "குரங்குகள் இக் காட்டில் எங்குச் சென்றாலும் 'காய், கனி, கிழங்கு, தேன் முதலியன அளவின்றிக் கிடைக்கவேண்டும்" என, அப்படியே அருள் செய்தார். எல்லோரும் விருந்து உண்டு களித்து இருக்கும்போது இராம பிரான் அநுமாரை அழைத்து, "நீ விரைவில் சென்று நான் திரும்பி வந்ததைப் பரதனுக்குத் தெரிவித்து இக்கணையாழியையும் காட்டுவாய்" என்று சொல்ல, அவர் உடனே கிளம்பினார்.

இப்பால், இராமபிரானைச் சித்திரகூடத்தில் பிரிந்த பரதாழ்வான் பாதுகையைத் தலையில் சுமந்து அயோத்திக்கு வெளியில் உள்ள நந்திக் கிராமத்தில் பாதுகா பட்டாபிஷேகம் செய்து, அழுத கண்ணுடன் காய் கனிகளைத் தின்று பதினன்கு வருடம் கழித்து அண்ணன் எப்பொழுது வருவானே என்று எதிர்பார்த்திருந்தான். பதினன்கு வருடங்கள் கழிந்தும் வராதது கண்டு சத்ருக்னனைக் கூப்பிட்டு, "நம்முடைய அண்ணன் இன்று வந்திருக்க வேண்டும். வராததனால் நான் தீயில் குதித்து இறப்பேன். நீ இராச்சியத்தை ஆள்" என்றான். அதற்கு மிகவும் வருந்திய சத்ருக்னன் இவ்வாறு முறையிட்டான். "இப்பூமியை ஆளும் உரிமையைப் பெற்றும், அரசு ஆளாமல் காட்டை ஆளுவேன் என்று போன இராமனைப் பாதுகாக்க அவன் பின்னே போனவன் ஒரு தம்பி (இலக்குமணன்); போனவர்கள் இந்த

நாளில் திரும்பி வருவோம் என்று குறிப்பிட்ட தவணை நாள் வந்தும், அவர்கள் வாராததால் நான் உயிரை விடுவேன் என்று துணிந்தவனும் ஒரு தம்பி (பரதன்); அப்படியிருக்க, உங்களைப் போன்ற தம்பி யான நான் மாத்திரம் வெட்கம் இல்லாமல் அரசு ஆள்வேனோ? அரசு ஆள்வது அவ்வளவு இனிமை பொருந்தியதோ? இது என்ன ஆச்சரியம்!" என்றான்.

*கான் ஆள நிலமகளைக் கைவிட்டு
போனானைக் காத்து பின்பு
போனானும் ஒரு தம்பி போனவர்க்கள்
வரும் அவதி போயிற்று என்று
ஆனாத உயிர் விட என்று அமைவானும்
ஒரு தம்பி அயலே நானாது
யானாம இவ்வரசு ஆளவ்வென
என்னே இவ்வரசாட்சி இனிதே அம்மா.

— மீட்சி : 223.

பரதன் இப்படி வருந்திய சத்ருக்னனுக்கு ஆறுதல் கூறி ஒரு தீக்குழி அமைவித்தான். அச் செய்தியைக் கேட்ட கோசலை மிகப் பரிதவித்து ஓடி வந்து "பரதா! என்ன செய்யத் துணிந்தாய். எல்லாம் விதியினால் முடிந்தது. ஆண்மக்களில் சிறந்த வனே! எத்தனை கோடி இராமர்களானாலும் உனக்குச்

* (அரை) கான் — காடு, அவதி — தவணை, அயலே — அருகில்

சமானமாவார்களா? புண்ணியமே ஓர் உரு வெடுத்தது போன்ற நீ இறந்தாயானால் இப்பூமி யிலும் வானத்திலும் இருக்கும் உயிர்கள் வாழுமோ?" என்றாள்.

*எண்ணில கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின் அருளுக்கு அருகு ஆவரோ
புண்ணியம் எனும் நின் உயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ.

— உயுத்த : மீட்சி : 232

என்று இவ்வாறு பரதனைப் புகழ்ந்து அவனை இறக்காதிருக்க வேண்டினாள். அவள் சொல்லைப் பரதன் மறுத்து, "நான் இறந்துதான் இராம னிடத்தில் எனக்குள்ள அன்பைக் காட்டுவேன்" என்று தீக்குழியினிடம் சென்றான். அச்சமயத்தில் அநுமார் ஒரு பிராமண வேடம் பூண்டு அங்கே வந்து குதித்து, "இராமர் வந்து விட்டார்" என்று கூவித் தீயை அவித்து விட்டார். பின்பு பரதனை வணங்கி, கணையாழியைக் காட்டி, சித்திரகூடத்தில் பிரிந்தது முதல் அன்றுவரை நடந்த கதை முழுவதையும் கூறி இராமபிரான் கோதண்டத்தை வளைத்து அம்புகளை எய்து, இராவணனுடைய தம்பியான கும்பகர்ண னுடைய கைகளையும், கால்களையும் மற்ற உறுப்பு களையும் அறுத்து, அவனைக் கொன்று, இராக்கத சேனையை அடியோடு அழித்து, கைலாயத்தை எடுத்த

* (அ-ரை) அண்ணல் = சிறந்த ஆண்மகன்.

இராவணனுடைய தோளையும், திக்கஜங்களுடைய தந்தங்கள் அழுந்தப் பெற்ற மார்பையும், பத்துத் தலைகளையும் கீழே தள்ளி அவனையும் கொன்று தேவர்களுடைய துன்பத்தைத் தீர்த்தான்." என்றார்.

*மலையினை எடுத்த தோளும்
    மதமலை திளைத்த மார்பும்
தலை ஒரு பத்தும் சிந்தி தம்பி தன்
    தோளும் தாளும்
கொலைத் தொழில் அரக்கராயோர்
    குலத்தொடு நிலத்து வீழச்
சிலையினை வளைவித்து ஐயன் தேவர்கள்
    இடுக்கண் தீர்த்தான்.

— உயுத்த: மீட்சி 294

இவ்விதமாக இராமபிரானுடைய கதையைச் சுருக்கமாக எடுத்துக்கூறவே, பரதாழ்வான் ஆனந்த பரவசனாய். "ரிஷிகளைத் தொழுதான்; அரசர்களைத் தொழுதான்; தாதியரைத் தொழுதான்; தன்னைத் தானே தொழுது கொண்டான்; எதையும் அறிந்து கொள்ளும் சக்தியற்றவனாய், சில சமயங்களில் உட்காருவான்; சிறிது நேரம் நிற்பான்; அன்பு அதிகரித்தால் கள்ளின் தன்மையை அடையும்போல் இருக்கின்றது."

---

(அ·ரை) மதமலை = யானைகள், இடுக்கண் = துன்பம்.

வேதியர் தமைத் தொழும் வேந்தரைத் தொழும்
தாதியர் தமைத் தொழும் தன்னைத் தான் தொழும்
ஏதும் ஒன்று உணர்குறுது இருக்கும் நிற்குமா
காதல் என்றதுவும் ஓர் கள்ளின் தோற்றிற்றே!

— மீட்சி : 253.

சிறிது நேரத்திற்கெல்லாம் மனம் தெளிந்து, "இராமபிரானை வரவேற்பதற்கு எல்லோரும் புறப் படுங்கள்" என்று யானைமேல் வள்ளுவனால் முரசு அறைவித்துப் புறப்பட தம்பியும், தாயரும் உடன் புறப்பட்டார்கள். கங்கையின் அருகே செல்லும் போது இராமபிரானும் அவரைச் சேர்ந்த குகனும், மற்றோரும் விமானத்தில் வருவதைக் கண்டனர். விமானம் இறங்கியதும் பரதன் இராமபிரானை வணங்கினான். பெருமாள் அளவற்ற சந்தோஷத்தை அடைந்து அவனைத் தழுவி, பின் எல்லோருடனும் உரையாடி, வந்தவர்கள் எல்லோரையும் விமானத்தில் ஏற்றிக்கொண்டு நந்திக் கிராமத்தை அடைந்தார்.

நந்திக் கிராமத்தில் இராமபிரானும், இளையபெரு மாள் முதலானோரும் சடையை நீக்கி அலங்கரித்துக் கொண்டு தேர் ஏறி அயோத்திக்குச் சென்றார்கள். சீதாபிராட்டி வானர மகளிர் சூழ விமானம் ஏறி அயோத்தியை அடைந்தாள். இவர்கள் வரவைக் கண்ட அயோத்தி மக்கள் கட்குடித்தவர்கள் போல் களிப்பாலே தலைதடுமாறி ஆடலுற்றார்கள். வசிட்ட முனிவர் பட்டாபிஷேக நாள் குறித்தார். சுக்ரீவன் ஆணையால் அநுமார் உலகெலாம் திரிந்து அபிஷேக

தீர்த்தம் கொண்டு வந்தார். பிரமதேவன் கட்டளையிடத் தெய்வத்தச்சனை விசுவகர்மா பட்டாபிஷேக மண்டபம் ஒன்று அமைத்தான். அரசர்கள் சரயு நதியினின்று பொன் குடங்களில் குளிர்ந்த நீரைக் கொண்டு வந்தார்கள். தேவர்கள் முதலிலும், பிறகு சுக்ரீவன் முதலானோரும் முறையே அபிஷேகம் செய்தார்கள்.

இராமபிரானும் சீதாபிராட்டியும் சிங்காதனத்தில் வீற்றிருந்த காட்சி எப்படி இருந்ததென்றால், "ஒரு மரகத மலையின்மேல் பல செந்தாமரை மலர்கள் பூத்து, அதன்மேல் கங்காநதியின் அலைகள் வீசிய திவலைகளால் நனைய, பக்கத்தில் காதுகளில் அணிந்த குண்டலங்கள் வரை நீண்ட வேல் போன்ற கண்களையுடைய ஒரு மயில் உட்கார்ந்து இருந்தது போல் தோன்றிற்று. இந்த அழகுமிக்க காட்சியைக் கண்டவர்கள் பிறப்பு இறப்பு என்னும் தீராநோயினின்றும் வீடுபெற்றார்கள்."

மரகத சயிலம் செந்தாமரை
மலர்க்காடு பூத்து
திறை ஏறி கங்கை வீசும் திவலையால்
நனைந்து செய்ய
இரு குழை தொடரும் வேல் கண்
மயிலொடும் இருந்தது ஏய்ப்ப,
பெருகிய செல்வம் கண்டார்
பிறப்பு எனும் பிணிகள் தீர்ந்தார்.

— உயுத்த : திருமுடிசூட்டு : 38.

(அ-ரை) சயிலம் = மலை, திரை = அலை, திவலை = துளி, குழை = குண்டலம், ஏய்ப்ப = போல, பிணி = நோய்.

இப்படி அழகுபெற இருவரும் சிங்காதனத்தில் வீற்றிருக்கையில் வசிட்ட மகாமுனிவரும், மற்ற ஞானிகளும் கட்டளையிட, அதன்படி சுமந்திரன் முதலானோர் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பொருள்களைக் கொண்டுவந்து அருகில் வைத்தனர்.

அப்பொழுது, "சிங்காதனத்தை அநுமார் தாங்கவும், அங்கதன் உடைவாளை ஏந்தவும், பரதன் வெண் கொற்றக் குடையைப் பிடிக்கவும், இலக்குமண சத்ருக்னர் இருபக்கத்திலிருந்து சாமரம் வீசவும், வாசனை பொருந்திய கூந்தலையுடைய சீதாதேவி பக்கத்தில் வீற்றிருக்கவும், திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் மரபில் தோன்றிய முன்னோர்களில் ஒருவர் கிரீடத்தைக் கொடுக்கவும் அதை வாங்கி வசிஷ்ட மகரிஷியே இராமபிரானுக்கு அதைச் சூட்டினர்."

* அரி அணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த,
பரதன் வெண் குடை கவிக்க
இருவரும் கவரி வீச
விரை செறி குழலி ஓங்க
வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபு உளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே
புனைந்தான் மௌலி.

— உயுத்த : திருமுடி சூட்டுப்படலம் : 38.

---

* (அ-ரை) அரி = சிங்கம், கவரி = சாமரம், விரை = வாசனை, மௌலி = கிரீடம்.

அப்படித் தசரத குமாரன் முடி சூடவே மூவுலரும், தேவர், முனிவர், மனிதர்களும் மகிழ்ச்சியை அடைந்தார்கள். பெரிய தூண்களையுடையதாகிய அழகிய மண்டபமதனில், பொன் மயமான சிங்காதனத்தின்மேல், இராமபிரானும் சீதாபிராட்டியும் வீற்றிருந்து அரசுபுரிந்தார்கள். அந்தணருக்குத் தானம் கொடுத்து, சுக்ரீவன் முதலான எல்லோருக்கும் பரிசு கொடுத்து, இறுதியில் அனுமானைப் பார்த்து, "நீ செய்த உதவிக்கு ஒரு பிரதி உபகாரமும் இல்லை" என்று சொல்லி அவரைத் தழுவினர். (அதாவது, தன்னையே கொடுத்தார்) பிறகு ஒரு விலையில்லா முத்து ஆரத்தை சீதாதேவியின் கையில் கொடுக்க அவள் அதை அனுமாருக்குக் கொடுத்தாள்.

அதன பிற்பாடு, இராமன் விபீஷணன், சுக்ரீவன், குகன் முதலானோர்க்கு விடை கொடுத்து அனுப்பினர். அனுப்பிவிட்டு, தன்னை வணங்குபவருடனும் தனக்குத் துணையாய் நிற்பாருடனும், இவ்வுலகத்தார் நன்மைக்காக மனு நெறியில் சொல்லியபடி செங்கோல் செலுத்தித், திருமகளும் புவிமகளும் மகிழ்ச்சி அடையும்படி, இவ்வுலகத்து வாழும் உயிர்களுடைய குறைகளையெல்லாம் தீர்த்து அவைகளைப் பாதுகாத்து வந்தார்.

* ஐயனும் அவரை நீக்கி
　　அடி தொழு துணைவரோடும்
வையகம் முழுதும் செங்கோல்
　　மனு நெறி முறையில் செல்ல
செய்ய மா மகளும் மற்றுச்
　　செகதல மகளும் சற்றும்
நையும் ஆறின்றிக் காத்தான்
　　நால்நிலம் பொறைகள் தீர்த்தே.

— உயுத்த : விடைகொடுத்த : 36.

இவ்வாறு இராமபிரான் வேதங்கள், மனுநீதி முதலியவைகளில் சொல்லியவாறு அறத்தின் வழியே நின்று, உயர்ந்தோன், தாழ்ந்தோன், பணக்காரன், ஏழை என்ற பக்ஷபாதமின்றி எல்லோரிடத்திலும் ஒரேவிதமாய் நியாயத்தைச் செலுத்தி, மாதம் மும்மாரி பெய்ய, உண்டி, உடை, உறைவிடம், வரும்படி முதலியவைகளில் ஒரு குறைவுமில்லாமல் ஆண், பெண், குழந்தைகள், விலங்குகள் முதலிய எல்லாம் மகிழ்ச்சியுடன் பல்லாண்டு வாழ, புலியும் மானும் ஒரு துறையில் நீர் உண்ண, செங்கோல் முறைமையில் "இராம இராச்சியம்" என்னும்படி, பதினோராயிர வருடகாலம் அரசு செலுத்தி வந்தார்.

இப்படிப்பட்ட நல்ல இராமகதையை முழுவதும் எழுதினவர்களும், கொண்டாடியவர்களும், கற்றவர்

* (அ-ரை.) நையும்=வருந்தும, நா=அழகு, பொறை=பாரம்;சுமை உம்பர்=மேல் உலகம், ஏத்தி=இறைஞ்சி=தொழுது, அம்பரம்=கடல், அனந்தர்=தூக்கம்.

களும், அக்கதையைச் சொல்வோர்க்கு மிக்க வெகுமதி கொடுத்துக்கேட்போரும், ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இந்த உலகத்திலேயே அரசருக்கும் அரசராய் வாழ்ந்து, தம்முடைய தீவினைகளெல்லாம் ஒழிந்து மேலான பரமபதத்தை அடைவார்கள்.

## — சிறப்புப் பாயிரம் —

இனைய நல் காதை முற்றும் எழுதினோர்
வியந்தோர் கற்றோர்
அனையது தன்னை சொல்வோர்க்கு
அரும் பொருள் கொடுத்துக் கேட்டார்
கனைகடல் புவியின் மீதே காவலர்க்கு
அரசாய் வாழ்ந்து
வினையமது அறுத்து மேலாம்
விண்ணவன் பதத்தில் சேர்வார்.

## — சிறப்புப் பாயிரம் —

நாடிய பொருள் கைகூடும் ஞானமும்
புகழும் உண்டாம்
வீடியல் வழியது ஆக்கும் வேரியங் கமலை
நோக்கும்
நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய
வாகை
சூடிய சிலை யிராமன் தோள்வலி
கூறுவோர்க்கே.

சுபம்

இராமாயணச் சுருக்கம் முற்றிற்று.